# வரவேற்பு

இத்தனை நாளும் சிலருக்குத் தெரிந்து பலருக்குத் தெரியாதிருந்த "வியாசன்" யாரென்பதை இனியும் உருமறைப்புச் செய்ய முடியுமா? முடியாது. ''உலைக்களம்'' என்ற மகுடத்தில், வியாசனென்ற மறுநாமத்தில், "விடுதலைப்புலிகள்" என்ற தமிழீழ விடுதலைப்புலிகள் அமைப்பின் அதிகாரபூர்வ ஏட்டில் பத்துவருடங்களுக்கு மேலாக நானே எழுதிவருகின்றேன்.

''நீர்தானே வியாசனென்பவரும்'' என்று வினவிய பலருக்கு இல்லையென்றே சொல்லியுள்ளேன். நானே வியா னென்று தெரிந்து கொண்டும் என்மூலம் உறுதிப்படுத்தக் கேட்டவருக்கும் ஆ ன்றோ, இல்லையென்றோ கூறாமல் ஒரு நமட்டுச்சிரிப்புடன் நகர்ந்துள்ளேன். இந்தவருடமுற்பகுதியில் புலம்பெயர்ந்து நம் உறவுகள் அதிகம் வாழும் ஐரோப்பிய நாடுகள் பலவற்றுக்குச் சென்ற போதும் "வியாசன் உங்களின் புனைபெயர் தானே" எனக்கேட்ட சொந்தங்களுக்குக் கூட ஏதும் சொல்லாமலே திரும்பினேன். எல்லோரும் என்னை மன்னித்தருள்க.

சொந்த நாமத்தில் நானெழுதும் கவிதைகளை விட வியாசனென்றெழுதும் உலைக்களம்தான் உலகெங்கும் அதிகம் அறியப்படுகிறது. உலைக்களத்து வரிகளை ஸ்ரீலங்கா அரசின் அதியுயர்பீடங்கள் மொழிபெயர்த்து, சூத்திரங்களை விடுவிக்கும் பாணியில் தலைகளைப் பிய்த்து சீத்தலைசாத்தராகியுள்ளனர். மந்திரிசபையின் மந்திராலோசனை மையத்தில் கூட விவாதித்திருக்கின்றனர். விடுதலைப்புலிகளின் வெற்றிகரமான தாக்குதல்களின் முன்னும் பின்னும் உலைக்களம் அரசின் இராணுவப் புலனாய்வுக் கட்டமைப்பினால் அலசப்பட்டுள்ளது. "வியாசன் முன்னரே கூறியுள்ளார்'' என நாளேடுகள் கட்டமிட்ட பெட்டிச்செய்தியாக உலைக்களவரிகளை மறுபிரசுரம் செய்துள்ளன. சிங்கள, ஆங்கிலத் தினசரிகள் கூட தங்கள் தேவை கருதி உலைக்களத்தை மொழிமாற்றம் செய்து பிரசுரித்துள்ளன. புலம்பெயர்ந்து வாழும் நம்மவர் மத்தியிலும் உலைக்களமே மிகப்பிரபலமும், அதிகம் வாசிக்கப்படுவதுமான பத்தியாக இன்றுவரை இருக்கிறது. புலம்பெயர்ந்த நம்மவரின் ஏடுகள், இதழ்கள், வானொலிகள், தொலைக்காட்சிகள் அனைத்துமே உலைக்களம் விடுதலைப்புலிகளில் வெளியானதும் மறுநாளே தத்தம் ஊடகங்களில் வெளியிடுமளவுக்கு இந்த உலைக்களத்துக்கு எத்தனை வரவேற்பு.

எம் தேசியத் தலைவர் கூட "நான் உலைக்களத்தை வாசித்தபின்னரே மறுபக்கங்களை வாசிக்கத் தொடங்குவேன்'' என அடிக்கடி கூறுவதை பலர்

அறிவர். அதுமட்டுமல்ல உலைக்களம் வெளிவந்த உடனேயே தன் தளபதிகளை அழைத்துப் பக்கத்தில் அமர்த்தி விட்டு தானே உரத்து வாசித்து, பூடகமான இடங்களில் பொழிப்புரையும் செய்வது அவருக்கு உற்சாகம் தரும் விடயங்களில் ஒன்று. எமது அமைப்பின் அரசியல் ஆலோசகர் கலாநிதி.அன்ரன் பாலசிங்கம் அவர்களுக்கு பிரசுரத்துக்கு முன்னதாகவே நானே உரத்து வாசிக்க வேண்டும். அப்போதுதான் அவருக்குப் பத்தியப்படும். நான் வாசிக்க, வாசிக்க அவர் தன் சகதர்மினி அடேலுக்கு புரியாத இடங்களை ஆங்கிலத்தில் புரியவைத்தபடி குலுங்கிக் குலுங்கிச் சிரிக்கும் போது எழுதியதைவிட அதிகம் மகிழ்ச்சியேற்படும் அப்போது. தமிழீழ அரசியல்துறைப் பொறுப்பாளர் தம்பி தமிழ்ச்செல்வன் உலைக்களம் வெளிவந்ததும் "அந்த மாதிரி அண்ணை" என வழமையான தன் மலர்ந்த சிரிப்புடன் மகிழ்ச்சி தெரிவிப்பார். எமது அமைப்பின் புலனாய்வுத்துறைப் பொறுப்பாளர் பொட்டம்மான் (ச.பொட்டு) இந்த உலைக்களங்களுக்குப் பின்னால் அதிகம் இருக்கிறார். பலதை எழுதத்தொடங்கமுன்னும், சிலதை எழுதிய பின்னும் அவருடன் "பேசிப்பறைந்து" மறுசீரமைத்துள்ளேன். நான் அறியாத பக்கங்களை அவர் அடையாளம் காட்டுவதும் உண்டு.

எமது போராளிகள் மத்தியில் உலைக்களம் ஏற்படுத்தும் தாக்கங்களுக்கு நிகராக வேறு எந்த எழுத்தும் கிடையாது. ஒரு போராளி ஒரு நாள் "அண்ணை உங்களது உலைக்களத்தை வாசிக்கும் ஒவ்வொரு முறையும் திரும்பத் திரும்ப என்னைத் தீயில் இறக்கிக்கொள்வேன். என் உணர்வுகள் மாறாமலிருப்பதற்காக" என்றான். வேறென்ன விருது வேண்டும் எனக்கு.

இன்றும் எமது விடுதலைப் போராட்டம் தளராத தலைமையில், வழுவாத வழித்தடத்தில் அதன் திசைவழித்தெளிவுடன் முன்னேறிக்கொண்டிருக்கிறது. இந்தப் பாய்ச்சல் வேகத்துக்குப் பக்கபலமாகத்தான் உலைக்களத்தை எழுதிக்கொண்டிருக்கிறேன். சமகால அரசியலைச் சார்ந்திருப்பதால் அரசியல் அரங்கில் ஆடவந்த எவரையும் உலைக்களம் விட்டுவைக்கவில்லை. சத்தியத்தின் அளவுகோலும், விடுதலைக்கானதென்ற எடுகோளுமே என் படைப்பின் தவம். இன்று விரும்பியோ விரும்பாமலோ எம்முடன் காலம் இணைத்து விட்ட சிலரைக்கூட கிஞ்சித்தும் தயவுதாட்சணியமற்று உலைக்களத்தில் வார்த்தைகளால் குத்தியுள்ளேன். அன்றெழுதிய சத்திய வசனங்களை இன்று எடுத்துவிடுவதோ, மாற்றியெழுதுவதோ காலத்துக்குச்செய்யும் துரோகமென்பதால் "அப்படியே இருக்கக் கடவது " என்ற வரம் நல்கியுள்ளேன். உலைக்களத்தை வாசிக்கத்

தொடங்கமுன் அதன் கீழேயுள்ள ஆண்டு, மாதம், தேதிகளைப் பார்த்து அந்தந்தக் காலத்தில் எம் போரியல், அரசியல் அரங்குகளில் என்ன நடந்தேறின என்றறிந்தபின் வாசிக்கத் தொடங்கினால் முடிச்சுக்கள் அவிழ்ந்து கொள்வதுடன், என் உணர்வுகளையும் புரிந்து கொள்ள முடியும்.

உலைக்களத்தை தொகுத்து நூலாக வெளியிட அனுமதியளித்த தேசியத் தலைவருக்கு என் அன்பும், நன்றியும் சென்றடைவதாக. என்மீதும், என் எழுத்து மீதும் தங்கள் எண்ணத்தை எழுத்தாக்கி நூலுக்களித்த அரசியல்துறைப் பொறுப்பாளர் சு.ப.தமிழ்ச்செல்வனுக்கும், புலனாய்வுத்துறைப் பொறுப்பாளர் பொட்டம்மானுக்கும் என் நன்றி. உலைக்களத்தை நான் எழுதத்தொடங்கிய காலம் தொட்டு அதன் பலத்துக்கு வலிமை நல்கிய அரசியல் ஆலோசகர் 'பாலா அண்ணருக்கும்' 'அடேல்அன்ரிக்கும்' என் பணிவு. விடுதலைப் புலிகள் ஏட்டின் ஆசிரியர் பீடத்தைச் சேர்ந்த என்னினிய நண்பன் சு.ரவிக்கும், தம்பி அன்புமாறனுக்கும் என் அன்பு. இந்நூலை இத்தனை வசிய அழகில் வடிவுறச் செய்து வெளியிடும் தமிழ்த்தாய் வெளியீட்டகப் பொறுப்பாளர் என்னினிய இளவல் அ.அன்ரனிக்கும், நிலா பதிப்பகத்தைச் சேர்ந்த தம்பியர், தங்கையர் அனைவருக்கும் நன்றி. நூலுக்கான அட்டையின் புகைப்படத்தையும் அதன் வடிவமைப்பையும் தமிழகத்திலிருந்து செய்தனுப்பிய உலகறிந்த ஓவியர் ட்ரொட்ஸ்கி மருதுவுக்கு அன்புரைத்து நன்றி. கூடவே மகிழனுக்கும். எல்லாவற்றுக்கும் மேலாக என் எழுத்துத் தபசு கலைந்துவிடக்கூடாது என்பதற்காக குடும்பப்பாரத்தின் கொடும்சுமையை தன் ஒற்றைத் தோளிலே தாங்கி, வாழ்வின் வலி ஏதென்று நானறியாது இத்தனை காலமும் ஒரு குழந்தையாகவே என்னைப் பராமரித்து வளர்க்கும் என் துணைப்பேடு ஸ்ரீரஞ்சினிக்கும், என் பிள்ளைகளுக்கும் நன்றியைத் தவிர கொடுப்பதற்கு வேறென்னவுண்டு என்னிடம்?. இறுதியாக இலக்கியவாதிகளுக்கு உரத்தொன்று உரைக்கின்றேன். உள்ளே உள்ளன கவிதைகள் அல்ல. உணர்வின் வரிகளே நிழலை நிஜமெனக் கருதி நிறுக்காதீர். என் கவிதைகளுடன் விரைவில் உங்கள் முன் ஆஜராவேன். அப்போது விசாரணையை தொடங்குங்கள். அதுவரை அனைவருக்கும் அன்பு சொல்லி விடைகொண்டேன். தற்காலிகமாக.

"புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்"

*அன்புடன்*
*புதுவை இரத்தினதுரை*
*புத்தூர், கிழக்கு*
*புத்தூர்*
*15-07-2003.*

# வாழ்த்து

கவிதை எழுத வேண்டுமென்ற ஆசை நிறையப்பேருக்கு உண்டு. எழுதுகிறார்கள் ஆனால் மிக மிகச் சிலரால் தான் நல்ல கவிதைகளை எழுத முடிகிறது. எவ்வளவோ நிறையப் படித்தவர்களுக்கும் கவிதை இலக்கணத்தைக் கரைத்துக் குடித்த பண்டிதர்களுக்கும் கூட நல்ல கவிதை என்பது வருவதில்லை.

நல்ல கவிதை எழுதவருவது ஒரு இயல்பான கொடையென்றுதான் சொல்ல வேண்டும். ஒரு நல்ல கவிதையில் வாசகர்களின் மனதைத் தொடுகின்ற கருத்து இருக்க வேண்டும். அதைச் சொல்லும் விதத்தில் சுவை இருக்கவேண்டும். தேவைக்கேற்ற சொற்கள் வந்து விளையாட வேண்டும்.

ஈழத்தில் புதிதாக ஒரு நல்ல கவிஞரைக் காணக்கூடியதாக இருக்கின்றது. விடுதலைப்புலிகள் இதழில் அவருடைய கவிதைகளைக் காணலாம்.

அவருடைய பெயர் **"வியாசன்".**

அவருடைய ஒரு கவிதையைப் படித்தவுடனேயே "ஆகா ஒரு நல்ல கவிஞன்" என்று அவரை இனம்கண்டு விடலாம். கடந்த ஜனவரி மாத "விடுதலைப்புலிகள்" இதழிலும் அவருடைய ஒரு கவிதை வெளிவந்திருக்கிறது. கவிதையின் பெயர் வாய்க்குள் நுளையாத மிக நீளமான பெயர் "கசெற்றா லுபுஸ்கா சாறே நைசா மொஸ்கோ போகலாம் வாடா ராசா" தலையங்கம் எப்படியிருந்தாலும் கவிதை நெஞ்சைத் தொடுகிறது.

விடுதலைப்புலிகள் இதழைத் தேடிப் பிடித்து இந்தக் கவிதையைப் படியுங்கள். ஒருமுறை படித்தவர்களும் திரும்பத் திரும்பப் படியுங்கள். படித்துச் சுவைத்து நெஞ்சு நிறைய வேண்டிய கவிதை இது. விரிவுரை செய்து விளக்கமுடியாது.

ஒரு இரகசியம்:

இந்தக் கவிஞன் வியாசன் இருக்கிறாரே இவர் ஏற்கனவே ஈழத்தின் புகழ்வாய்ந்த ஒரு கவிஞனின் புதுப்பிறவிதான். இவர் எப்படி ஒளித்து விளையாடினாலும் இவரது கவிதைகளே அவரைக் காட்டிக் கொடுத்து விடுகிறது.

*தி.ச.வரதராசன் (வரதர்),*
*"அறிவுக்களஞ்சியம்",*
*இதழ் 27,*
*1995.*

# பந்தி

புதுவை இரத்தினதுரை



# மூத்த ஒரு குடிநிலம்

வெறும் சடப்பொருளான மண்ணுக்காக
எத்தனை சாவுகள்?
ஒருவரை ஒருவர் புரிந்து கொள்வதற்கு
ஊடகமான மொழிக்காகவா
இத்தனை மரணங்கள்?
இப்படி அங்கலாய்ப்போர் இருக்கின்றனர்.
இந்தப் போரினால் இறந்து போனவர்களுக்குள்ளே
எத்தனை "பாரதிகள்"
எத்தனை "மக்சிம் கார்க்கிகள்"
எத்தனை "டால்ஸ்டாய்கள்"
எத்தனை "மார்கோனிகள்"
இன்னும்
"ஐசாக் நியூட்டன்கள்"
"மேரிகியூரி" அம்மைகள்
எத்தனைபேர் இருந்தார்களே?
அத்தனை பேரும் அழிந்துவிட்டார்களே!
இப்படி மூக்குநீர் சிந்தி
முட்டைக் கண்ணீர் வடிப்போருண்டு.
விரிந்த இந்த உலகமே
மனிதன் வாழ்வதற்காகத்தானே
இதில் தமிழனுக்குத் தனிநாடு வேண்டுமா?

இப்படிக் கேட்போர் இன்றும் இருக்கின்றனர்.
கல்தோன்றி மண் தோன்றாக் காலத்துக்கு
முன்தோன்றியது தமிழென்றால்,
அந்த முதற் தமிழன்
காலெடுத்து நடந்த நிலம் எது?
அவன் மலம் கழித்துவிட்டு கழுவியது எதனால்?
இப்படி அங்கதம் கமழ ஆரவாரிப்போர் உண்டு.
எல்லாவற்றையும் சேர்த்துக் கோர்த்தால்.....
இவர்கள் எழுப்புவதும்
எதிரொலிப்பதும் என்ன?
சரியாக நிலம் வெளிக்காத 'இளம்காலைப் பொழுதுகள'
பகலாகாது ;இரவானது கொடுமையாம்.
சரி,
அப்படியே இருந்துவிட்டுப் போகட்டும்.
ஆனால்...
'உயிர்ப்புடன் பிறந்தவையெல்லாம் போராடுகின்றன'
இந்தத் தத்துவம்
இவர்களுக்கு மட்டும்
புதைந்துபோன செப்பேடுகள் ஆனது. ஏன்?
போராட்டம் பூப்பறிக்கும் வேலையென்று
இவர்களுக்கு பாடம் கற்பித்த பரமபிதா எவன்?
குருதி சொரியாது உரிமை பெற்றதுக்கு
ஒரு உதாரணம் சொல்லட்டும் பார்க்கலாம்.
'தமிழீழம்'
இவர்களுக்கு கனவாக இருக்கலாம்.
கைகளில் எட்டாத வானமாக இருக்கலாம்.
போராடும் எங்கள் மக்களுக்கு
கையள்ளி மகிழும் காலடி மண்தான்.
எட்டிப்பிடிக்கக்கூடிய தாயின் மடிதான்.
விரிந்த காலுடைய 'கும்பிடு பூச்சிகளான'
இவர்களுக்கு
ஆபிரிக்கா அத்தை வீடாகவும்,
அமெரிக்கா அக்கா வீடாகவும் இருக்கலாம்.
எங்கே, இந்தச் சர்வதேச வாதிகள்
அத்தை வீட்டுக்குள்ளே...
அனுமதியின்றி நுழையட்டும் பார்க்கலாம்?
இவர்களுக்கு
உலகம் ஒரே கூரையின் கீழ் உறங்குகிறதாம்.

ஆனால்..
கூரை ஒன்றானாலும்
குடியிருப்புகள் வேறு வேறு என்பது
இவர்களின் அகராதியில் மட்டும்
அச்சழிந்து போய்விட்டதா?
'தமிழீழம்' வெறும் மண்ணாகவா
இவர்களின் கண்களுக்குத் தெரிகிறது?
இந்த மண்ணில் தானே
எங்கள் நூறு தலைமுறையே புதைந்து கிடக்கிறது.
மூன்றடி தோண்டினால் போதுமே
நம் முன்னோர்களின் எலும்புக்கூடுகள் தலைநிமிர்த்தும்.
இங்கு வீசும் காற்று வெறும் காற்று மட்டும் தானா?
எங்கள் பரம்பரையின் மூச்சும் அதில் கலந்திருப்பது
இவர்களின் சுவாசத்துக்கு ஏன் தெரியாமல் போனது?
முற்றத்தில் நிற்கும் பலா மரத்தைக் கீறினால்...
வடிவது பால் மட்டும் தானா?
எங்கள் முந்தையரின்
குருதியும், வியர்வையும் கொப்பளிப்பது
இவர்களுக்கு மட்டும் ஏன் தெரியவில்லை?
எங்கள் கோவில் வீதிகள்
வெறிச்சோடிப்போன வெறும் வெளிமட்டும் தானா?
யார் சொன்னது?
எமது பாட்டன் ராமன் வேடம் தரித்து
மேடையில் நின்றபோது
பாட்டி தன்னை சீதையாக உருவகித்து
மனதுக்குள்ளே....
மாயமான் கேட்டு நின்ற மண்ணல்லவா?
எப்படி எங்கள் தாய் நிலமும்
அரபுப் பாலைவனமும் ஒன்றாக முடியும்?
இவர்களுக்கு எல்லைகள் தொல்லைகளாக இருக்கலாம்
ஆனால் எல்லாவற்றிற்கும் எல்லைகள் இருக்கின்றனவே.
கடலுக்கு நிலமும்,
நிலத்திற்கு கடலும் எல்லைகள் ஆகும்போது
எங்கள் தாய் நிலத்துக்குமட்டும்
வேலிகள் வேண்டாமா?
வெள்ளிக் கிழமை விரதச் சாப்பாட்டின் பின்னர்,
சாணிமெழுகிய திண்ணையில்
சரிந்து படுக்கின்ற இன்பம் இருக்கிறதே,
இது இங்கன்றி

வேறுஎந்த மண்ணில் ஏற்படும்?
தாய் மடிதானே சந்தோசம்.
அழகில்லை என்பதற்காக
என்னைப் பெற்ற ஆச்சி
எப்படி அடுத்த வீட்டுக் கிழவி ஆகமுடியும்?
அழகானவள் என்பதற்காக
அடுத்த வீட்டுக் கிழவி
என்னைப் பெற்றவள் ஆகமுடியுமா?
ஊத்தை உடுப்பென்றாலும்
ஆச்சியுடன் ஒட்டியிருக்கும் சுகமிருக்கிறதே
அதைவிடச் சுகம் எதுவுமே இல்லை.
'சப்த சமுத்திரங்களு'க்கும் சொந்தம் கொண்டாடும்
சர்வதேச வாதிகளுக்கு
மட்டக்களப்பு வாவியின் மகிமை தெரியாது.
'நைல் நதி தீரமும்' நமதென்று சொல்பவர்களுக்கு
கீரிமலைக் கேணியின்
ஊற்று நீரின் உன்னதங்கள் புரியாது.
'அல்ப்ஸ் மலை' அழகுதான்
அதற்காக
கோணமலை கோரமலை ஆகிவிடாது.
எங்களுக்கு....
பாய் விரித்துப் படுத்துறங்கவும்,
அச்சமின்றி ஆடிப்பாடவும்,
குந்த ஒரு குடிநிலம்
சொந்தமாக வேண்டும்.
'எல்லைபோட்ட கொல்லை'
இதுதான் எங்கள் குறிக்கோள்!

□□

ஆவணி 1993



புதுவை இரத்தினதுரை



# எங்கள் தாயகம்
# எத்தனை அழகு

தாயின் மடிச்சுகத்தையும்,
தாயகமண்ணின் தனிச்சுகத்தையும்,
எழுதத் தொடங்கினால்....
ஏன் பேனா வற்றுவதில்லை?
"அமுதசுரபி" போலவும்,
"அட்சயபாத்திரம்" போலவும்
ஏன் அள்ள அள்ளக் குறைவதில்லை?
எந்தையர் பூமி எத்தனை அழகு.
கள்ளிச்செடி படர்ந்த கலட்டித் தரையானாலும்,
பச்சை போர்த்த படுக்கைபோல,
பார்க்கும் போது கண்ணில் காதல் வழிகிறதே.
ஒழுங்கில்லாத ஒற்றையடிப் பாதைகள்கூட
உச்சி வகிடெடுத்த பேரழகியின் தலையைப்போல்
உன்னத அழகோடு ஓடிவருகின்றனவே
ஏன்?
தொட்டளைந்த பூமியின் சுகமும், மணமும்
எட்ட இருக்கும் நிலத்தில் ஏற்படாது.
எங்கள் அன்னைமடி எத்தனை எழில்.
பிஞ்சுப் பிள்ளைகளின் பூவிரல்கள்போல....
வைகாசி மாதத்து மாமரங்கள்போல...
துள்ளிக் குதிக்கும் பிள்ளைக் கன்றுகள் போல..

வெள்ளலைகள் கரையொதுக்கும்
நுரைப்பூக்களைப் போல....
எங்கள் தாயகம் எத்தனை அழகு.
தமிழீழம் சந்தனக்காடு
இதிகாசத்தில் படித்த இந்திரன் பூமி.
"தால்ஏரி" காலெடுத்து நடக்கும் "காஷ்மீரை"
காணக் கண்கோடி வேண்டுமாமே.
"ஹாவாய்" தீவின் கடற்கரையில்
ஒருநாள் நடந்துவிட்டு இறந்தாலே
பிறந்தபலன் பூரணப்படுமாமே!
யார் சொன்னது?
தென்தமிழீழத்தைத் தெரியாத ஒருவன்
சொல்லியிருக்கலாம்.
மஞ்சள் வெய்யில் மேனிதழுவும் மாலைநேரம்
கோணமலையில் நின்று கீழே பாருங்கள்;
கோட்டை வாசலில் நிமிர்ந்து நின்று
பாதாளமலையின் பக்கமாக விழிகளை வீசுங்கள்.
உவமையற்ற அழகை உணர்வீர்கள்.
வார்த்தைகள் தோற்றுப்போகும்.
பேறுகாலத் தாய்மை அழகோடு
நெற்பயிர்கள்
பால்மணிக் கதிர்கள் தள்ளும் பருவத்தில்
தம்பலகாமத்து வயல்வரம்புகளில்
காலாற நடந்து பாருங்கள்.
காலமழை பொய்க்காத காலத்தில்
கந்தளாய்க் குளம் நிறைந்திருக்கும் நேரத்தில்
உயர்ந்த அணைக்கட்டில் உட்கார்ந்து கொண்டு
தாளஅசைவுக்குச் சதிராடும் பெண்களைப் போல
நீளப்பறக்கும் வெண்கொக்குகளை நிமிர்ந்து பாருங்கள்.
கந்தளாயின் காலடியில்
காஷ்மீர் கைகட்டி நிற்கும்.
நிலம் வெளிக்காத புலரிப்பொழுதில்
"வெருகல்" வேலன் திருவிழாக் காலத்தில்
மாவலி கங்கையின் மடியிலே விழுங்கள்.
கொட்டியாரக் குடாக்கடல் தேடி
கைநீட்டி வந்து கட்டித் தழுவும்
ஆற்றின் அருகில் அமர்ந்து கொள்ளுங்கள்
எங்கள் தாயகம் எத்தனை அழகு!

தென்தமிழீழம் சுந்தரப் பூமி
கன்னங்குடா,
பட்டித்திடல்
இன்னும் இன்னும் எத்தனை ஊர்கள்
அத்தனையும் அழகு.
வெள்ளிநிலா விளக்கேற்றிக் கொள்ளும்
நள்ளிரவில்
புளியந்தீவில் பொன்னாவரசு பூத்திருக்கும் காலத்தில்
மட்டுநகர் வாவிக்கு வாருங்கள்.
மேலே பெண்ணுருவம், கீழே மீனுருவம் கொண்ட
"நீரரமகளிர்"
குரலெடுத்துப் பாடிக் குளிப்பார்கள்.
படகெடுத்துப் பக்கத்தில் போனால்
முகம் மறைத்து முக்குளித்து விடுவார்கள்.
கற்பனையென்றாலும் எத்தனை சுகம்!
மட்டக்களப்பு புல்வெளிகளில்
மேய்ச்சல் முடிந்து வீடுதிரும்பும் பசுக்களி
மடிசுரந்து வீதியெங்கும் வெள்ளமாகும்;
கன்றை நினைத்து கால்களை நனைக்கும்.
வண்டு துளைபோட்ட மூங்கில் காடுகள்
வாத்தியம் இசைக்கும்.
காடாய்ப் பரவிய கரும்புக்காட்டில்
நிலத்து நீரைத் தண்டுகள் உறிஞ்சுவதில்லை
கரும்புச் சாறைத்தான் நிலம் குடித்துக் கொள்கிறது.
இலங்கை இந்து சமுத்திரத்தில் மிதக்கும்
ஒரு தீவு;
ஆனால் இரண்டு நாடுகள்.
தமிழீழம் பருவநிலை மாறுபடும் பகுதிகள் அடங்கிய
பரந்த தேசமல்ல...
ஒரேநாளில்
உதயத்தை காங்கேசன்துறையிலும்
அஸ்தமனத்தை அக்கரைப்பற்றிலும்
பார்த்துவிட்டுப் படுக்கைக்குப் போகலாம்.
மட்டக்களப்பின் முட்டித்தயிர்
புளிக்க முன்னர்
புங்குடுதீவு திருமணமொன்றின்
பந்தியிலே பரிமாறப்படும்.
யாழ்ப்பாணத்துக் 'கறுத்தக் கொழும்பான்'
அழுக முன்னர்

திருக்கோவில் தெருக்களில் விற்பனைக்கிருக்கும்
வடதமிழீழம் வறண்டது;
வறண்டதே தவிர சுருண்டதல்ல.
தென்தமிழீழம் செழிப்பானது;
செழிப்பானதே தவிர செருக்கானதல்ல.
திருமலை தமிழீழத்தின் தலைநகர்.
எங்கள் வானத்துக்கு நிலவு ஒன்றுதான்;
தலைவனும் ஒருவன் தான்.
இன்று, மனங்களை அடைத்து நின்ற மலைகளெல்லாம்
விடுதலை அதிர்வால்
வெடித்துச் சிதறுகின்றன.
போராட்டத் தீயால் பொசுங்கி எரிகின்றன.
தென்தமிழீழம்
எங்கள் தாயகத்தின் தலைவாசல்.
தானியக் களஞ்சியம்;
பாலும் தயிரும் பயிருக்குப் பாய்ச்சும் நிலம்.
இன்று
தமிழரின் குருதி பாயும் நிலம்.
அவர்களின் கண்ணீரைத் துடைக்க
கைகளை நீட்டுவோம்;
எதிரியைக் கலைத்து எல்லையைப் பூட்டுவோம்.

□□

புரட்டாதி ஐப்பசி 1993





# வீட்டுக்குவேலி அல்ல....
# நாட்டுக்கு எல்லை வேண்டும்!

ஒவ்வொரு மனிதனின் பிறப்புக்கும்
அர்த்தம் இருக்கிறது.
பிறப்புக்கும் இறப்புக்குமான இடைவெளிக்குள்
எல்லோருமே பூமியில் தாம் பிறப்பெடுத்ததை
அழியாத பதிவாக்கி விட்டுப் போகமுடியும்.
ஆனால்.... அதிகமானவர்கள் முயற்சிப்பதில்லை.
சோம்பற் கதிரைகள் எம்மை எழும்ப விடுவதில்லை.
விறகாகும் மரங்களைப் போல
காய்ந்து, எரிந்து, சாம்பலாகி விடுகின்றோம்.
பூமிப் பந்தெங்கும் தெரிந்தவர்களாக....
ஒருசிலரே உயர்ந்து நிற்கின்றனர்.
ஒரு தந்தை தந்தைக்குரிய கடமையை,
ஒரு தாய் தாய்க்குரிய பொறுப்பை,
ஒரு கணவன் கணவனுக்குரிய பணியை
ஒரு மனைவி மனைவிக்குரிய கடமையை,
விரும்பி ஏற்றுச்செய்து முடிப்பது போல
ஒரு மனிதன் தன் மண்ணுக்குரிய கடமையை
ஒரு தமிழன் தன் தாயகத்துக்குரிய பணியை
விரும்பி ஏற்றுச் செய்வது வெகுகுறைவு.
அன்னதானமண்டபத்தில்....
முதற் பந்திக்கு முன்னேறத் துடிக்கும் தமிழன்

இரத்ததானமென்றால் மட்டும்
தன்னை ஒட்டியுலர்ந்தவனாக
உருவகித்துக் கொள்ளுகின்றான்.
தாய் மண்ணுக்கு எல்லையிட வாருங்கள் என்றால்
எழுந்து வராத தமிழன்
தான் குடியிருக்கும் வளவுக்கு மட்டும்
ஐந்து வேலியும்
பன்னிரண்டு படலையும் போட்டு
இருபத்தி நான்கு பூட்டும் பூட்டிவிட்டு
திறப்பை இடுப்பிலேயே வைத்திருக்கின்றான்.
இன்று தேவைப்படுவதெல்லாம்
நாட்டுக்கு எல்லையே தவிர
வீட்டுக்கு வேலியும், பூட்டுமல்ல....
தேவை ஏற்படும் போது மட்டும்
தேசம் எங்களை அழைத்துக் கொள்கிறது.
இன்று அன்னைபூமி அழைப்பு விடுத்துள்ளாள்.
இந்தக் "காலத்தின் குரல்" காற்றிலே பரவி
பிறவிச் செவிடர்களுக்குக் கூட
அதிர்வுகளை ஏற்படுத்துகின்றது.
தாய் நிலத்தின் வாழ்வும், தாழ்வும்
சேய்களாகிய எங்களுக்கே சேரும்.
எத்தனை காலத்துக்கு எங்கள் தேசம்
சிறைப்பட்டிருப்பது?
இன்னும் எத்தனை வருடங்களுக்கு
அன்னைமண் அழுது கொண்டிருப்பது?
நாங்கள் பாதம்பட ஏறி மிதிக்கும் போது
மேனி சிலிர்த்துக்கொள்ளும் தாயகம்
எதிரி முத்தமிட்டாலும் ஏற்றுக்கொள்வதில்லை.
தன் பிள்ளைகள் சிறுநீர் கழித்தால்
தீர்த்தத் திருவிழாவாகவும்
மலம் கழித்தால்.... சந்தனக் காப்பாகவும்
மகிழ்ந்து ஏற்றுக் கொள்ளும் தாயகம்
பகைவன் பன்னீர் தெளித்தாலும்
ஏற்றுக் கொள்ளுவதில்லை.
ஏன் தெரியுமா?
எங்களை தன்மடி தவழும் மழலைகளாகக் கருதுகின்றது.
எதிரி கட்டியணைத்தாலும் காறித்துப்புகின்றது.
ஏன் தெரியுமா?
ஆக்கிரமிப்பாளர்களை எந்த மண்ணும்

அங்கீகரிப்பதில்லை......
எங்கள் தாய்நிலத்தில்
மஞ்சள் நிறமாகப் பூத்துக்கிடக்கும்
ஆவரசம் பூவிற் கூட ஒரு அழகிருக்கிறது.
கத்தரிப்பூ வர்ணத்தில்
நாகதாளி பழுத்திருக்கும் போது எத்தனை எழில்.
அருவி வெட்டிய வயல்களில்....
முள்ளி பூத்திருக்கும்
அது கூட நெஞ்சத்தைக் கிள்ளி எடுக்கும்.
கள்ளிச் செடிகளுக்கு அழகில்லையா?
ஏன் இல்லை.
எங்கள் மண்ணில் எது தான் அழகில்லை.
இத்தனை வடிவையும் எப்படி இழப்பது?
எதிரியிடம் கொடுத்து விட்டு எப்படிக் கிடப்பது?
பெற்றதாயை மற்றொருவன் எட்டி உதைக்கும் போது
சுமந்து பெற்ற பிள்ளை சும்மா இருப்பானாகில்
அவன் பிள்ளையல்ல... பிறவிக்குருடன்.
கட்டிய மனைவிக்கு இன்னொருவன் கைநீட்டும் போது
புருஷன் பார்த்துக் கொண்டு பேசாமல் இருப்பானாகில்
அவன் புருஷனல்ல... கோழை.
தாய் நிலத்தை பகைவன் தணலிலிடும் போதும்
பாய் சுருட்டி வைக்காதவன் மனிதனல்ல...
வந்த எதிரியை வாசலில் வரவேற்று
சந்தனம் கொடுப்பவன் தமிழனல்ல.
காலத்தின் குரல் காதுகளில் கேட்கும் போது
நாள நரம்புகள் துடிக்க வேண்டும்.
உலகமெங்கும் நிலவு ஒன்றுதான்.
'அரியாலைக்கு' மேலேறி வரும் நிலவுதான்
ஆபிரிக்காக் கண்டத்திலும் தெரிகிறது.
'கதிரவெளியில்' பாற்குடம் சரிக்கும் நிலவு தான்
கனடாவிலும் காலித்து வருகிறது.
ஆனாலும் ... அரியாலையில் பார்க்கும் நிலவும்
கதிரவெளியில் தரிசிக்கும் அதே நிலவும் தான்
எமக்கு அழகாகவும், குளிர்ச்சியாகவும் இருக்கிறது.
ஏன் தெரியுமா?
இது எங்கள் சொந்த மண்ணில் ஏறிவரும் நிலவு....
இந்த உணர்வோடு தானே
எங்கள் " பிள்ளைகள் " உயிர் கொடுக்கின்றனர்.

"புலிகள் " "பூநகரி"க்குள் புகுந்த போது
அவர்களின் அடிமனதில் ஆர்ப்பரித்த
உணர்வு என்ன?
இது எம்தாய் நிலம்.
இது எம் அன்னை மடி
இது எம்மைப் பெற்ற மண்.
இதில் எதிரி எப்படி ஏறி இருக்க முடியும்?
என்ற கேள்வியே அவர்கள் மூட்டிய வேள்வி.
"பூநகரி "
தமிழ்க்குறுநில மன்னர்களின் தலைநகரம் .
தன்னளவிலாவது தனியரசாக இருந்த பூமி.
சின்ன விரலாயினும்
வைரமோதிரம் அணிந்த விரல்.
"நாகதேவன்துறை"
தமிழரின் சின்னப் படகுத்துறை
பெரிய கப்பல்கள் வந்து போகவில்லைத்தான்
என்றாலும் அச்சமில்லாது தானியமாவது ஏற்றிய துறை.
இந்த இடங்களை எப்படி எதிரியிடம் விடுவது?
என்ற படிதான் புலிகள் ஏறிப்பாய்ந்தார்கள்.
இந்த உணர்வு... நெஞ்செல்லாம் பூத்து
எல்லோருக்கும் என்று வருமோ
அன்று தமிழீழம்.

□□

கார்த்திகை - 1993





# பூமிப்பந்தின் நெற்றியில் பூநகர் சுவரொட்டியானது!

மனுக்குலத்தின் தலையில்
சாதனை மகுடம் சூட்டி
அமெரிக்கன் ஒருவன் நிலவில் நின்றானே
அந்த நாள்
தமிழனும் ஆடிப்பாடினான்.
'ஆம்ஸ்ரோங்'
இங்கு பலருக்கு 'அத்தை பையன்' ஆனான்.
'சாள்ஸ்சும் , டயனாவும்'
லண்டனில்தான் கைபிடித்துக் கொண்டார்கள்.
தமிழன் சந்தோசத்தில்
இங்கே சந்தனம் பூசிக் கொண்டான்.
'வேல்ஸ்' பரம்பரைக்கு விசுவாசம் தெரிவித்து
வெற்றிலை போட்டுக் கொண்டான்.
வாழ்த்து அனுப்பி வைத்த வரலாறும்
இங்கே சிலருக்கு உண்டு.
'எலிசபெத் மகாராணி'
எங்களுக்கு எந்தவழி உறவு?
'யாதும் ஊரே யாவரும் கேளிர்'
சொன்னவன் தமிழன் தானே
அந்த உறவில் போலும்
தமிழர்கள் ஆனந்தம் கொண்டார்கள்.

குதுகலித்தோர் மீது குற்றமில்லை.
ஆனால்... நேற்றிரவு
பூநகரியில்....
பகைவன் இருந்த படைத்தளத்தினுள்ளே
இவர்களின் பிள்ளைகள் புகுந்தார்கள்.
விடியும் வரை வெடிச்சத்தங்கள் கேட்டன.
உறக்கம் கலைந்தவர் மட்டும்
உற்றுணர்ந்து கொண்டனர்.
'பூநகரிக்குள்ளே பொடியள் போட்டான்கள்'
'அப்பனே முருகா பிள்ளைகளைக் காப்பாற்று'
'கர்த்தரே! எங்கள் குஞ்சுகளைக் காத்தருளும்'
என்றபடி விடியும் வரை விழித்திருந்தார்கள்.
அடுத்த நாள் அடிவானம் சிவந்தது.
காகங்களின் சத்தங்கள் கூடச் சங்கீதமானது.
வழமைக்கு மேலாக பூக்கள் புன்னகைத்தன.
'வழுக்கி ஆறு' பெருக்கெடுத்து ஓடியது.
ஆயிரம் பகைவரைப் போரினில் அழித்து,
அள்ளிய ஆயுதங்களைத் தோளினிற் சுமந்து,
சாவினைத் தழுவிய தோழர்களையும், தோழியரையும்
தங்கள் கைகளில் ஏந்தியபடி,
முகத்தினில் வெற்றியின் வீரியத்தோடும்
நெஞ்சினில் இழப்பின் சோகத்தோடும்,
எங்களின் வீதியால்
எங்கள் பிள்ளைகள் உலா வந்தனர்.
பூநகரிக்கு
பக்கத்து ஊரிலே... பாதை கேட்டாலே..
திக்குக் காட்டத் தெரியாத சின்ன ஊர்.
மொட்டைக் கறுப்பன் அரிசிக்கு
முகவரி இதுதான்.
மடுமாதா திருப்பதிக்கும்
மாதோட்ட நன்நகருக்கும்
தலயாத்திரை போவோரின் தங்குமிடம்.
எங்கும் போல் இங்கும் காற்று வீசும்
மாரி காலம் என்றால் மழை பொழியும்
ஊர்கூடி உழுவார்கள்
வயல்கள் விளைந்திருக்கும் போது
வடிவாக இருக்கும்.
வரம்புகளில் வெண்கொக்குகள் பூத்திருக்கும்.
சின்னக் கோவில்களிலும்

திருவிழா நடக்கும்
பூமியெங்கும் பேர் பதியும் பொசிப்பில்லாமல்
பூநகரி ஊமையாய் உறங்கிக்கிடந்தது.
'நாகதேவன்துறை'
பேரைப் பார்த்துப் பிரமிக்கக் கூடாது.
இது கப்பல் துறைமுகமல்ல.
கட்டுமரத் துறைதான்.
என்றாலும் எங்கள் முந்தையரின்
பாதம் படிந்துள்ள படகுத்துறை.
இந்தியப் படைகளின் இருண்ட நாட்களில்
வரிப்புலிகள் வன்னிக்குப் போய் வந்த
வரலாறு இதற்குண்டு.
10.11.1993 அன்று
சாமம் கழிய மறுநாள் சந்தித்துக் கொண்டது.
ஞானிமடத்துக்கு மேலே
நின்ற நிலவு காணாமல் போயிருந்தது.
மேகம் உருகி மழையாகத் தூற்றலிட்டது.
கௌதாரிகளும், ஆட்காட்டிப் பறவைகளும்
குளிரில் விறைத்துக் குறண்டிப் போயிருந்தன.
நடக்கப் போவதை அறிந்த கடல் மட்டும்
ஆனந்தத்தில் ஆர்ப்பரித்தது.
புலிகள் பூநகரிக்குள் புகுந்து கொண்டனர்.
அவர்கள் இட்ட ஒவ்வொரு அடிக்குள்ளும்
பூமி புல்லரித்துக் கொண்டது.
இருளை ஊடறுத்து "எங்கள் பிள்ளைகள்"
பகைவனின் பாசறையைப் பார்த்தார்கள்.
காயவிட்டிருந்த "கறுப்புச் சட்டைகள்" தெரிந்தன
குருதி வழியும் வெட்டரிவாள்கள்
எதிரியின் இடுப்பிலே இருப்பது தெரிந்தது
" செல்லுங்கள் வெல்லுங்கள் "
தலைவனின் தாரக மந்திரம் காதில் ஒலித்தது
புலிகளின் கால்களுக்குள்ளே
புயல் புகுந்து கொண்டது
விழிகள் சிவப்பேறி விரிந்து கொண்டன.
விடிந்த போது
யானை உழக்கிய கரும்புக் காடாய்
எதிரிகள் சிதறிக்கிடந்தனர்.
பூமிப்பந்தின் நெற்றியிலே

பூநகரி சுவரொட்டியானது.
துருவப்பகுதிகள் கூடச் சூடேறின.
பசுபிக் சமுத்திரம்
நாகதேவன் துறைக்குப் பாதை கேட்டது.
உலக அசைவியக்கம் ஒரு கணம் நின்று
பிரபாகரன் பெயரை உச்சரித்துக் கொண்டது.
"தலைதப்பியது தம்பிரான் புண்ணியம்"
அன்றே வந்தது நன்றே என்று
பக்கத்து நாடு சுவாசத்தைச் சீராக்கியது.
உறங்கிக் கிடக்கும் தமிழனே! எழடா!
உன் வேலிக்கு அப்பாலும்
உலகம் இருப்பதை உணர்ந்துகொள்.
கடாரம் வென்ற தமிழனைச் சொல்லி
கவிதை எழுதிக் குவிக்கும் கவிஞனே!
பூநகர் வென்ற புலிகள் மீதிலே
புதிய பரணியை எப்போது எழுதுவாய்?
இது விடுதலைக்கு விலை கொடுக்கும் காலம்
பதுங்குகுழி உனது பாதுகாப்பிற்கே தவிர
பயந்து கிடக்கும் படுக்கையறை அல்ல.
விடுதலையை உயிர் மூச்சாக உள்வாங்கிக் கொண்டு
சாவைச் சாதாரண நிகழ்வாக நினைத்துக்கொள்.
காற்றுக்கு வேலியிட்டு கதவு சாத்த நினைப்பவர்களே!
ஆற்று வெள்ளத்தை அள்ளிக் குடிக்க நினைப்பவர்களே!
சிங்கள தேசமே! எங்களைத் தெரிந்துகொள்.
மாணிக்க கங்கையை
மடியிற் கட்டும் ஆசை எமக்கில்லை.
கொழும்பில் கொடியேற்றும் குறிக்கோளும் கிடையாது
நம்புங்கள்.
நாங்கள் எங்கள் நாட்டிலும்
நீங்கள் உங்கள் நாட்டிலும்
நல்ல நண்பர்களாக வாழ்வோம்.
மதித்தால் மதிப்போம்
மிதித்தால் மிதிப்போம்!

□□

மார்கழி தை 1994



# வெல்லும்வரை வேகம் குறைந்தால் செல்லும்வழி திசை மாறிவிடும்.

வருங்காலம் வசந்தம்.
காற்றுக்கு இனிக் கொண்டாட்டம்.
சுகந்த வாசம் சுமந்து,
மந்த மாருதம் ஊர்கோலம் போகும்.
சந்ததிப் பெருக்கத்திற்காக.......
மரங்களெல்லாம் தாய்மையடையும்.
மாசிப் பனியின் மூட்டம் கலையும்.
வெள்ளை முகிற் கூட்டம் கையசைத்துப் போகும்.
சந்தனமும், பன்னீரும் மணக்க
கிராமத்துக் கோவில்களில் கொடியேறும்.
மேளகாரரின் கழுத்தில் சங்கிலி குடியேறும்.
காஞ்சிபுரமும், மைசூரும் சலவைக்குப் போய் தயாராகும்.
இளசுகளுக்கு முளைத்த மீசை முறுக்கேறும்.
வசந்தம் வந்தால் எல்லாமும் வடிவுதான்.
எங்கள் மண் மட்டும் தானே
இளவேனில் தழுவாத நிலமாகிப் போச்சு.
இப்போது குயிற்பாட்டுக்கு எதிர்ப்பாட்டு
ஏன் கேட்பதில்லை?
சிறுவர்களெல்லாம் எங்கே தொலைந்தனர்?
வானத்தைப் பார்த்தபடியே கோவிலுக்குப் பயணம்.
உள்வீதிக்குள்ளே சாமிஉலா.

இருட்டுக்குள்ளே முகம் தேடும் இளசுகள்.
விளக்கற்ற வீதியில் கடலை வியாபாரம்.
மேற்கு வீதியின் மேளச்சமாவை
எங்கள் தாயகம் இழந்து விட்டது.
எட்டுமூலைப்பட்டம் கட்டி ஏற்றியவானம்
குண்டு வீச்சு விமானங்களுக்காகவா காத்திருப்பது?
அருவி வெட்டிச் சூடடுக்கியவுடன்
அந்த வயல்களில் ஒரு வாசம் வீசுமே,
அதையினி மூக்கு எப்போது முத்தமிடும்?
தாமரை படர்ந்த கிராமத்துக் குளங்களில்
கொடிவிலத்திக் குளிப்பது எப்போது?
இந்த வருடத்து வசந்தத்தையும் இல்லாதழிக்க
எதிரி விஷக்காற்றை வீசுவான்.
எறிகணைப் புகை கொடிகளில் படிவதா?
விடக்கூடாது.
வில்லை வளைத்து நாணேற்று.
மீண்டும் "சமாதானப் பேச்சு"
தலைப்புச் செய்தியாகிவிட்டது.
விவாகரத்துத் தம்பதிகளுக்கு பஞ்சணை விரிக்கப்படுகிறது.
கழுத்தை நெரித்தவன் கையும்,
துடித்துப் புரண்டவன் கையும்,
குலுக்கிக்கொள்ள எப்படித் தேதி குறிக்க முடியும்?
வேண்டாமென்று வெட்டிய வேர்களை
கட்டுப் போட்டுக் காப்பாற்ற முடியுமா?
இனங்களுக்கிடையே
இழந்துபோன உறவை ஏற்படுத்துவதென்பது
உடைந்து போன கதிரைக்கு
ஒட்டுப்போடுவது போன்றதல்ல.....
முறிந்த மரத்துக்கு முட்டுக் கொடுத்து நிறுத்துவதல்ல.....
உறவென்பது புரிந்துணர்விலிருந்து புலரவேண்டும்.
தன்னைப் போல மற்றவனையும் நேசிப்பவனே
உறவுக்கு உரம்போட முடியும்.
கெமுனுவின் கதையைச் சொல்லிக்கொண்டு
மகாவலி கங்கையை வடக்கே திருப்ப முடியாது.
சிங்கள அரசுக்கு.........
தமிழர் கொடுத்த அவகாசங்களெல்லாம்
அர்த்தமின்றி அழிந்துபோனதே வரலாறு.
தமிழன் நெஞ்சை நிமிர்த்தி நிமிர்ந்தபோதெல்லாம்

பேச்சுவார்த்தையென்று குனியச் செய்ததே
இதுவரை தொடரும் சரித்திரமாகி விட்டது.
எல்லோரும் குறித்துக் கொள்ளுங்கள்
இது தொடர்கதையாக இனியும் நீளக்கூடாது.
போராட்டமென்பதை
வெறும் துப்பாக்கிகள் மட்டும் தீர்மானிக்க முடியாது.
ஒத்துக்கொள்ளலாம்.
விடுதலையை பேச்சுவார்த்தை மூலமும் பெறமுடியாது.
இதையும் ஏற்றுக்கொண்டாக வேண்டும்.
சலுகைகளும், எலும்புத் துண்டுகளுமே
பேச்சுவார்த்தை மேசையில் பெறமுடியும்.
விடுதலையை இரத்தம் சிந்தியே வெற்றிகொள்ள முடியும்
உலகம் இதையே உணரச் செய்துள்ளது.
ஒரு வியட்னாமியனைக் கேளுங்கள்.
ஒரு சீனத்துக் குடிமகனைக் கேளுங்கள்.
ஒரு கியூபா நாட்டவனைக் கேட்டுப் பாருங்கள்
ஏன் பேச்சுவார்த்தை மூலம்
விடுதலையைப் பெறவில்லையென்று.
தக்கபதில் தருவதற்கு அவர்களுக்கே தகுதியுண்டு.
குருதிக் குளத்தில் குளித்தெழுந்து
எஞ்சியுள்ளவர்களையும் அங்கவீனர்கள் ஆக்கிவிட்டு
சுடுகாட்டு மண்ணில் கிடைக்கும்
சுதந்திரம் யாருக்கு வேண்டும்?
விடுதலை வாழ்வதற்காக அன்றி சாவதற்காக அல்ல....
இப்படிக் காதோரம் குசுகுசுப்போர்
கனபேருண்டு.
பேச்சுவார்த்தைகள் முறிந்த பின்னர்தானே
இந்த மண் போராடத் தொடங்கியது.
சுதந்திரப்போரென்பது;
சுற்றிச் சுற்றிவரும் சூத்திரக்கிணறு மாடுகளல்ல......
போராட்டமென்பது,
இலக்கைச் சென்றடையாமல்
தொடங்கிய இடத்துக்கே செல்வதல்ல...
குருதி வழிவதைப் பார்க்கும் ஆசை எவருக்கும் கிடையாது.
பிணங்களுக்கிடையில் நிற்கும் வக்ரபுத்தியும் எமக்கில்லை.
வேண்டுவதெல்லாம் விடுதலை ஒன்றே.
அது பேச்சுவார்த்தை மூலமும் கிடைக்குமென்றால்
மேசையின் விரிப்பை நாங்களே விரிப்போம்.
கதிரைகளில் அமரக் காத்திருக்கின்றோம்.

அகலச் சிறகு விரித்து ஆனந்தம் பாடும் பறவைபோல
தளையற்ற வாழ்வே தமிழருக்கு வேண்டும்.
வானுயர்ந்த மாடிமனைகள் மண்மேடாகி விட்டன.
கல்வியிற் சிறந்தவர்கள் " கைநாட்டு " ஆகிவிட்டனர்.
ஈழத்தமிழன் எலும்புக்கூடாக
ஒட்டியுலர்ந்து விட்டான்.
வீட்டுக்கு உள்ளும், வெளியும்
உயிருக்கு உத்தரவாதமில்லை
உண்மைதான்.
அதற்காக....
போராட்டத்தை பேச்சுவார்த்தையாக மாற்றமுடியாது.
பருத்தித்துறையிலிருந்து குமணவரை
தமிழீழத்தின் கடல் தழுவிச்செல்லும் நெடுஞ்சாலை வேண்டும்.
அந்த வீதியெங்கும் அழகான கிராமங்கள்
ஊரெங்கும் தமிழர் உழைக்கும் ஓசைகள்.
பூரித்த முகத்தோடு புன்னகைக்கும் மனிதர்கள்.
இல்லானும் இல்லை... இருப்பானும் இல்லை.....
இதுதான் தமிழீழம்.
இதற்காகவே போராட்டம்.
வெல்லும்வரை வேகம் குறைந்தால்
செல்லும்வழி திசைமாறிவிடும்.

□□

மாசி - 1994





# இந்த மாதத்தில் இப்படி வெயில் அடிப்பது ஏன்?

ஆறு ஆண்டுகள் கழிந்து விட்டன.
எட்டி மிதித்துச் செல்லும் காலத்துக்குத்தான்
எத்தனை வேகம்.
பங்குனி மாதத்தில் தார்வீதி தீப்பிடிக்கும்.
வாசல் நுழையும் காற்றுக்கூட வழி தடுமாறும்.
பூபதித் தாயென்ற பொன்மகள்
இந்த மாதத்தில்தான் தேரேறி வீதிக்கு வந்தாள்.
சத்தியக்கவசம் நெஞ்சினில் இருந்தது.
தர்மக் காண்டீபம் கையினில் இருந்தது.
நியாயச்சுடர் விழிகளில் ஔிர
மாமாங்க வீதியில் சங்கு முழங்கினாள்.
அன்னைக்கு எதிரே அன்னியப் படைகள் நின்றன.
"பாரதப் போர்" பதினெட்டு நாட்கள்;
இப்போர் நடந்ததோ முப்பது நாட்கள்.
இது வியாசர் எழுதாத "குருக்ஷேத்திரப் போர்"
குருந்தமர நிழல் குளிரும்.
எங்கள் தாய்க்கோ எரிந்தது.
சித்திரை மாதத் தென்றல் இதமளிக்கும்.
அன்னை பூபதிக்கு அது அனலாகியது.
இன்னும் ஆறாத எரிமலைக் குழம்பாய்
எங்கள் நெஞ்சு கனன்று கொண்டிருக்கிறது.
மட்டக்களப்பில் இவள் மடியுறங்கியபோது
உலகத்தின் விழிகள் உறக்கம் கலைந்தன.

பாரதப் படைகள் பயந்தன.
சுட்டுப் பொசுக்காத பட்டினி யுத்தம்.
கிட்ட நெருங்க முடியாது வெலவெலத்துப் போனார்கள்.
பூமிப்பந்தின் புருவம் உயர்ந்தது.
பார்வையை எங்கள் பக்கம் திருப்பியது.
நிலவற்ற வானத்தை எவரும் நிமிர்ந்து பார்ப்பதில்லை.
பூக்காத செடிகளை தேனீக்கள் தேடுவதில்லை.
வற்றிய குளத்தில் யாரும் வலை வீசுவதில்லை.
போராடும் தேசங்களே
பூகோளப்படத்தில் பிரகாசிக்கின்றன.
இமய மலையை
எல்லோரும் எட்டி நின்றே பார்த்தனர்.
உச்சியையும் தொட்டு விடலாமென்று
'டென்சிங்' மட்டுமே உணர்த்தினான்.
நிலவை முகத்துக்கு உவமை சொல்லி
கவிஞர்கள் கண்ணடித்துக் கொண்டிருந்த போது
'ஆம்ஸ்ரோங்' அதிலே பாதத்தையே பதித்தான்.
பெரிய வல்லரசுடன் போராட முடியுமா?
பலர் முடியாதென்ற முடிவிற்கே வந்தனர்.
பிரபாகரன் மட்டும்
இவர்களை ஊதிக்கலைக்கலாமென்று உணர்ந்திருந்தார்.
இதை வழிமொழிந்தாள்
எங்கள் வரலாற்று நாயகி.
தீக்கு தீ மூட்டிய நாட்களென்பதால் தான்
வெளியே
இந்த மாதத்தில் இப்படி வெயில் அடிக்கிறது.
நீண்டகாலமாகத் தமிழன் நித்திரையிற் கிடந்தான்.
உதைத்த காலுக்கு முத்தமிட்டு உணர்வற்று இருந்தான்.
அடித்த கால்களுக்கு அபிஷேகம் செய்தான்.
பிரபாகரனின் பிறப்புக்குப் பின்னர்தான்
மீண்டும்.....
தமிழனின் நரம்புகளில் குருதி குதித்தது
மீசைகள் முறுக்கேறிக்கொண்டன.
தாவணி சுற்றிய தங்கைகளும்
போரணிக்குள்ளே புகுந்து கொண்டனர்.
பூபதி அம்மாவின் பிறப்பின் மூலமே இது தான்.
வெள்ளரசு நிழலில்
சித்தார்த்தனுக்கு ஞானம் சித்தித்தது.
யுத்தத்தின் பின்னர்தான்
அசோகனுக்குப் புத்தியே தெளிந்தது.
விஜேதுங்காவுக்கு மட்டும் விடிவே இல்லையா?
வயதேறவரும் வளர்ச்சி வளையங்கள்

மரங்களின் முதிர்ச்சியைக் காட்டுமாம்.
மனிதனின் வளர்ச்சியை அளக்கமட்டும்
கடவுளேன் கருவியொன்றைப் படைக்கவில்லை?
"புலிகளை அழிப்பேன்.
இப்பிறப்பில் இயலாவிட்டால்
அடுத்த பிறப்பெடுத்தென்றாலும் அழிப்பேன்"
ஐயோ பாவம்.
விஜேதுங்காவுக்கு
அடுத்த பிறப்பிலும் ஆளும் நினைவு தான்.
சிம்மாசன ஆசைதானே பேச்சில் தெரிகிறது.
மூளை வளராத பிள்ளைக்கு அதிகம் பேசவராதே
இவருக்கு எப்படிப் பேசமுடிகிறது.
'எல்லோரும் ஏறி இளைத்த குதிரையில்
சக்கடத்தார் ஏறி சறுக்கி விழுந்தாராம்'
இது இங்கே வழக்கில் இருக்கும் முதுமொழி
யாரேனும் மொழி பெயர்த்து விஜேதுங்காவுக்கு முகவரியிடுங்கள்.
தமிழீழம் தலைகுனியாது.
பிரபாகரன் பெருநெருப்பு.
பூபதி என்பவள் போனவள் மட்டும் தானா?
இல்லை.
வந்து பார்.
கருச்சுமந்த பெண்களிலெல்லாம்
பூபதி அம்மாவின் உருவம் தெரியும்.
'நாவலடி' யில் எரிந்தவளுக்கு
'நாவாந்துறை'யில் விளக்கேற்றியுள்ளோம்.
வந்து பாருங்கள்.
நாங்கள் ஒன்றாகியுள்ளதை உணர்ந்து கொள்வீர்கள்.
பூபதி அம்மாவுக்கு
ஆடைகட்டி மட்டும் அழகு பார்ப்பவர்களே
அவளின் கையில் இருந்த
அஸ்திரங்களையும் கணக்கெடுத்துக் கொள்ளுங்கள்.
நெஞ்சுக்குள் எரிந்த நெருப்பை நினைத்துக் கொள்ளுங்கள்.
அச்சமில்லாத அவளின் உறுதியை
உற்றுப் பாருங்கள்.
புலிகள்மீது அவளுக்கிருந்த நம்பிக்கையை
அளவெடுத்துக் கொள்ளுங்கள்.
இப்போது பாருங்கள்.
பூபதி அம்மா விஸ்வரூபமாய் விண்தொட நிற்பாள்.



பங்குனி 1994



# இது போராடும் பூமி...
# புலிகளின் காலம்
# பிரபாகரன் வழிகாட்டி!

இன்றும் எங்கள் வானத்தில்
வெள்ளிநிலவு பாலை அள்ளித்தான் சொரிகிறது.
விண்மீன்கள் கண்தூங்கவில்லை.
இலுப்பைமரம் பூத்துக் கொட்டுகிறது.
ஆழக்கிணறேதும் ஊற்றடைத்துப் போகவில்லை.
குண்டும் குழியுமான பாதையெனிலும்
இன்றும் பயணம் நடக்கிறது
இது தமிழீழம்.
எல்லாம் நடக்கும்.
விஜேதுங்காவுக்கு ஒரு வினா
உன்னால் முடியுமா தம்பி?
எங்களுக்கு வித்தே வேண்டாம்.
நாங்கள் வேரிலிருந்தே முளைவிடும் சாதி.
எங்களைக் கூட்டிக்குவித்து தீயிடு
மறுநாள் சாம்பலிலிருந்து பிறப்போம்.
வெட்டிச் சரித்துப் புதைத்திடு
மூன்றாம் நாள் எங்கள் முகம் தெரியும்.
இது தமிழ்ச்சாதி
இங்கே
குண்டு சுமந்து வானூர்தி வட்டமிடும்.
குழிகள் தேடி எவரும் ஓடுவதில்லை.
போட்டுவிட்டு 'புக்காரா' போகும்.
புழுதியைத் தட்டிவிட்டு

அந்த இடத்திலேயே மீண்டும் பாய்விரிப்போம்.
சிதறிப் போன சுவரின் கற்களை எடுத்தே
அடுப்பு மூட்டி சமையல் தொடங்குவோம்.
விஜேதுங்கா!
என்னடா பொடியா செய்யப் போகிறாய்?
இது தமிழ்ச்சாதி.
தீக்குளித்தும் தோல்கருகாச் சாதி.
கண்களினால் சுவாசித்து
மூக்கினால் பார்க்கும் வித்தியாசமானவர்கள்.
மலைகள் இல்லையென்று நாங்கள் தளரவில்லை.
ஆறுகளில்லையென்று அந்தரித்துப் போகவில்லை.
ஆழக் கிணறுவெட்டி நீரள்ளிக் குடிக்கின்றோம்.
ஆக மூன்று மாதங்களே இங்கு மழைபொழியும்.
என்றாலும் பச்சை நிறத்தில் தான்
எங்கள் மண் பாவாடை கட்டியுள்ளது.
இது தமிழ்ச்சாதி.
தெருப்புழுதியில் கயிறு திரித்து
தேரிழுக்கும் சாதி.
அப்பு விஜேயதுங்கா!
என்னசெய்யும் உத்தேசம்
படைகளை நடத்தி தடகளப் போட்டியா?
நல்லது நாளை சந்திப்போம்.
வெற்றிக் கம்பத்தைத் தொட்டபின்
வெள்ளிக் கிண்ணத்துடன் பேசுவோம்.
எதிரியை வாவென்று கடிதம் எழுதியாச்சு
தமிழனே! நீ என்ன செய்கின்றாய்.
பூச்செடிகளுக்கு முள்ளும்,
பறவைகளுக்குச் சொண்டும்,
மிருகங்களுக்குக் கொம்பும் ஏன் கொடுக்கப்பட்டது?
போராட வழங்கிய போர்க்கருவிகள் அவை.
'அழிக்கவருபவனை அழித்துவிடு'
கீதையின் சாரமே இதுதான்.
நிமிர்ந்து நிற்பவையே நிலைக்கும்.
விழுந்து கிடப்பன யாவும் மிதிக்கப்படும்.
தலைநிமிர்ந்த பனைகளைத் தறிக்கக்கூடாது.
சட்டமே வந்துவிட்டது.
ஆனால்.....
முல்லைக்கொடியை மிதிக்கக் கூடாது என்று
ஏன் எவரும் குரலெழுப்பவில்லை?
காலில் விழுந்து கிடப்பவைகளை
எவரும் கணக்கெடுத்துக் கொள்வதில்லை
அதனால் தான்.

மனிதர்களுக்கும் இது பொருந்தும்.
தமிழனே!
மணிமுடிதரித்த உன் தலையில்
வெய்யிலுக்குத் தொப்பி போடவும் வெட்கப்படுகின்றாய்
ஏழுகுதிரைகள் பூட்டிய தேரில் உலாவந்தவனே!
அச்சுமுறிந்த சைக்கிள்தானும் உன்னிடம் இல்லையா?
ஊருக்கெல்லாம் துணி நெய்து கொடுத்தவனே!
கோமணத்துண்டுக்கும் வழியற்றுப் போனாயா?
வாழும் வழிகள் ஆயிரம் சொன்னவனே!
ஆளும் உரிமையை மட்டும் யாரிடம் கொடுத்தாய்?
கொம்பும், முரசும், பேரிகையும் எங்கே?
கவசமும், வேலும், கைவாளும் எங்கே?
இவற்றையெல்லாம் எறிந்துவிட்டு
அன்னதானமடத்தில் என்னடா செய்கிறாய்?
இந்தமண்ணில் உனக்கொரு வரலாறு வேண்டும்.
இருந்தாய், வாழ்ந்தாய் என்பதற்கு
அடையாளம் வேண்டும்.
உன் தலைமுறைக்கு ஒரு சரித்திரம் இருக்கட்டும்.
உயிர் என்ன உயிர்.
அதைக்காட்டு பார்க்கலாம்.
உருவமற்ற ஒன்றுக்காக ஏன் அச்சப்படுகின்றாய்.
எத்தனை காலம் வாழ்ந்தாய் என்பதில்
பெருமை கிடையாது.
எப்படி வாழ்ந்தாய் என்பதே மகிமைக்குரியது.
குறவணன் புழுவும், கும்புடுபூச்சியும் கூட
பூமியில்தான் வாழ்கின்றன.
யார்தான் கணக்கில் எடுத்தார்கள்?
போருக்கு வாவென்று
எதிரிக்குக் கடிதம் போட்டாச்சு
நீ புறப்படு.
பீளைசாறிய கண்களைத் திறந்துபார்
பாயைச் சுருட்டி அசைவிலேபோடு.
தாயிடம் விடைபெறு.
உன் தங்கை எங்கே?
உனக்குமுன் அவள் களத்துக்குப் போய்விட்டாள்.
வெளியே பார் வெய்யில் அடிக்கிறது.
இது போராடும் பூமி....
புலிகளின் காலம்......
பிரபாகரன் வழிகாட்டி.

□□

சித்திரை 1994



# கறுப்புச் சிங்கமே! கைகளை நீட்டு குலுக்கிக் கொள்ளுவோம்

இருண்ட கண்டத்தில் விரிந்த மலரே!
வாழ்த்துக்கள்.
இரும்புத்திரையை உடைத்தெழுந்த கதிரே!
மேகங்களிடம் "முத்தங்களும்"
காற்றிடம் "மலர்ச்செண்டும்" அனுப்பியுள்ளோம்.
பெற்றுக்கொள்.
"இதரை வாழைக்கன்றுகள்" இரண்டை
இனிவரும் கடலலைகளிடம் கொடுத்து விடுகின்றோம்.
கொடிமரத்துக்கருகில் பாத்திகட்டி நாட்டிவிடு.
அடிபெருக்கி எங்கள் அன்புக்குக் குலைதள்ளட்டும்.
நேற்றுவரை தென்னாபிரிக்கா என்றே
உன்னை அழைத்தோம்.
இன்று "என் ஆபிரிக்கா" என்றே
இங்கே ஒவ்வொருவரும் உச்சரித்துக்கொள்கின்றோம்.
"வாஸ்கொடகாமா" வுக்கு மட்டும்தான்
நீ "நம்பிக்கைமுனை" யாக இருக்கவில்லை.
போராடும் எங்களுக்கும் அப்படித்தான் புலப்படுகின்றாய்.
நெல்சன் மண்டேலா!
கறுப்புச் சிங்கமே! கையை நீட்டு
குலுக்கிக்கொள்ளுவோம்.
உன்னைக் கட்டித்தழுவத் துடிக்கின்றோம்.

என்னசெய்வது நீ எட்ட இருக்கின்றாய்.
அன்று நீ "சிம்மாசனம்" ஏறியபோது
எமக்கேன் அழைப்பனுப்பவில்லை?
சிறீலங்காவுக்கு நீ எந்தவழி உறவு?
விஜேதுங்காவை விருந்துக்கழைத்தபோது
தமிழீழம் உன் கண்களுக்கு ஏன் தட்டுப்படவில்லை?
இது விருந்துகிட்டவில்லையென்ற விசனமல்ல....
போராடும் பூமியொன்றை
புறமொதுக்கிவிட்டாய் என்ற ஆதங்கம் மட்டுமே.
போகட்டும், இதனால் கோபமேதுமில்லை.
இனிமேலாவது நண்பர்களை இனம் கண்டுகொள்
நன்மை உனக்குத்தான்.
ஆபிரிக்காவின் "காப்பிரி" மக்களே!
சூரியனை வழிமறித்து
தொட்டுப் பேசும் வல்லமையின் வடிவே!
காற்றுக்கொதுங்கிய வெள்ளையன்
நேற்றுவரை உன் முதுகில்தான் இருந்தான்.
கறுப்பனென்று உன்னை அழைத்தபோது
வெள்ளை உதடுகள் வேதனைப்படவில்லை.
மலத்தைக்கூட
தன்வீட்டில் அறைகட்டிக் குடியிருத்தியவன்
உன்னை வீதியிலேறி உலாவவிடவில்லை.
படுக்கை அறைக்குள்ளும் நாயை அழைத்தவன்,
அடுப்படிக்குள்ளே கோழியை அனுமதித்தவன்
கறுப்பனைத்தொடும் காற்றைக்கூட
வெறுத்து விரட்டினான்.
அழகான உன் கரியமேனியும்
உரமேறிய தசைநார்களும்
அவனுக்கு அச்சத்தைத் தரவில்லை.
அருவருப்பாகவே இருந்தது.
நீ பேசாமல் இருக்கவில்லை
போராடினாய்.
வெற்றிக்கம்பத்தைத்தான்
உன்னால் தொட்டுவிட முடியவில்லை.
உங்கு வேர்கொண்ட மரங்களெதுவும்
நீர்குடித்து வளரவில்லை
கறுப்பனின் குருதிகுடித்தே தளிர்த்தன.
உலகெங்கும் தார்பூசியே வீதிகறுப்பானது
உன்நாட்டில் மட்டும் தான்

கறுப்பனின் வியர்வைபட்டு வீதி கறுப்பானது.
வெள்ளைச் சீமாட்டிகளின் விருந்துக்குப்பிறகு
வீசியெறியும் எச்சில் இலைக்காக
உன்பரம்பரை தாழ்வாரத்தில் தவமிருந்தது.
வந்தவன் ஆள நீ வயலில் மாடானாய்.
வெள்ளைக்காரன்
மாட்டுத்தொழுவத்தில் கறுப்பியின் முலைதொடுவான்.
கறுப்பனுக்குமட்டும் காயடிப்பான்.
நீ புயலாகிப் போராடியவன்தான்
என்ன செய்வது?
அம்பும் வில்லும்தான் உனக்கு அகப்பட்டது.
அவனிடம் துப்பாக்கியல்லவா இருந்தது.
காலங்கள் கழிந்தனவே தவிர
உன் துன்பங்கள் கழிய வழிவந்து சேரவில்லை.
நீண்டகாலத்தின் பின்
நெல்சன் மண்டேலா வந்து பிறந்தபோதுதான்
நெஞ்சு நிமிர்த்தினாய்.
எப்படியோ
சுற்றிய இரும்புவேலிச் சுவர்கள் இடிந்தன.
இன்று ஆபிரிக்காவுக்கு சிறகுமுளைத்துவிட்டது.
புதிதாகப் பிறந்த கறுப்புத்தேசமே!
விடுதலைக்கு நீ கொடுத்த விலையிலும்
அதிகவிலை நாங்கள் கொடுக்கின்றோம்.
நாங்கள் போராடும் விதமே வித்தியாசமானது.
உனக்குப் பக்கத்து நாடுகள் பால்வார்த்தன
எமக்கு அண்டை நாடொன்று நஞ்சையே தந்தது.
நின்றும், நடந்தும், குனிந்தும், நிமிர்ந்தும்
நீ வசதிக்குத் தக்கபடி வழிமாறியுள்ளாய்.
நாங்கள் பாதைமாற்றும் பரம்பரை இல்லையே
விடுதலையைப் பேசிப்பெறும் எண்ணம் எமக்கில்லை.
போராடிப் பெறுவதென்றே முடிவு.
பிரபாகரனைப் பார்க்காவிட்டாலும், கேட்டிருப்பாய்
தொட்டுத் தோழமையை வளர்த்துக்கொள்.
கண்டங்கள் கடந்து வாழ்ந்தாலும்
நாங்கள் உணர்வால் ஒன்றுபட்டவர்கள்.
நிறத்தால் வேறுபட்டாலும்
நீங்கள் விடுதலைபெற வேண்டுமென்று
அதிகம் விரும்பியது நாங்கள்தான்.

ஏன் தெரியுமா?
வெள்ளைக்காரன் உன்னை மட்டுமா அடக்கினான்.
இல்லை?
எம்மை அடக்கவும் எதிரிக்கு துணைபோனான்.
இங்கே கண்ணிவெடியில் சிதறும்
"பவள்" கவச வண்டியை எதிரிக்கு அனுப்பியதே
வெள்ளைத்தோல் வெறியன்தான்.
இனி இது நடக்காது
நாங்கள் நம்புகின்றோம்.
போராடிப் பெற்ற சுதந்திரத்தின்
பெறுமதி புரிந்தவர்கள் நீங்கள்
விடுதலையின் முகவரி தெரிந்தவர்களே!
எங்கள் சுதந்திரத்திற்கு முத்திரை ஒட்டுங்கள்.
நம்பிக்கைமுனை நாடே!
எங்களின் நம்பிக்கையை
நாசமாக்கி விடாதே;
கறுப்புச் சிங்கமே; நெல்சன் மண்டேலா!
ஒரு கேள்வி; பதில் வேண்டும்.
சில இடங்களில் சேற்றிலேன் காலைப்புதைத்தாய்?
சமாதானத்துக்கான நோபல் பரிசை
வேடனும் புறாவும் எப்படிப் பங்கிட முடியும்?
குருதிபடிந்த வெள்ளைக் கொலைக்கரமும்
சிறையில் வாடிய உன் கரிய திருக்கரமும்,
குலுக்கிக்கொண்ட போது
அந்த விருதை எப்படி விளங்கிக்கொண்டாய்?
பரிசு வாங்கிய போது
உன்பரம்பரை சிந்திய குருதியை
எப்படி மறந்து கைகளை நீட்டினாய்?
என்றாலும் உன்மீது கோபம் வரவில்லை.
கறுப்புச் சிங்கமே: கைகளை நீட்டு
குலுக்கிக் கொள்ளுவோம்.

□□

வைகாசி 1994



புதுவை இரத்தினதுரை



# கரும்புலி அடிமுடி அறிய முடியாத அற்புதம்.

கரும்புலி,
சாவுக்குத் தேதிகுறிக்கும் சரித்திரம்.
கந்தகத்தை மேனியிற் கட்டிய சந்தனம்.
வீதியுலாவுக்காக வெளியில் வராத விக்கிரகம்.
உயிர்மூச்சை ஊதிவிடும் உன்னதம்.
அடிமுடியை அறியமுடியாத அற்புதம்
தென்றலும், புயலும் சேர்ந்ததான கலவை.
இவர்களை எழுதத் தொடங்கினால்...
எந்தமொழியும் தோற்றுப்போகும்.
வார்த்தைகள் வறுமை அடையும்.
உளவியலாளர்கள் உள்ளே புகுந்தாலும்
வெறும்கையோடுதான் வெளியே வருவார்கள்.
கற்பனைக்கவிஞர்கள் கவிதை எழுதினால்
அற்புதம் என்பார்கள்,
அடுத்தவார்த்தை வராது.
சித்திரக்காரர்களும்
தீப்பிழம்பைத்தானே தீட்டமுடியும்.
பக்கத்திருந்து பழகியவர்கள் கூட
குறிப்புக்கள் மட்டும் தான் கூறமுடியும்.
ஆழத்தோண்டினாலும் மூலவேர் தெரியாது.
சமுத்திர நீரை

அகப்பையால் அள்ளி அளக்கமுடியுமா?
ஓடும் முகிலை
ஏணிவைத்து எட்டித்தொட முடியுமா?
எதிரியின் எந்தவலுவும்
இறுதியில் இவர்களிடம் சரணடையும்.
கடைசி நொடிவரை சிரித்தபடி திரிவர்.
மறுநாள்
வெடித்த செய்தி வெளிவரும்போது;
ஜாதகமும் சோதிடமும்
தங்களுக்குத் தாங்களே தீமூட்டிக் கொள்ளும்.
காலால் நடந்து.
வாயால் மொழிந்து.
கையால் தலைவாரிக் கொண்டு
எல்லோரையும் போலவேதான் இவர்களும்.
உள்ளே எரியும் விடுதலைக் கனல்மட்டும்
வேறுபட்டது.
உயிர்ப் பூவை கிள்ளி எடுத்து
விடுதலைக்கு விலைகொடுக்கும் வித்தியாசமானவர்கள்.
கிட்டநெருங்க முடியாத இலக்குகளைக்கூட
தொட்டு அசைத்துவிடும் துணிச்சலர் இவர்.
முதுகில் வேர்க்குரு போட்டாலே.....
முந்நூறு மருந்துகள் தேடும் உலகில்
சாவைத் தம் தோள்களில் சுமந்து
நொடிகளை கணக்கிட்டு நகரும் நூதனங்கள்.
காற்றிலும், நீரிலும் இவர்கள் கலக்கும்போது
காற்றுக்கு வேர்க்கும்.
நீர் நெருப்பாகிவிடும்.
இவர்களுக்கு;
சூரியன் கைகளுக்கு எட்டும் தூரம்தான்.
பசுபிக் சமுத்திரம் முழங்கால் ஆழம்.
கரும்புலிகள்;
தலைவன் தலைவாரிவிடும் புயல்கள்.
தாயை நேசிக்கும் அளவுக்கு
தலைவனையும் நேசிப்பவர்கள்.
தாயகத்தை மட்டும் பூசிப்பவர்கள்.
ஆவிபிரியும் அடுத்த கணம்பற்றிய அச்சம்
இவர்களின் அகராதியில் அச்சிடப்படுவதில்லை.
யூலை 5.1987
கருமைக்கும் பெருமை வந்த நாள்.

புலியொன்று முதல் கரும்புலியான தினம்.
நெல்லியடியில்
"மில்லர்" புதிய வரலாற்றை தொடக்கிய நாள்.
"எல்லாம் சரி
வடமாராட்சி எமது கட்டுப்பாட்டில்"
கொழும்புக்குச் செய்தி அனுப்பியவனின்
வாய் மூட முன்னர்
செவிப்பறைகள் கிழிந்தன.
சாவு நேரே ஓடிவந்து
முகத்தில் சந்திக்குமென்று
எதிரி எப்படி எதிர்பார்த்திருப்பான்.
"உயிராயுதம்"வலுவானது.
கரும்புலிகள்,
தேவை அறிந்து செல்பவர்களே அன்றி
சாவை விரும்பிச் சந்திப்பவர்களல்ல....
இவர்கள் வசந்தம் தழுவாத கொடிகளோ
முகில்கள் முத்தமிடாத மலைமுகடுகளோ அல்ல.
இதயம் இரும்பாலானவர்களும் அல்ல.
பனியாய் உருகும் நெஞ்சுக்கும்
பாகாய் இனிக்கும் வார்த்தைகளுக்கும்
உரிமையாளர்கள்.
வெடித்த பின்னரும்;
இவர்கள் எல்லோரும் வெளிச்சத்துக்கு வருவதில்லை.
சுவரொட்டியில் சிரிப்பவர்கள் சிலர்தான்.
"நடுகல் நாயகர்கள்" ஆகும் வாய்ப்பும்
எல்லோருக்கும் ஏற்படப் போவதும் இல்லை.
கல்லறை கூட இல்லாத காவியமாய்
வாய்விட்டு சொல்லியழும் வாய்ப்பும் இல்லாமல்
சிலருக்கு வெளியே தெரியாத
வேரின் வாழ்வு.
பலருக்கு மரணம் வாழ்வின் முடிவு.
கரும்புலிகளின் ஜனனம் மட்டும்
மரணத்தில்தான் ஆரம்பம்.
கால நதியில்
இவர்கள் ஓடிக் கரைய மாட்டார்கள்.
மற்றவர்களுக்கு
இனி என்ன செய்வதென்று
தலைவெடிக்கும் போதுதான்.
இந்த சுகந்த ஊதுபத்திகள்

உடல்வெடித்துப் போகிறார்கள்.

"ஊரறியாமலே உண்மைகள் கலங்கும்
ஒருபெரும் சரித்திரம் ஊமையாய் உறங்கும்
வேருக்கு மட்டுமே விழுதினைப் புரியும்
வெடிமருந்தேற்றிய வேங்கையைத் தெரியும்"

பூகம்பத்தை போத்தலில் அடைத்தது போல
வந்தவரிகளில் வென்றவரிகள் இவை.
கரும்புலிகளுக்கு காணிக்கை என்ன?
கண்ணீரா?
கல்லறையா?
இல்லை.
எதுவுமே இல்லை.
நெஞ்சின் நினைவே
நெடிய கோபுரம்.
கரும்புலி
அடிமுடி அறியமுடியாத அற்புதம்!

□□

ஆனி, ஆடி 1994





# கதவுகள் திறக்கும் காவலரண்கள் கைகுலுக்கும் பேசலாம் வருக!

வணக்கம் வருக!
தமிழீழம் வரவேற்கிறது.
மானுடத்தை நேசிக்கும் மனிதர்களுக்கு
எங்கள் எல்லைக்கதவுகள் என்றும் திறந்திருக்கும்.
காவலரண்கள் கைகுலுக்கும்
எத்தனை தடவைகள் எடுத்துச் சொல்லிவிட்டோம்.
சிறீலங்காவே!
நீ பக்கத்து நாடே தவிர, பகை நாடல்ல...
உன்னையே ஒருமுறை உற்றுப்பார்த்து
ஒரு கேள்வியைக் கேட்டுப்பார்.
ஒன்றாக இருந்ததை உடைத்தது யார்?
சிங்கள தேசமென்றே திசைகள் எதிரொலிக்கும்.
எமது கவிஞர்களின் பழைய கவிதைகளைப் படித்துப்பார்
உடைத்தது யாரென்ற உண்மை தெரியும்.
“மாவலி கங்கை நாடெங்கள் நாடே”
“ஈழ மண்டல நாடெங்கள் நாடே”
“சிங்களமும் செந்தமிழும் சேர்ந்திலங்கும் திருநாடு”
நேற்றுவரை எமது கவிஞர்களின் நெஞ்சத்துடிப்புகள்
இப்படித்தானே துடித்தன.
தென்னிலங்கைச் சிம்மாசனங்கள் தானே
இந்தவரிகளை இல்லாதழித்தன.

உறவில் உதிரத்தைச் சொரியவைத்தன.
"மாங்காய் வடிவிலான மரகதத்தீவு"
"சுற்றிவரக் கடல் சூழ்ந்த சுந்தரப்பூமி"
பழைய "பாலபோதினி"யில்
நாங்கள் பாடிய பாடல்வரிகளின்
குரல்வளையை நெரித்துக் குதறியது யார்?
மூன்று பிரதமர்களைக்கொண்ட குடும்பம்தானே
"தேசியத்துக்கு" முதலில் தீமூட்டியது.
காதைப் பிடித்திழுத்து
கடுக்கன் பூட்டிய துவாரத்தைத் தேடியபோதுதான்
உறவுப்பாலம் முதலில் உடையத் தொடங்கியது.
இன்று "இனப்பிரச்சினையைப் பேசித்தீர்ப்போம்"
என்றெல்லாம் பேசுகிறீர்களே
நன்றி.
சமாதானத்தின் கதவுகளை ஒட்டமூடியது யார்?
வெள்ளைப் புறாவுக்கு விஷஊசி ஏற்றியது யார்?
யார்? யார்?
உரத்துக் கேட்டுப்பாருங்கள்.
சிவனொளிபாத மலையின் சாரலில்
உங்கள் பெயர்களே எதிரொலிக்கும்.
களனி கங்கையின் கரைகள் எங்கும்
மூங்கில் மரங்கள் உங்கள் முகத்துக்கு கைநீட்டி
நீங்களென்றே குரலெழுப்பும்.
பாணந்துறையில்
கோவில் குருக்களின் பச்சை இரத்தம் பாய்ந்தபோதே
சிங்களம் விழிகளைத் திறந்திருந்தால்....
இந்த வில்லங்கம் வந்திருக்க மாட்டாது.
சுருட்டுக்கடைகளுக்குத் தீமூட்டியபோது
உங்களில் ஒருத்தனுக்காவது
தமிழனும் மனிதனாகத் தெரிந்திருந்தால்......
ஆலமரத்தின் விழுதுகள் அறுந்து
ஆணிவேரே ஆடியிருக்க மாட்டாது.
இன்றுகூட என்னவாம்?
உண்மையின் உயிர்நிலை தெரியவில்லையே.
சலுகைகளைத்தானே உரிமைகள் என்று
தப்புக்கணக்குப் போடுகிறீர்கள்.
வடக்கும் கிழக்கும்,

இணைப்பும் பிரிப்பும்
எங்களுக்கு எதுவுமே புரியவில்லை.
வடக்கும் கிழக்கும்
பழைய இலங்கையின் பிரதேசங்கள் என்று
உறுதி எழுதுவதை உதறித்தள்ளுங்கள்.
"தமிழரின் தாயகம்" இது என்பதை ஏற்றுக்கொள்ளுங்கள்.
பேச்சுக்களில் பிரச்சினையே இருக்காது.
பிரபாகரன் ஒரு தனிமனிதனின் பெயரல்ல
எமது தேசிய விழிப்பின் தோற்றுவாய்.
சலுகைகளுக்குத் தட்டேந்திய வரலாற்றை
உரிமைதேடும் திசையில் திருப்பிய காலத்தின் கல்லணை.
தென்றலின் சிறுகால்களில் கூட
புயலின் வேகத்தைப் பூட்டிய பிதாமகன்.
பிரச்சினைகளின் மையப்புள்ளியைப் புரிந்துகொண்டு
பேசவருபவர்களே வருக!
பிரபாகரனின் கைகள் வரவேற்கும்.
வடக்கு என்பது வடதமிழீழம்.
கிழக்கு என்பது தென்தமிழீழம்.
இணைக்கும் இடமே இதயபூமி.
பிரிப்பதென்ற பேச்சுக்கே இடமில்லை.
நாங்கள் தெளிவாக இருக்கின்றோம்.
உறுதிக்காணிக்காரர் உட்கார்ந்திருக்க
வாடகைக் குடியிருப்பாளர்கள் வழக்காடுகின்றனர்.
எங்கள் மண்ணை இணைப்பதற்கும், பிரிப்பதற்கும்
உங்களுக்கு என்ன வாக்கெடுப்பு?
தாய்க்கு நிகரானது தாயகம்.
கையளவு மண்ணைக்கூட அள்ளுவதற்கு அனுமதியோம்.
சிங்களவர் தலதாமாளிகைக்குள்
இனிமேல் போகலாமா என்று
சர்வசன வாக்கெடுப்பு வைத்தால்
உங்களுக்கு எந்தளவு கோபம்வரும்?
கண்டியும், களுத்துறையும் இணைந்திருப்பதற்கு
தேர்தல் வைத்தே முடிவெடுப்பதெனில்
சிங்களவர்கள் சீறமாட்டார்களா?
அந்தளவு கோபமே எங்களுக்கும்.
கோபத்தின் நியாயத்தைப் புரிந்துகொண்டு;
இறந்தகாலத்தை எரித்துவிட்டு,
திறந்தமனத்தோடு வாருங்கள்.

விடுதலைக்காக விலைகொடுத்து நிற்பவர்களிடம்
சலுகைகளை தட்டிலேந்தி வராதீர்கள்.
உயிர்ப்பூக்களை கிள்ளி எறிந்து
ஈகைச் சுடரேற்றும் எங்கள் மண்ணை
இனியும் ஏமாற்றலாமென்று நினையாதீர்.
"போர் என்றால் போர்
சமாதானம் என்றால் சமாதானம்"
சொன்னவர் இன்னும் சாகவில்லை
உங்களுடன்தான் உள்ளார்.
அதையே நாங்களும் சொல்கிறோம்.
மானத்தோடு தமிழன் வாழ்ந்தான் என்று
ஒரு வரலாறு வேண்டும்.
இல்லையேல்
வீரத்தோடு போராடி வீழ்ந்தான் என்று
ஒரு சரித்திரம் வேண்டும்.
இதுவே எங்கள் இறுதிமுடிவு.
நாங்கள் தெளிவாகவே இருக்கின்றோம்.
ஹொந்தாய் மல்லி!
ஆய்போவன்.

□□

ஆவணி, புரட்டாதி 1994





# பெண்மை இங்கு புலியானதால் புறநானூறு புதிதாய் எழுதப்படுகிறது!

"பெண்ணான மாயப் பிசாசு"
சித்தர்கள் திருவாய் மலர்ந்தனர்.
"தூமகேதெனப் புவிமிசை தோன்றிய
வாமமேகலை மங்கையரால் வரும்
காமமில்லையேல்........"
சொன்னவன் கம்பன்.
"அரக்குமங்கையர் அழகுடல் தழுவியும்..."
பக்தி இலக்கியப் பாவலர் முத்தமிட்டனர்.
"பட்டங்களாள்வதும், சட்டங்கள் செய்வதும்
பாரினிற் பெண்கள் நடத்தவந்தோம்"
சொல்லுக்கு வெடிமருந்துபூசி தீமூட்டினான் பாரதி.
"தாயென்றார்" இராமகிருஷ்ண பரமஹம்சர்.
"சக்தியென்றான்" பாரதிதாசன்.
"பேய்" என்றார்கள் இன்னும் சிலர்.
பூசித்தும் தூசித்தும்
பெண்களைப் புரட்டியெடுத்தனர்
எங்கள் காப்பியக் கவிஞர்கள்;
"ஐயிரண்டு திசைமுகத்து" ஐயன் மனைவி
மண்டோதரியும் போர்க்களம் போனாள்.
குருதிக்கடலில்குளித்த கணவனுக்கு
உருகி அழவன்றி...... போராட அல்ல.

கர்ணன் வீழ்ந்து கண்மூடும் நேரத்தில்
குந்திதேவி 'குருஷேத்திரம்' போனாள்.
போராட அல்ல... மகனென்று பிரகடனப்படுத்த.
புறநானூற்றுப் பாடலிலும்
ஒருதாய் போர்க்களம் ஓடினாள்.
போராட அல்ல.....
மகனுக்கு அம்பு மார்பில்பட்டதா?
முதுகில்பட்டதா?
பட்டிமன்ற விவாதத்துக்குப் பதில்சொல்ல.
"கோதண்டம்" இராமனுக்கு,
"கோடரி" பரசுராமனுக்கு,
"சக்கரம்" கிருஷ்ணனுக்கு,
"கதாயுதம்" வீமனுக்கு,
"காண்டீபம்" அருச்சுனனுக்கு,
காவியங்களெல்லாம் கண்களை மூடிக்கொண்டு
ஆண்களை ஆயுதங்களுடனேயே அவதரிக்கச் செய்தன.
மீசைமுளைத்த தேகத்தில்தானே வீரம் விளையாடும்,
ஆகவே ஆண்மைதான் அதிகாரம் மிக்கது.
பஞ்சப்புலவன் பாரதியின் காலம்வரை
பழைய சாதமே எங்களுக்குப் பரிமாறப்பட்டது.
நேற்றுவரை பெண்மைப் புயல்கள்
அடுப்புக்குள்ளே புகையூதிக்கிடந்தன.
வேலித்துவாரத்தினூடேதான் வெளியுலகைப் பார்த்தன.
அடிவளவுக்குப் போகவும் அடுத்தவரின் துணைநாடின.
எப்படி எழுந்தார்கள்?
கனவிலும் காணாத நிமிர்வு.
நேசிக்கும் காதலனுடன் பேசிமுடிக்க முன்னர்
நூறுமுறைகள் கூனிக்குறுகியவர்.
உரலை உருட்டக்கூட பலமற்றவர்களென்று
கேலிப்பொருளாகிக் கிடந்தவர்,
கட்டெறும்பு கடித்தால் போதுமே
அட்டதிக்கும் அதிரக் கத்தியவர்.
கண்ணுக்கு மை; காலுக்குக் கொலுசு
சின்ன இடையினுக்கு... சிங்காரப் பொன்னாரம்
பட்டுச்சேலை... பவளவாய்ச்சாயம்
மொட்டுவிரியாத முல்லை மலர்மாலை
இந்தளவும் போதுமென இருந்தவர்களைத்தான்

"வல்வைப் பிள்ளை" நிமிரச்செய்தான்.
பெண்களுக்குச் சரியாசனம் கொடுத்தவன் பாரதி.
இன்று அரியாசனம் கொடுத்தவன் பிரபாகரன்.
எப்படி எழுந்தார்கள்?
கனவிலும் காணாத நிமிர்வு.
பூத்துக்குலுங்கிய நந்தவனத்துக்குள்ளே
வானரச்சேனையை ஏவி
பூவையும், பிஞ்சையும் பொசுக்கினான் ஒருவன்.
ஆத்தாள் கண்திறந்தாள்.
மறத்தமிழ் மாதொருத்தி
அரக்கனின் நெஞ்சில் நெருப்பாய் வெடித்தாள்.
எப்படி எழுந்தார்கள்?
கனவிலும் காணாத நிமிர்வு,
கருமேகம் கிழிந்து மழைநீர் சரமான நேரத்தில்
மூச்சுவிட்டால் எதிரியின் முதுகில்படும் தூரத்தில்
காலில் இடறும் கண்ணிவெடிகளைத்தாண்டி
பகைவர்பாடிய படைத்தளத்துள்ளே
எங்கள் தங்கையர் புகுந்தனர்.
"கொற்றவைக் கூத்து" முடிந்த போது
விடிந்தது.
வெற்றி இவர்களின் கையில் விழுந்தது.
எப்படி எழுந்தார்கள்?
கனவிலும் காணாத நிமிர்வு
தொட்டுவிட யாருண்டு? என்ற துணிவில்
பகைவனின் ஒரு கட்டளைக்கப்பல்
எங்கேயும் நிற்பேன் என்ற திமிரில்
நங்கூரம் பாய்ச்சிக்கிடந்தது.
பரந்தகடலில் எவர்போனாலும் இது பார்த்துவிடும்.
பிறகென்ன?
பக்கத்தில் படுக்கும் படகுகள் உயிர்க்கும்
மணலை மீனுக்கு வலைவிரித்தவன் பிணமாவான்.
மறுநாள் ஊதிப்பெருத்த உடல் கரையொதுங்கும்.
இந்தக் கப்பலுக்கு இலக்குவைத்து
வேள்விக்குத் தயாரானாள் வீரமகளொருத்தி.
வெடிமருந்து சுமந்து மீன்குஞ்சு நீந்தியது.
நேரம்கரைந்து காற்றுக் குளிர்ந்தது.
எதிரியின் நெஞ்சுக்கூட்டையும்,

அவனின் இரும்புக் கோட்டையையும்,
தங்கை தவிடு பொடியாக்கினாள்.
கட்டளைக் கப்பலையும் காணவில்லை,
அங்கயற்கண்ணியும் திரும்பவில்லை.
எப்படி எழுந்தார்கள்?
கனவிலும் காணாத நிமிர்வு.
"சாகரவர்த்தனா"
பகைவன் உலாவந்த "கடல் மிருகம்"
தமிழனின் குருதி இதற்குத் தனிருசி.
நளாயினியும், மங்கையும் போர்க்கோலம் பூண்டனர்.
வெடியதிர்ந்து கப்பல் கண்மூடியபோது;
மீசைமுளைத்த கப்பலின் கப்டன்
உயிர்ப்பிச்சை கேட்டுக் கைகளை உயர்த்தினான்.
ஆண்மை அதிகாரம் மிக்கதா?
யார் சொன்னது?
பெண்மை இங்கு புலியானதால்
புறநானூறு புதிதாய் எழுதப்படுகிறது.

□□

ஐப்பசி, கார்த்திகை 1994





*கசெற்றா லுபுஸ்கா*
*சாறே, நைசா*
*மொஸ்கோ போகலாம்*
*வாடா ராசா.*

"போலந்து நாட்டில் நாலைந்து பேர்கள்
புதைக்கப்பட்டார்கள்"
"கசெற்றா லுபுஸ்கா" வெளியிட்ட செய்தியை
நேற்று விடிந்த வேளையில்
காற்று வந்து காதுக்குச் சொன்னது.
முதலில் கேட்ட முற்றத்துத் தென்னை
ஓப்பாரி வைத்தது.
தோட்டத்துத் துலாக்கொடிகள் தேம்பின.
வயல்வெளி வரம்புகள் வருத்தப்பட்டன.
அளவெட்டி வடக்கில்
தோட்டத்தில் நின்ற கத்தரிச்செடி
வெண்டிக் கன்றுக்குச் சொன்னது
"அருமந்த பெட்டை அநியாயச் சாவு"
சுபத்திரா!
சத்தியரதி!
முகம் தெரியாத எங்கள் தங்கைகளே!
பேருரைக்கும் போதே நாவுலர்ந்து போகிறது.
தொண்டைக் குழிக்குள்ளே
சூரைமுள்ளுக் குத்திய வலி.
ஆஸ்மாகாரனுக்கு நெஞ்சடைக்கும் போது
ஏற்படும் அவஸ்தை.

வார்த்தைகள் கூட வரிசைக்கு வராமல்
தூரத்தே நின்று சோகம் கொண்டாடுகின்றன.
போலந்து நாட்டின் எல்லையில்....
94 ஓகஸ்ட் 27 நள்ளிரவில்
ஐஸ்போல உறைந்திருந்த 'நைசா' நதியில்
ஜேர்மனியக் கனவுகளுடன் இறங்கிய பூரணிகளே!
'சாறே'அரச மயானத்தில்
யாரோ அநாதைகளைப் புதைப்பது போலல்லவா
உங்களுக்கு மண்போட்டு மூடியிருப்பார்கள்?
நாங்களெல்லாம் இங்கிருக்கும் போது
நீங்களேன்
அந்நியதேசத்தில் அநாதைகளாயினீர்?
ஈழம் எரிகின்றதென்றுதானே
தூரப்பறக்கத் துணிவு கொண்டீர்கள்?
இங்கு நாலடி வைப்பதற்குள்
காலடியில் இடறும் சடலங்கள் ஏராளம்.
சாவு மட்டுமே தாராளம்.
மரணத்துக்கு கதவுகளைத் திறந்து விட்டு
மற்ற அனைத்துக்கும்
எதிரி மதில் கட்டி மறித்துள்ளான்.
ஆனாலும் தமிழீழம்....
அழும் ஈழம் அல்ல.
நாங்கள் கண்ணீரைக் கைவிட்டு கனகாலம்.
நீர்வழிந்த கண்களிலே......நெருப்பு மூட்டி
தார் உருக்க தணலெடுத்துக் கொண்டிருக்கின்றோம்.
என்றாலும்.
உங்களுக்காக எங்களூர்கள் உருகுகின்றன.
விழுதுகளுக்காக வேர்கள் விம்முகின்றன.
சுபத்திரா!
சத்தியரதி!
இங்கிருந்த உங்களை இழுத்துச்சென்றவன் யார்?
அப்பனா? அண்ணனா?
அடுத்தவீட்டுப் பெரியப்பா பிள்ளையா?
கடிதமெழுதி வாவென்றழைத்தவன் கணவனா?
காதலனா?
யாரென்று சொல்லுங்களேன்.
சொல்லவே மாட்டீர்களா?
கொழும்புக்கு உங்களை அள்ளிச்சென்று
கட்டுநாயக்காவில் கையசைத்து

விமானமேற்றி விட்டவன் யார்?
முகவர்கள் எப்போது இயமர்கள் ஆனார்கள்?
'மொஸ்கோ சுரேசு '
'போலந்து ராசா'
இவர்களை நம்பியா ஆற்றில் இறங்கினீர்?
இடுப்பளவு நீரென்று 'பாகிஸ்தானி' சொன்னானாம்
கொடுக்குக் கட்டிக்கொண்டு குதித்தீர்களாம்.
சோகத்தில் கூட எங்களுக்கு கோபம் வருகிறது.
இங்கே உங்கள் தங்கைகளைப் பாருங்கள்.
அங்கயற்கண்ணி,
நளாயினி,
மங்கை
கப்பலை எரித்து அற்புதம் படைக்கின்றனர்.
நீங்கள் போய்
போலந்து நாட்டில் பிணமாகிப் போகின்றீர்.
"சகீக்கி வடிகாலில"
உங்கள் சடலங்கள் ஒதுங்கிய போது
மொஸ்கோ சுரேசும், போலந்து ராசாவும்
வாவென்றழைத்தவனும் வரவில்லையே,
அநாதைப்பிணம் போலல்லவா
அடக்கம் செய்யப்பட்டீர்.
பால் குடித்த முலைக்காம்பை உதறிவிட்டு
பாவாடை கட்டித்திரிந்த தாவாரத்தை மறந்துவிட்டு
பறந்து போனீர்கள்.
பங்களாதேசியும், பாகிஸ்தானியும்
'எங்கடை கழிசறைகள் சுரேசும், ராசாவும்'
சொன்ன இடத்தில் சேர்ப்பார்கள் என்றா
நாட்டை விட்டு நடந்தீர்?
தாய்லாந்திலும், மொஸ்கோவிலும்
இன்னும் இன்னும் ஏதேதோ நாட்டிலும்
எத்தனை வதைபட்டு இருந்தீரோ
யாரறிவார்?
கண்மணிகளே!
எங்கள் தாயகம் உங்களுக்கு
என்ன துரோகம் செய்தது?
இங்கிருந்து போங்களென்று உங்களைக் கலைத்தது எது?
ஏன் போனீர்கள்?
கட்டடங்கள் இடிந்துள்ளது தான்

*என்றாலும்...*
*இங்கே பட்டினியுடன் யாரும் படுத்ததில்லையே!*
*எட்டிக் கால்வைக்கும் எதிரியைத் துரத்த*
*சுற்றிவர உங்கள் சுற்றம் இருக்கிறதே!*
*ஐரோப்பிய நாட்டில் அப்படி என்ன ஆனந்தம்?*
*அடுத்தவன் காலடியில் அகப்பட்டுக் கிடப்பதில்*
*அத்தனை இன்பமென்று சொன்னவன் யார்?*
*சரி போனீர்கள்,*
*போயிருந்தாலாவது பேசாமல் இருக்கலாம்*
*பிணமாக அல்லவா போய்விட்டீர்.*
*"எல்லையை மீறி எவரும் வரவேண்டாம்".*
*நாய்க்கு அறிவிப்பு போட்டது போலல்லவா*
*வாசலில் எழுதி வைத்துள்ளான்.*
*அதன் பிறகும் நதியைத் தாண்ட முயன்றீர்கள்.*
*'நைசா' உங்களுக்கு நாசம் செய்து விட்டது.*
*தாயின் மடிச் சுகத்தில் தாலாட்டுக் கேட்டபடி*
*வாய்விட்டுச் சிரித்திங்கு வாழ்ந்திருந்த குருவிகளே!*
*பெற்ற வயிறு புலம்பித் தவிக்கிறது*
*மற்றவர்களுக்கு உறவின் மகிமை தெரியாது.*
*எல்லோருக்கும் சேர்த்து ஒரு வார்த்தை*
*'இங்கே புலரத்தொடங்கும் பொழுது ஆரம்பம்.'*
*அங்கே இருளத் தொடங்கும் வேளை ஆரம்பம்.*
*வாருங்கள்.*
*நீங்கள் வராது விட்டாலும் பரவாயில்லை.*
*இங்கிருந்து வாருங்களென்று எவருக்கும் எழுதாதீர்.*
*கோடி புண்ணியம் உங்களைத் தேடிவரும்.*

□□

தை, 1995.

**குறிப்பு**

* கசெற்றா லுபுஸ்கா ( Cassetta Lubuska ) - போலந்து நாட்டுத் தினசரி.

** சாறே ( Zary ) - போலந்து நாட்டு அரச சவச்சாலை.

*** நைசே ( Neisse ) - போலந்து-ஜேர்மனி எல்லையிலுள்ள நதி.

**** சகிக்கி ( Zasicki) - பிணங்களொதுங்கிய வடிகாலுள்ள இடம்.

1. மொஸ்கோ சுரேஷ்
2. போலந்து ராசா

} இலங்கையரை ஐரோப்பிய நாடுகளுக்கு அனுப்பும் யாழ்ப்பாணத்துத் தமிழ் முகவர்கள்



# நரபலி எடுத்தவனும், உயிர்விலை கொடுத்தவனும் தராசுத்தட்டில்..... சமனாக முடியாது.

மேகக்கூந்தல் காற்றில் விரிய
வந்திறங்கும் வரமளிக்கும் தாயே!
வருக.
"ஒலிவ்" கிளை சுமந்த சமாதான தேவதையே!
உலங்குவானூர்தியில் வந்திறங்குகின்றாயே
வணக்கம் வருக.
உன் பூம்பாதங்கள் புண்படலாகாதென்று
செங்கம்பளம் விரித்து வைத்துள்ளோம்.
அச்சமின்றி நடந்து வருக.
முள்ளேதும் குத்தி விடக்கூடுமென்று
நேற்று
பாதையெங்கும் பஞ்சு கொண்டு ஒத்தியெடுத்தோம்.
மஞ்சள் தெளித்து மலர்தூவி வைத்துள்ளோம்.
பேச்சுவார்த்தைக்கு வந்த பேரழகியே!
புன்னகைத்தபடி வருக.
பார்:
உன்பக்கத்தில்
யார் நிற்கின்றார்கள்?
எங்கள் சீருடைச் செல்வங்கள்.
'மூத்திரம் பெய்யத்தெரியாத பையன்கள்'
இவர்களை

தெற்கில் இப்படித்தான் சொல்லுகின்றனர்.
பக்கத்தில் அழைத்துப் பார்த்துக்கொள்.
மீசை முளைக்காத முகங்களைப் பார்.
உற்றுநோக்கினால்....உன்விழிகளே கூசும்.
நெருப்பைச் சுமக்கும் நிலவுகள் இவர்கள்.
பூநகரிக்குள்ளே புகுந்த
புயல்கள் இவர்கள் தான்.
மண்கிண்டிமலை இவர்களிடம் தான் மண்டியிட்டது.
சிங்கத்தின் பிடரிமயிரைப் பிடித்து
உலுப்பிய சிறுவர்கள்.
எதிரி இறங்கினால் எரிந்து போகக்கூடிய
மணலாற்றிலே பாயும்
அனலாறு இவர்கள் தான்.
அனிச்சம் பூவிலும் மென்மையான முகங்களை
கொலை வெறியர் என்று ஏன் குறிப்பிடுகின்றனர்?
இந்தப் பூக்களா யுத்தப் பிரியர்கள்?
காலத்தின் சுமையை தோள்களிற் சுமக்கும்
'இந்திரசித்துக்கள்' தானே இவர்கள்.
மேசையில் அமர்ந்து பேசலாம் தாயே
வலது காலை எடுத்து வைத்துப் படியேறி
நேரே நிமிர்ந்து பார்.
சுவரில் தெரிவது யார்?
புலித்தலைவன் பிரபாகரன்.
உற்றுப்பார்
முகத்தில் உலகமே தெரியும்.
இந்த முகத்தையா கெந்தகம் என்றார்கள்?
இனிப் பேசத்தொடங்கலாம் பெருமாட்டி.
பூநகரிப்பாதை திறப்பு.
பெற்றோல் மீதான தடையை நிறுத்து.
செஸ் விளையாட தெரியுமா சீமாட்டி?
ஆயின் காயை நகர்த்து.
தவளை பாய்ந்த தங்கத்தை கேட்பதினால்.....
நிலைமை மோசமென்று நினையாதே.
புலிகளின் பலம்தான் பேசுகிறது.
பலவீனம் மேசைக்கு வரவில்லை.
பேச்சுவார்த்தை தோற்றுப்போனால்.........
தோற்ற இடத்திலிருந்து தொடருமெம் போராட்டம்.
பேச்சுவார்த்தை கூட போராட்டம் தானே.
தூதுக்கு வந்த தேவதையே!

ஏது பேசுகின்றாய்.
வாயைத் திறந்து வார்த்தைகளை வரவிடு.
அடிமனதின் ஆழத்தைக் காட்டு.
பொய்யாகக் கைகுலுக்குவதிலும் பார்க்க
போர்க்களத்தில் சந்திப்பதே பெருமைதரும்.
குருவிகள் கொத்துப்பட நேர்ந்தால்
குறிப்பெடுத்துக் கொள்ளுதற்கு
வெளிநாட்டிலிருந்து
வெள்ளைக் கழுகுகள் வந்திருக்கின்றன.
நல்லது தாயே.
பக்கத்து வீட்டுப்பாம்பிலும் பார்க்க
பசுபிக் சமுத்திரத்து 'திமிங்கிலங்கள்'
பரவாயில்லை.
சரி பூநகரி பற்றியே பேசுவோம்.
குரங்குவால் போல......
குடாக்கடலில் நீளும் பாதையிலும்
இறங்குதுறையிலும் இராணுவம் நிற்கிறது.
கயிற்றால் முறுக்கி
கழுத்தைத் திருகிக்கொண்டு
உயிரைப்பற்றி எப்படி பேசலாம்?
விடுதலையின் கரங்களில்
விலங்கைப் பூட்டிவிட்டு
சிறையுடைப்புக்கு எப்படித் தேதி குறிக்கலாம்?
பூநகரி வெறும் பொட்டல் வெளியல்ல.
தமிழர் தாயகத்தின் சான்றுகள் புதைத்துள்ள
பழைய தலைவாசல்.
ஆழத்தோண்டினால் அரண்மனை தெரியும்.
வாழ்ந்து முடிந்த வரலாறு தெரியும்.
நந்தி பதித்த நாணயம் கிட்டும்.
சொந்தம் எமதென்று 'தோம்பு' கிடைக்கும்.
கொடியுடன் ஆண்ட கொற்றவையின்.
அத்திவாரத்தில் "அவர்கள்" மலம் கழிக்க
எப்படித்தாயே! இணக்கம் காணலாம்?
முப்பது வருட முகமுறிவையும்,
நூலிலை கூட இற்றுப்போன உறவையும்,
நினைத்தவுடன் நெளிவு தட்டி
நிமிர்த்த முடியுமா?
விட்டுக்கொடுப்பும்
விரிந்த மனப்பான்மையும்

தட்டுப்பாடான "பேரினவாத சந்தையில்"
எப்படி 'இணக்கத்தை' இலகுவில் வாங்கலாம்?
நரபலி எடுத்தவனும்,
உயிர்விலை கொடுத்தவனும்,
தராசுத்தட்டில் சமனாக முடியாது.
நீதிக்கான போருக்கும்,
நியாயத்துக்கான பேச்சுக்கும்,
தர்மமே தலைமை தாங்க வேண்டும்.
பூநகரி ஒரு குறியீடு.
பூநகரி ஒரு சோதனைக்களம்.
எதையெதை "அவர்கள்"எமக்குத் தருவார்கள்
என்பதை அறியும் அளவுக்கருவி.
பேச்சுக்கு வந்த பெருமாட்டி!
போய்ச்சொல்லு.
நல்ல சமிக்கை ஒளிகாட்டி,
பூநகரிப் பாதையின் பூட்டுக்களைத் திறந்து.
பெற்றோல் வண்டியை முதலில்
விடச்சொல்லு,
அதன்பிறகே
நடப்பன யாவும் நல்லன ஆகும்.
நன்றி.
சென்றுவருக.

□□

மாசி , 1995



புதுவை இரத்தினதுரை



# மீண்டும் கொத்திப் பேய் சொத்தி முருங்கில் ஏறுகிறது.

போலிச் சாமியின் காவி வேட்டி
சாயம் கரைகிறது.
குரங்கு போட்டிருந்த மனித முகமூடி
கழன்று விழுகிறது.
சமாதானச் சங்கின் சுருதி கலைகிறது.
மீண்டும்.....
"கொத்திப் பேய்"
சொத்தி முருங்கில் ஏறுகிறது.
இனிக் கத்தும்.
கல்லால் எறிந்து சண்டைக்கிழுக்கும்.
வெள்ளைக் கொடிக்கு
கொள்ளைக் காரர்கள் குருதி பூசுகின்றனர்.
கொம்பு சீவிய "சிங்கக்காளைகள்"
சண்டைக்குத் தயாராகிவிட்டனர்
புலுமச்சிலந்திக்கும், நட்டுவக்காலிக்கும்
பிறந்த புடையன் பாம்பின்.......
நச்சுப் பற்கள் நமக்குத் தெரிகிறது.
சாந்த சொரூபத்தின் சுயரூபம்
"டிரகுலா" பற்களுடன் கூடிய கோரமுகம்.
"எல்லாம் முடிஞ்சது தன்னானே
இனித் திருக்கையும் நெய்யும் தின்னானே".
நல்ல பழமொழி நமக்கும் பொருந்தும்.
கூத்துக்காரர் ஒப்பனையைக் கலைத்து

உண்மை முகத்தை உலகுக்குக் காட்டினர்.
நன்றி.
"ஒரு பொல்லாப்பும் இல்லை
எல்லாமும் எப்பவோ முடிஞ்ச அலுவல்"
" தேரடிச்சாமி " தீர்க்க தரிசி.
நாங்கள்
ஆராத்தித் தட்டில் குங்குமம் கரைத்து
வாசலுக்கழைத்து வரவேற்பளித்தோம்.
வந்திறங்கிய விமானப் பல்லக்கில்
புழுதி படிந்த போது கூட
முத்தத்தாற்தானே ஒத்தியெடுத்தோம்.
உங்களுக்கு பாதம் நோகுமென்று
பஞ்சினால் அல்லவா பாதை சமைத்தோம்.
தலைவன் எழுதிய "சமாதான ஓலையை"
வெள்ளைப் புறாக்கள் எடுத்து விரைந்தன.
தங்கையிடம் தமிழீழமா கேட்டோம்?
இல்லையே
ஒற்றையடிப்பாதை ஒன்றையே கேட்டோம்.
வயிற்றுப் பசிக்கு வலைவீசக் கேட்டோம்.
இறைத்துப் பயிர் செய்ய எரிபொருள் கேட்டோம்.
சலுகைகளைக் கூடத் தரமறுப்பவர்களிடம்
உரிமைகளை எப்படி எதிர்பார்க்கலாம்?
தெற்கில் தேர்தல் திருவிழாவின் போது
"சின்னமேளம்" சிரித்துக்கொண்டது.
பக்கவாத்தியங்கள் "பல்லவி" வாசித்தன.
"சொர்ப்பன சுந்தரி" யின் நயன பாஷையில்
பலருக்கு பழையது மறந்து போனது.
இன்று:
உண்மை முகத்திலடிக்கும் போது,
அம்மாவும், அம்மம்மாவும்
சும்மா என்பது தெரிய வந்தது.
புத்தனுக்கு ' அரச நிழலில்' ஞானம் விடிந்தது.
தமிழனுக்கு 'அனுபவ நிழலில்' அறிவு பிறந்தது.
இனி என்ன செய்வது?
எடுத்த காவடியை இறக்கியே தீரவேண்டும்.
போர் என்றால் போர் என்றான். 'பழைய கிழவன்'.
பேச்சுவார்த்தை முறிந்தால்
போர் என்றான் 'புதிய கிறுக்கன்'
இது தமிழர் மீதான போர்ப் பிரகடனம்.
தமிழனே என்னடா செய்யப்போகிறாய்?
கழற்றி வைத்த போருடையை

எடுத்து மாட்டு....
வீரவாளுக்கு வேலை வந்துவிட்டது.
கசாப்புக்கடை மேசையிற் கூட
கருணை பிறக்கலாம்.
பேச்சுவார்த்தை மேசையில் மட்டும்
உரிமை கிடைக்காது.
இது புதிய வேதம்.
அனுபவம் தந்த ஆய்வின் முடிவு.
மட்டக்களப்பில் சுற்றிவளைப்பு.
தலைநகரில் தமிழர் கைது.
பொன்னாலைக் கடலில் போனவர் கைது.
வவுனியாவில் புதிய கெடுபிடி,
என்ன இது?
கையெழுத்திட்ட ஒப்பந்தம் என்னாச்சு?
கண்காணிப்புக் குழுவின் கண்களில்
கறுப்புத்துணியா கட்டியிருக்கிறது?
பெரிய அளவில் தொடர்கிறது தமிழர் வதை
எப்படிப் பொறுக்கலாம்?
புலிகள் பேச்சுக்குப் போனதை
இழிவாகக் கருதியா இந்த எடுத்தெறிவு?
பலவீனப்பட்டதாலே தான் பணிவு
என்று நினைத்தா இந்த உதாசீனம்?
பிரபாகரனின் கவச குண்டலத்தை
எந்தக் 'குந்தி' யும் வந்து எடுத்துப் போகவில்லை.
ஆயுதப் போரில் அலுப்புத்தட்டி
தந்ததை வாங்கித் தலைகுனிந்து கொள்ள
பிரபாகரன் 'அரபாத' இல்லையென்பதை
அலரிமாளிகைக்கு அறிவித்துக்கொள்கிறோம்.
கரும்புலி அணியைக் கலைத்து விட்டோம் என்று
அவர்களுக்கு
கனவிற் சொன்ன கடவுள் யார்?
ஏறிமிதிக்கும் இளம்புலி வீரரை
வேறு வேலைக்கா விட்டுள்ளோம்?
மூச்சுக்காற்றே நெருப்பு மூட்டும்
பெண்கள் படையணி
கண்ணுக்கு மைபூசியா காலத்தைக் கழிக்கிறது?
கடற்புலிகள் அரிசி ஏற்றிக்கொண்டு
அமெரிக்காவுக்கா போய்விட்டார்கள்?
இல்லையே?
போருக்குத் தயாராக
சீருடையிற்தானே திரிகின்றனர்.
தங்கச்சி தப்புக்கணக்குப் போட்டுவிட்டாள்.

ரத்வத்தை குடிப்பதற்கு ரத்தமா தேவைப்படுகிறது?
அட பாவி மனுஷா!
முந்தியிருந்த மந்திரிகள் முணுமுணுப்பது
அனுருத்தவின் காதுகளை அடைவதில்லையா?
தங்கையே!
ஈழத்தமிழரை
உன் 'அப்பன்' அடக்க நினைத்த போது
காலி முகத்திடலில் சத்தியாக் கிரகம்.
தமிழரை
உன் 'ஆத்தாள்' அழிக்க புறப்பட்டபோது
துப்பாக்கிப் போர் வேர் பிடித்தது.
இன்று உனக்கும் அந்த நினைப்புத்தானா?
எச்சரித்துக்கொள்கிறோம்.
புயலடிக்கும்.
பூகம்பம் வெடிக்கும்.
மின்னல் வெட்டி முழக்கம் பிறக்கும்.
பொங்கிப் பிரவாகிக்கும் போராட்ட நதியின்
கரையெங்கும்
நீங்கள் சருகாய் ஒதுங்குவீர்.
சின்னக் காற்றுக்கே கிளை முறிந்து போக
தமிழன்
உன் வீட்டுக் கிணற்றடியிலுள்ள ஈரப்பலா அல்ல.
இது வைரப்பனைகள் வளர்ந்துள்ள பூமி
புயலைப் பார்த்து பனைகள் புன்னகைக்குமே தவிர
தலையைக் கவிழ்ந்து சரிந்து விழமாட்டாது.
தங்கையே!
தமிழர் கரும்பனைகள் என்பதை
கண்ணில் படுமிடத்தில் குறித்துக்கொள்.
போர்க்களத்திலா சந்திக்க விரும்புகிறாய்?
என்ன செய்வது
சத்தியத்துக்காக நாங்கள் கத்தியை எடுக்கின்றோம்.
தர்மத்துக்காக நாங்கள்
விலைகொடுக்கப் புறப்படுகின்றோம்.
தர்மம் வெல்லும்.
சத்தியம் வெல்லும்.
சம்ப வாமி யுகே! யுகே!

□□

பங்குனி, 1995.





# தாகத்துக்குத் தண்ணீர் தேடினோம் கானல் நீரே கண்ணுக்குத் தெரிந்தது.

தமிழனே!
தாகத்துக்குத் தண்ணீர் தேடினோம்.
கானல்நீரே கண்ணுக்குத் தெரிந்தது.
அமைதிக் குஞ்சுக்காக அடைவைத்திருந்தோம்.
கூட்டுக்குள்ளேயே எல்லாம்
கூழாகிப் போனது
பறந்து வந்த பருந்துக்கு விருந்து வைத்தோம்.
எச்சத்தை எம் தலையில் இட்டுவிட்டு
எழுந்து போனது.
நாகபாம்புக்கு மகுடி ஊதினோம்.
நன்றாக ஆடிவிட்டு
நச்சுப் பற்களையே நமக்குக் காட்டியது.
மரங்கள் துளிர்த்து வசந்தம் வருமெனக்
காத்திருந்தபோது
அக்கினிக் காற்றின் அனலே வீசியது.
அழகிய கனவு கலைந்து விடுமென்று
விழி மூடிக்கிடந்தோம்.
கனவு மெய்ப்படவில்லையே.
பிச்சைவாங்குவதற்குப் பேரா பேச்சுவார்த்தை?
முச்சை அறுந்து விட்டது
இனிநூலை விட்டுக்கொடுத்தாலும்

பட்டம் ஏறாது.
மேடைக்குப் புதிய நடிகை வந்தாள்;
நல்ல நடிப்புடன் நாடகமாடினாள்.
கதையற்ற கலைப்படைப்பு என்பதால்
"பெரிய படிப்புக்காரி" யின் பொய் வேடம்
நீண்டகாலத்துக்கு நிலைக்கவில்லை
இடைவேளையுடன் திரை விழுந்தது.
ஈழத்தமிழர் ஏமாளிகள் என்ற கதை
திருத்தியெழுதப்பட்டதை
அவர்கள் தெரிந்து கொள்ளவில்லை.
இனி அமைதிக்கு வந்த அன்னப்பறவை
குண்டு சுமந்து வந்து கொட்டும்.
கொட்டட்டும்.
விடுதலை நாற்று
குருதி நீரிற்தான் விளையுமென்றால்.....
இரத்தம் சிந்துவதற்கு என்ன பெயர் தெரியுமா?
வரலாற்றுக் கடமை.
உயிர்விலை கொடுத்துத்தான் உரிமைபெற முடியுமானால்
சாவுக்கு என்னபெயர் தெரியுமா?
தலைமுறைக்கான விலைகொடுப்பு.
நேற்று பேச்சென்ற போது பெருமைப்பட்டவனே!
இன்று போரென்ற போது மட்டும்
ஏன் பேசாமற் கிடக்கின்றாய்?
உலகப் பரப்பெங்கும் ஒதுங்கி வாழும் தமிழனுக்கு
வேர்விட ஒரு விளைநிலம் வேண்டும்.
அது தமிழீழமாக அமையட்டும்.
முகவரியற்ற நாடோடிக் கூட்டமாக
தமிழன் முகமிழந்து போகக்கூடாது.
நிமிர்ந்த வாழ்வு வேண்டும்.
அது இங்கேயே முளை கொள்ளட்டும்.
சோழன் கதையும் எல்லாளன் கதையும்
மேடைக்கதைகள் ஆகக்கூடாது.
அவை நீளும் கதைகள் ஆகட்டும்.
காத்துக்கிடந்த காலம் விடிந்துள்ளது.
மூத்தமகனைக் கூப்பிட்டு முத்தமிடு.
கொற்றவையின் கோவிலுக்குக் கூட்டிப்போ.
நெற்றியில் திலகமிடு.
ஆனந்தக்கண்ணீர் வழிந்து முகம் நனைக்க

வழியனுப்பி வைத்துவிட்டு
களத்திலிருந்து வரும் செய்திக்கு காத்திரு.
அடுத்தமகனுக்கும் அழைப்பு வரலாம்.
தாயே! எழுந்து முற்றத்துக்கு வா.
மகளுக்கு மஞ்சள் நீராட்டு.
உதிரப்பூவை உச்சிமுகர்.
"அரியாத்தை" யின் அடுத்த வாரிசே!
மடிசுமந்த திருமகளை வழியனுப்பி விட்டு
வாசலிலே..... காத்திரு
எதிரியை எரித்துவிட்டு திரும்பி வருவாள்.
குங்குமம் கரைத்து வைத்திரு
ஆராத்தி எடுக்க வேண்டும்.
அறுபது வயதுள்ள அப்புவுக்கு....
இது அழைப்பு.
போர்முரசம் கேட்கும் பொழுதில்... இது என்ன?
சுருட்டா.....தூக்கி எறி.....
கூச்சம் உனக்கெதற்கு?
ஆச்சியைக் கூப்பிட்டு அணைத்தவளை முத்தமிடு.
காணி உறுதிகளை பேரனிடம் கையளித்து
நானிறந்தால்......
நீயென்று நாலூரும் கேட்கச் சொல்.
மானம்போய் ........வீரம்போய்......
மண்டியிட்டு வாழ்வதிலும்
போராடிச்சாவதுவே பெருமை தரும்.
"அரைநாண்" கயிற்றை அவிழ்த்துக்கட்டு
இரைதேடும் புலியாக......எழுந்து வெளியே வா.
தங்கையே!
எங்கே போகின்றாய்?
ரியூட்டரிக்கா?
சந்தோசம்.
நன்றாக படித்து டாக்டராகு.
நல்ல மதிப்பு வரும்.
புண்ணுக்கு மருந்திடுதல் புனிதம்.
ரணப்பட்ட
மண்ணுக்கு மருந்திடவும் வேண்டும்.
மறக்காதே.
பல்லக்குத் தூக்குவதற்குப் படிப்பெதற்கு?
அடிமைக்கு அறிவிருந்தும் ஆவதென்ன?

தன்மானம் வேண்டுமடி தங்கச்சி.
போராடிக்கொண்டு படி.
படித்துக்கொண்டு போராடு.
நில்லடா தம்பி!
உன்னை நிறுத்து விற்றாலுங் கூட
நல்லவிலைக்கு நாளைக்கே விற்கலாம்.
பத்துப் பனைமரத்தைக் கட்டியிழுத்து
கொத்தியெரிக்கவல்ல....கொழுத்த பருவத்தில்
சும்மா திரிகின்றாய்.
முகத்திலும் நெஞ்சிலும் உனக்கு மயிர் முளைத்தது ஏன்?
வேண்டுமடா தம்பி வீரம்.
மானம் பெரிது.
பார், வாசல்வரையும் எதிரி வந்துள்ளான்.
நீ குடித்த தாயின் முலையில்
தண்ணீரா இருந்தது.....?
போ! நீயே புயல்;
எழுந்து போராடு!
கதவை அகலத்திறந்து
பேச்சுக்குக் காத்திருந்தோம்.
வாசலுக்கு எவரும் வரவில்லை.
வந்தவர்களும்
பூச்சி பிடிக்கும் அதிகாரம் கூட அற்றவர்கள்.
காலக்கெடு மீளக்கொடுத்தால்
ஜாலக்காரிக்கு....அது வாய்ப்பாகிவிடும்.
போர்முரசு முழங்கிப் படை புறப்பட்டாச்சு
வாழ்வதானால் எல்லோரும் வாழ்வோம்.
வீழ்வதானால் எல்லோரும் வீழ்வோம்.
இரண்டுக்கும் வரலாறு இருக்கும்
எவனாவது எழுதுவான்.

□□

சித்திரை, 1995.





# தாயகத்தை காதல் செய்.

அட பைத்தியக்காரக் கவிஞனே!
தாயகத்தை எப்படியடா காதலிக்க முடியும்?
பெண்ணை ஆணும்
ஆணைப் பெண்ணுமே ஆராதிக்க முடியும்.
மண்ணுக்கு மாலையிட முடியுமா?
கட்டித்தழுவி முத்தமிட முடியுமா?
தாயகத்தைக் காதலிக்கச் சொல்லும் கவிஞனே!
உனக்குப் புத்தியென்ன பேதலித்து விட்டதா?
உண்மைதான்.
அன்னைபூமி மீது எனக்கு அளவற்ற காதல்.
எப்படியென்று எடுத்துச்சொல்ல முடியாது
அது கற்பனை கடந்தது.
என் தாய்மடி எத்தனை அழகு?
காலை சேலைகட்டி வந்து
பூச்சூடிப் புன்னகைக்கும் போது
காணக் கோடி விழிகள் வேண்டும்.
மாலைவந்து மயக்கும் எழிலில்
என்மனம் வசமிழந்து போகும்.
இங்கு வேர்பிடித்த ஒவ்வொரு புல்லையும்
நான் விரும்புகின்றேன்.
விரிந்து கிடக்கும் பரந்த வயல்வெளிகளையும்

வந்து கரைதழுவி
தாயவள் சேலை நனைத்து விளையாடும்
கடலையும் நான் காதலிக்கின்றேன்.
வாசமற்றதாயினும்
பூவரசம் பூக்களை நான்
பெரிதும் விரும்புகிறேன்.
பனைகளே எனது கற்பனைச் சுனைகள்.
தென்தமிழீழத்தின் திசையை வணங்குவேன்.
மட்டக்களப்பின் மடியில் தவழ்வேன்.
அங்கு
முழுநிலாக் காலத்தில்
களத்து மேட்டில் கேட்கும் பாட்டும்
கும்மியும், குரவையும்
அம்மானையும், வசந்தன் பாட்டும்
எனக்கு இறக்கை கட்டிப் பறக்க வைக்கும்.
முறுக்கேறிய இராவணன் பூமி
திருக்கோணமலை.
அது அழகின் சிகரம்.
நிலத்தின் முலையென நிமிர்ந்த
கோணேசர் மலைக்கு
பின்னரே வெய்யில்
'வாணிஸ்' பூசும்.
தம்பலகாமத்து நெல் வயல்களில்
வெட்டியடுக்கிய சூட்டின் வாசம்
மூக்கு நுனியை முத்தமிடும் போதே
நாக்கில் நீரூறும்.
பச்சையரிசிச் சோறு படுருசி.
பன்குளத்துத் தயிருக்கு எது நிகர்?
வன்னி மண்ணுக்கு என்ன குறை?
கொம்புத் தேனும்,
பாலைப்பழக் காலத்துப் பன்றிக் கொழுப்பும்,
நந்திக்கடலின் நண்டும்
உண்டு மகிழ்ந்தவனுக்கே உண்மை தெரியும்.
"வங்கம் மலிகின்றகடல் மாதோட்டம்"
எங்களது என்ற
தேவாரப் பாட்டைச் காதோரம் ஏற்று.
பாலாவியின் கரையில் பாடு;
காற்றில் கலந்து உலகமெங்கும் உலா வரட்டும்.
தாயகத்தைக் காதல் செய் என்றேன்.

நிலத்தைக் காதலிப்பது எப்படியென்று
நீ ; என்னைக் கேட்கிறாய்.
தமிழனே!
தாய் மடியில் நீ புரண்டெழவில்லை.
அன்னை மண்ணை அன்பு செய்யவில்லை.
தாயகத்தைக் காதலிக்கவில்லை.
அதனாற்தானே...
ஆறுகோடி தமிழர்கள் இருந்தும்
உனக்கொரு 'தனிவீடு' கிட்டவில்லை,
அகதியாகி
எத்தனை தெருக்களில்
அலைகின்றாய்.
இரவற் திண்ணையிற்தானே
இன்றும் படுக்கின்றாய்.
மூக்குச் சீறக்கூடப் பயந்து
பேச்சிழந்து கிடக்கின்றாய்.
பகைவனின் பாதணிகளுக்குக் கூட
பூசை செய்கின்றாய்.
குடங்கிக் குடங்கிக் கூனாகிப்போனாய்.
அட தமிழனே!
தாய் நிலத்தைக் காதல் செய்து பார்
உன் மேனியிலிருந்து பன்னீர் விசுறும்.
நரைத்த மயிர்கூடக் கறுக்கும்.
ஆயிரம் கோடிச் சூரியப் பிரகாசம்
உன் கண்ணிலிருந்து வீசும்.
நீ எடுத்து வைக்கும்
ஒவ்வொரு காலடிக்குள்ளேயும்
நிலம் கசிந்து நீரூறும்.
கீரிமலைக் கேணியை
யாரிடமோ கொடுத்துவிட்டு
தாயகத்தைக் காதலிப்பது எப்படியென்று
என்னிடம் கேட்கின்றாய்.
தாயகம் பேசாது.
ஓரக்கண்ணால் வெட்டி உருவேற்றாது.
கடிதம் எழுதாது.
கட்டியணைத்து முத்தமிடாது.
இந்த நான்கும் இல்லையென்றால்
காதலிக்க முடியாதா?

எந்தப் பேயன் சொன்னவன்?
தாயகம் என்தாய்,
தாயகம் என் சக்தி,
தாயகம் என் மூச்சு.
வேறொருவன் வீட்டில் விருந்தாளியாக
பட்டுவேட்டியுடன் இருப்பதிலும் பார்க்க
சொந்த வீட்டில்
கோவணத்துடன் இருப்பதே சுகம்.
இறந்த பின்னர் என்னை எரிக்கக்கூடாது
ஏன் தெரியுமா?
என் தாயகம்
எரிகாயங்களுக்கு உள்ளாகக் கூடாது.
என்னைப் புதைப்பதையே விரும்புகின்றேன்.
புதைக்கும் போதும் புற்களின் வேரறுந்து போகாமல்
குழிவெட்டுங்கள்.
உப்புப் போட்டுப் புதையாதீர்
நிலம் உவராகிவிடும்.
மண்போட்டு மூடினால் போதும்.
மழை பெய்ததும்
வேர்கள் துளிர்த்துக்கொள்ளும்.
என் மண்ணில் நிற்கும் போது தான்
எனக்கு இறக்கை முளைக்கிறது.
உனக்கும் அப்படித்தான்
உணர்ந்துகொள்.
ஒரு பெண் உன்னையும்
நீ ஒரு பெண்ணையும்
அல்லது
ஒரு ஆண் உன்னையும்
நீ ஒரு ஆணையும்
காதலிப்பது உன் உரிமை.
ஆனால்
மண்ணைக் காதலிப்பதே உன்னதம்.
தமிழனே!
தாயகத்தைக் காதல் செய்......!

□□

வைகாசி ,1995.





# கற்பூர வாசத்தைக் கழுதை அறியாதே.

வானத்துத் தேவதை பூமிக்கு வருகின்றாள்.
வரம்கேட்க காத்திருப்பவர்களே
வரிசையாக வாருங்கள்.
'வெண்தாமரைத் தட்டேந்திய' வெடியரசி
வீதிக்கு வருகின்றாள்.
எல்லோரும் எழுந்து நில்லுங்கள்.
'நவாலி நரபலி' யின் நாயகி உலா வருகின்றாள்.
பிக்குகளே 'பிரித்' தோதுங்கள்.
தலதாமாளிகையின் தங்கக் கலசமே
'சந்திரிகா'வுக்கு வாழ்த்துக் கூறுக.
அலரி மாளிகை அலங்கார ரூபிணி
'கொரகொல்லைச் சமாதி ' யைக்
கும்பிட வருகின்றாள்.
எடுபிடிகளெல்லோரும் எழுந்து புறப்படுக.
நாடாண்ட பண்டாரநாயக்கா திருமகளே!
ஈடாடிக் கொண்டிக்கும் ரத்வத்த மருமகளே!
செந்தமிழர் குடியழிக்கத் தேரெடுத்த சீமாட்டி!
தேசமெல்லாம் தீமூட்டும் சிங்களவர் பெருமாட்டி!
தாய்வாழ்வு வாழ்க! தமிழ் வாழ்வு வீழ்க.
"கட்டியக்காரக் கதிர்காமரே" வருக!
இதை எட்டுமுறை சொல்லுக.

என்னது?
உன்னால் முடியாதா?
கதிர்காமா எதிர்வாதமா புரிகின்றாய்?
என்ன? உனக்குத் தமிழே தெரியாதா?
மன்னிக்க;
ஆத்திரத்தில் அவசரப்பட்டு விட்டேன்.
உன்னைப் போலொருவன்
உலகத்தில் கிடையாது.
அடிமைக்கு நீயே அசல்.
தமிழே தெரியாத தமிழனே!
காக்கை வன்னியனின் கடைசித் தம்பியே!
ஆங்கிலத்தில் சொல்லு அது போதும்.
அடுத்து "ஆராத்தியெடுக்கும் அழகி" யார்?
பத்மாவா?
பலே, பொருத்தமான பொடிச்சி.
நல்ல பலசாலிகள் நாலுபேர் வேண்டும்.
கனதூரம் 'காவவேண்டும்.'
இடையிடையே 'காலும் பிடிக்கவேண்டும்!
எச்சில் துப்பும்போது
இருகையில் ஏந்தவேண்டும்'
எவரெவரென்று பேர்சொல்லு பார்க்கலாம்?
"உடுப்பிட்டிச் சிங்கம்"
"திருமலைச் செயல் வீரன் "
"அத்தியடிக் குத்தியன் டக்ளஸ் தேவானந்தா"
மற்றது யார்?
"மாணிக்கதாசன்"
அச்சா, அருமையான தெரிவு.
இவர்களுக்கு
எலும்புகூட எறியவேண்டியதில்லை.
பழைய செருப்புக்கே
பல்லிளிக்கக் கூடியவர்.
நிலபாவாடை விரிப்பவன் யார்?
"நீலன் திருச்செல்வம் "
சபாஷ்
அள்ளக்குறையாத அறிவுத் திலகத்துக்கு
வெள்ளைத் துணிவிரிக்கும் வேலையா?
வெகு பொருத்தம்.
ஆயிரம் கண்ணுடைய ஆத்தாளுக்கு
சாமரம் வீசுவது யார்?

'அஸ்ரப் 'பை அழைத்து வாருங்கள்.
கவரி பற்றி வீசட்டும் காற்று வரட்டும்.
பெற்ற தாயை கூட நிறுத்து விற்கும்
எட்டப்பர் கூட்டமே!
தமிழனின் மானத்தையும், வீரத்தையும்
எங்கே அடகு வைத்தீர்கள்?
கசாப்புக்கடை வாசற் காகங்களாகக்
கழிவுகள் தூக்கவா காத்திருக்கின்றீர்?
உங்களையும் ஒருத்தி பெற்றாளே
என்ன பாவம் செய்தாளோ?
எத்தனை வதைக்கிடையில் எம் நாடு.
நீங்கள் பத்திரிகையில் பார்த்தது பாதி,
பாழிருட்டில் போனது மீதி.
நெடிய பனையாய் நிமிர்ந்துள்ள தேசத்துக்கு
கொடிய விஷமேற்றக் குதிப்பவர்களே
தமிழன் எதிரியால் அழிந்ததைவிட
துரோகியால் எரிந்ததே அதிகம்.
இந்த வரலாறு இன்றுவரை நீண்டு
உங்களிடம் வந்து முடிகிறது.
உதிரம் சொரிந்து வளர்த்த உரிமைப் பயிரை
கருகவிடச் சொல்லும் கறுப்புச் சட்டைகளே!
நாளை காலமெழுதும் தீர்ப்பின்
வாயில் விழுந்து போவீர்கள்.
நாங்கள் காற்றிடமிருந்து காப்பாற்றி
போற்றி வணங்கும் 'புனித நெருப்பை'
ஊதியணைக்கும் உரிமையை
உங்களுக்குத் தந்தது யார்?
கானல் நீரில் கைநனைக்கத் துடிப்பவரே!
கனவிற்கண்ட தெருவில்
பயணம் புறப்பட்டு
இன்று காடுமாறி விட்டீர்கள்.
இனி வீடு வரமாட்டீர்கள்.
விடுதலை போராட்டமென்பது
வாய் கிழியும் வார்த்தைகளாலான
வானவில்லல்ல.
புள்ளடி போடும் கள்ள வியாபாரமல்ல.
அது உயிர்கொடுத்து வாங்கும் உரிமம்.
சத்தியத்துக்கான யுத்தம் தான்
உரிமைக்கான திசைகாட்டும்.

வழிதவறாத நேர்கோடே வழிகாட்டும்.
உயிர்ப்பூவே விடுதலைக்கு உரிய மலர்.
"பிள்ளைகளின்" பொன்னுடலம் வீழும்
ஒவ்வொரு கணமும்
பூமிப்பந்தே புல்லரித்துக் கொள்ளும்.
காற்றின் கண்களும் கலங்கும்
மேகங்கள் கூட மௌனமாகும்.
நெஞ்சுக் கூட்டுக்குள் நெருஞ்சி குத்தும்.
உங்களுக்கு இவையொன்றும் உறைக்காது.
வேரிழந்து போன மரங்களுக்கு
நீரினைப் பற்றி எப்படித் தெரியும்?
உங்களை எவர்தான் கணக்கில் எடுத்தார்?
சுவர்வெடித்தும்,
கூரை சிதிலமாகியும் விட்ட
பழைய வீட்டுக்கு எவர்தான் வர்ணம் பூசுவர்.
என்றாலும்.....
பத்திரிகைகள் படிக்கும் போது தான்
பற்றிக்கொண்டு வருகிறது.
விடுதலைக்கு அதிக விலை கொடுத்து விட்டும்
விஸ்பரூபமாக நிற்கும் எங்கள் தலைவிதியை
தூரத்தில் உள்ள
நீங்கள் எப்படித் தீர்மானிக்க முடியும்.
கற்பூர வாசத்தை கழுதை அறியாதே;
தந்தத்தைத் தின்றுவிட்டுச் சரிந்து படுக்காமல்
உங்களுக்கேனிந்த "ஊர்த்துளவாரம்"?
இரும்படிக்கும் இடத்திலே
இலையானுக்கு என்ன அலுவல்?
சுதந்திரத்துக்குப் போராடும் மக்களுக்கு
சோற்றுப் பிண்டங்கள்
சுற்றறிக்கை விடுவதேன்?
மனுஷனாகப் பிறந்ததுகளுக்கு
வெட்கம்,ரோசம் வேண்டும்.
அதையெப்படி உங்களிடம் எதிர்பார்ப்பது?
மனிதர்களுக்குத்தானே அது!

□□

ஆவணி - 1995.

புதுவை இரத்தினதுரை



# சாலப்பொருந்தும்
# சட்டம் வந்தாச்சு
# 'ஏலவிற்பனை' இனியில்லை.

மின்னாமல் ஒரு ஆனந்தப் பேரிடி
எம்மண்ணில் இறங்கியது.
நிலம் கிழித்தோர் நீரூற்று
குபு, குபுவென்று கொப்பளித்துப்
பூமியை நனைத்துப் போகிறது.
எந்த ஆரவாரமுமற்று
அக்கினிக் குஞ்சுக்கு அடைவைத்து விட்டோம்.
நாளை பொரிக்கும்.
பொல்லாப் பிழையைப் பொசுக்கும்.
பெரிய மலையைப் புரட்டுவதற்காக...
அடிவாரத்தில் அலவாங்கு குத்திவிட்டோம்.
நாளை மலை சரிந்துபோக
சமநிலையிங்கு தர்மமாகும்.
உள்ளே கொதிக்கும் உலைக்களங்கள்
இனி ஆறி அடங்கும்.
சுடுமூச்சாகிச் சுவரிடிக்கும் பெருமூச்சுக்களின்
சோகமினித் தொலைந்து போகும்.
மலரில் மதுவருந்தி மயங்குவற்காக
வண்டுகளுக்குப் பூக்கள்
வரதட்சனை கொடுப்பதில்லை.
காளை மாட்டுக்கு கலியாணச்சீர் கொடுக்கும்
பழக்கமேதும் பசுமாட்டுக்கில்லை.

ஆண் நாய் பெண் நாயிடம்
ஆறு லட்சம் கேட்பதில்லை.
மானுடனுக்கு மட்டும் ஏனிந்த இழி நிலை?
அதுவும் தமிழனென்றால்......
பிள்ளையை விற்பதில் அவனே பெரியபுள்ளி.
மதங்களேதும் மணக்கொடையை ஆதரிக்கவில்லை.
தெய்வங்களெவரும்
சீதனம் வாங்கியதாகத் தெரியவில்லை.
பார்வதிக்குப் பாதியுடல் கொடுத்து
பரமசிவன் அர்த்த நாரீஸ்வரரானார்.
சரஸ்வதியை நாக்கிலே தூக்கி வைத்து
பிரம்மா பெரிய கடவுளானார்.
உள்ளே சென்று உற்றுப்பார்த்தால்
ஆண்டவன் சந்நிதானங்கள் அனைத்திலும்
ஆணும், பெண்ணும் அரையரைவாசியே.
பெண்ணை சக்தியென்றார் பாரதியார்.
பெரும் சக்தியென்றார் விவேகானந்தர்.
தாய்மையின் வடிவம் என்றார் பரமகம்ஷர்.
இவையொன்றும் காதல் வாழ்வுக்கு
கைகொடுக்க மாட்டாது என்றாலும்
பெண்ணே பெரியவள்.
மாதா; சக்தி
மனைவி ; பெரும்பொருள்
மகள் ; பிரமிப்பின் பேரொளி.
காதற்குளிப்பில் உடலாறும் போதுதான்
மனிதன் 'ஞானி' ஆகின்றான்.
அந்தக் குளியலுக்கு எவனும் காசுவாங்கினால்
அவன் 'பாவி' ஆகின்றான்.
பத்து லட்சம் காசும்,
பன்னிரண்டு பரப்புக் காணியும்,
நாற்பது பவுணில் நகையும் வாங்கி
ஏலத்தில் தன்னைக் கூவி விற்றவன்
எந்தமுகத்தோடு முதலிரவுக்கு கதவுமூடுவான்?
காசுக்கு தன்னை விற்றவன் வீட்டில்
மகிழ்ச்சியாகக் கட்டிலும் ஆடாது.
மனநிறைவோடு தொட்டிலும் ஆடாது.
மீசைமுளைத்ததொன்றை வாங்கும் வழியற்று
இரவில் நட்சத்திரங்களை எரித்தபடி
எடுத்ததற்கெல்லாம் எரிந்து விழுந்தபடி

நரையெறிந்து,
நடைதளர்ந்து,
கோடை மரமாகி இலையுதிர்ந்து போகும்
முதிர்கன்னியரின் வாசல் கடந்து
கலியாண ஊர்வலம் போகும்போது
யன்னல் கம்பிகளில் முகம் உரசி
தீ மூட்டியபடி
அவர்கள் விடும் அக்கினி மூச்சின் அர்த்தம்,
எத்தனை பேரைத் தைத்தது?
"மணக்கொடைத் தடைச் சட்டம்"
இது; புரையோடிப்போன புண்ணுக்கு
தலைவன் செய்த சத்திர சிகிச்சை.
அதர்மத்தின் அடி முடியை நீறாக்க
பிரபாகரன் இட்ட பெருநெருப்பு.
போகப்பொருளாகவும், காமப்பொருளாகவும்
பெண்ணை எதிர்கொள்ளும் புன்மை தீருமட்டும்
பேச்சளவில் மட்டுமே பெண்விடுதலை.
ஆணாதிக்கத்தின் வேர்கள்
ஐந்து கண்டங்களையும்
ஏழு கடல்களையும் கடந்து
எங்கும் நிறைந்துள்ளது.
அது ஆவரங்காலிலும் உண்டு
அமெரிக்காவிலும் உண்டு.
விகிதாசாரத்தில் கொஞ்சம் வேறுபாடு
அவ்வளவே.
பெண்ணாகப்பட்டவள்
பானை கழுவி, படுக்கை தட்டிப்போடும்
கண்திறந்து மூடும் யந்திரமல்ல.
பேசாப்பொருளாகி ஏவலியற்றும்
'றிமோட் கொன்றோல்' பொம்மையும் அல்ல.
ஆணைப்போல் அவளுக்கும்
சரியாசனம் வேண்டும்.
அரியாசனமும் வேண்டும்.
கண்ணகியை உதறிவிட்ட கோவலன்
இன்னொருத்தியுடன் போனான்.
'மாசத்துவான்' மகனுக்கு
மடிவற்றிப் போனதும்
காற்சிலம்பு கேட்டு
அவள் காலடிக்குத் திரும்பினான்.
பொருளுக்கும், போகத்துக்குமா

பெண் ஜென்மம்?
நிலவுடமைக் காலத்தில்
பெண்ணுக்கு நீதிகிட்டவில்லை.
பொருளுடமைச் சமூகத்திலும்
அவள் பெருமையடையவில்லை.
இன்று வரையும் தான்
அவளின் இடர் தீரவில்லை.
'சீனத்து மாநாட்டுத் தீர்மானம் '
என்ன செய்யும்?
ஒருபாட்டம் அழுதுவிட்டு ஓய்ந்துபோகும்.
இன்று கண்திறந்தது எங்கள் மண்.
போராட்டம் பெண்ணுக்குப்
புதுவாழ்வு தந்தது.
குச்சொழுங்கையெங்கும் பெண்ணின் குரல்
குதுகலிக்கின்றது.
பேரிகையொலிக்கப் பெண்மை நிமிர்ந்து
சூரியனைத் தொட்டு நிற்கிறது.
அவளின் விழிநீர் துடைக்க ஆயிரம் கரங்கள்.
ஊரதிர நிமிர்ந்த வாழ்வு.
பாரதி சொன்ன
'திமிர்ந்த ஞானச் செருக்கு'.
'வாடகைக் கனவுகள்' அற்ற
வல்லமை வடிவாய்
பாடுகின்றாள் விடுதலைப்பண்.
எடுத்துவைக்கும் ஒவ்வொரு அடிக்குள்ளும்
இடரழித்து விட்ட இறமாப்பு.
ஆகாயம் வந்து அடி பணியும் அதிசயம்.
'மணக்கொடைத் தடைச்சட்டம்'.
புதிய பாய்ச்சல்.
விற்பனைப்பொருளாய் வீட்டில் முடங்கிய
அற்புதங்களே எழுவீர்!
சாலப்பொருந்தும் சட்டம் வந்தாச்சு
ஏலவிற்பனை இனி இல்லை.

□□

புரட்டாதி - 1995.



# சும்மா இருக்கச் சுதந்திரமென்றால்.... எனக்கும் அதிலே இரண்டு கிலோ.

விரல்மடித்துக் கணக்கெடுக்க முன்னரே
காலம் காற்றாய்ப் பறந்து விடுகிறது.
வலிகாமத்தை வழித்துத் துடைத்த பின்
தொண்ணூறு நாட்கள் தொலைந்து விட்டன.
நிகழ்வு மட்டும் நேற்றுப் போலிருக்கிறது.
30.10.1995 ஒக்டோபர் திங்கட்கிழமை
இந்த நாளிலும்,
இதன் பிறகு வந்த நாட்களிலும்
ஈழத்தமிழன் சுமந்த பாரச்சிலுவைக்கு
எதிர்காலம் என்ன பெயரிட்டு அழைக்குமோ?
கூரையற்ற குட்டிச்சுவராய்
மழை நனைந்தும்,
வெய்யில் உலர்ந்தும்,
பசி சுமந்தும்
தமிழர்பட்ட துயருக்கு எது உவமையாகும்?
வதையின் கதைகளிலே.... இதுவே பெருங்கதை.
வலிகாமம் வெளியேறத் தயாரான போது
ஓரிரவும்,
ஒற்றைப்பாதையுமே இருந்தது.
அடிதலை தெரியாத அனுமான் வாலாக
நீண்ட நெடுந்தொலைவுக்கு மனித வரிசை.

இருகாலுக்குமிடையே வெளியற்ற நகர்வு.
முன்னால் விழுந்து வெடித்தன எறிகணைகள்.
பின்னால்.... துரத்தி வந்தன பிசாசுகள்.
பீடுற வாழ்ந்த பெருங்குலம்
கூடுகலைந்து ஓடியது.
உன்னோடு ஒன்றான வாழ்வினி இல்லையென
தென்னிலங்கைக்குச் சொல்லி வைத்தது போல
வலிகாமம் முழுமையாக வெளியேறியது.
செம்மணி திணறியது.
நரபாரத்தால் நாவற்குழி நசிந்தது.
உள்ளே நுழைந்து பார்த்ததும்
சிங்களம் திகைத்துப்போனது.
சூனியத்தில் கொடியேற்றிப் போன
ரத்வத்தவுக்கு ராஜமரியாதை.
சந்திரிகாவுக்கு இந்திரப் பதவிக்குரிய பவிசு.
இனியென்ன?
வலிகாமத்தைப் புலிகள் பிடிப்பது எப்போது?
பலகாலமாகுமா?
இதுவே எங்கும் எதிரொலிக்கிறது.
பதிலென்ன?
வேரோடிய வாழ்வுக்குரிய ஒரு பரம்பரை
தூக்கி வெளியே வீசப்படும் போது
அந்தரித்துப் போகும் அவலத்தில்
ஆயிரம் கேள்விகள் அஸ்திரங்களாகும்.
கோபத்திற் காயும்.
அது குற்றமல்ல......
இந்திர வாழ்விழந்த அந்தர நிலையில்
அகப்பட்டதைத் தூக்கிமிதிக்கும் ஆனைபோல்
நெருப்பு மூட்டிய வார்த்தைகளை நெஞ்சிலெறியும்.
ஆத்திரப்படலாகாது.
தாங்கிக்கொள்வதே தாய்மனம்.
'வலிகாமத்தைக் காப்பாற்ற வக்கற்றதுகள்
வன்னிக்கு வரட்டாம்'
ஊரிழந்த கோபத்தின் உச்சம் இது.
சொல்லியிருக்கக் கூடாத சுடு வார்த்தைதான்.
விடுதலையின் பேரால்
இந்தச் சொற்கள் மட்டும் செவிவிழாதெனக்
காதடைத்துப் போகக் கடவது.

புலிகள் மீது ஏனிந்தக் கோபம்?
எதிரிகள் போல ஏனிந்தப் பார்வை?
ஊரிழந்து போனது எங்களுக்கு மட்டுமா வருத்தம்?
வலிகாமம் போன வருத்தத்தில்
தூங்காத வேங்கைகளே அதிகமென அறிக.
அன்று
கண்ணீர் வழிய நடந்தவர் கையில்
காணியுறுதியாவது இருந்தது.
பலர் இயலக்கூடியதை எடுத்தும் வந்தோம்.
ஆனால்.......
துயிலுமில்லத்தைத் தூக்கி வர முடியவில்லையே என்று
துயரத்தில் துடித்தனர் போராளிகள்.
'தமிழரின் படைபலமே தாயகம் காக்கு' மென
எத்தனை தடவைகள் இடித்துரைத்தும்
எவர்தான் கருத்திலெடுத்தோம்.
போராட்டம் பூப்பறிக்கும் வேலையென்றே
காலாட்டிக் கொண்டிருந்தோம்.
எல்லோரும் சேர்ந்து எடுக்கும் பெருஞ்சுமையை
ஓரிரண்டு தோள்களில் எப்படிச் சுமத்தலாம்?
என் குடும்பத்தில் எவரும் குறையாது
கொண்டுவா விடுதலையென்பது குற்றமல்லவா?
அடுத்த தலைமுறைக்கான ஆனந்த வாழ்வு சமைத்தல்
இந்தத் தலைமுறைக்குக் கிடைத்த பேறென
எத்தனை பேர் உணர்ந்தோம்?
இத்தனைக்கும் பின்னும்;
இளைய தலைமுறை என்ன செய்து கொண்டிருக்கிறது?
சுரணையற்றுத் தானே தூங்கிக் கிடக்கிறது.
காலையில் அண்ணா பற்பொடியையும்,
மாலையில் அடுத்த வீட்டு வேலியையும்
தின்றுகொண்டிருந்தால்......
வந்த பகையைத் துரத்துவதெப்படி?
வலிகாமத்துக்குப் போவது எப்படி?
ஊர்போவது எப்போது என்று
ஒவ்வொரு வீட்டிலும் எதிரொலிக்கட்டும்.
கேள்விக்குப் பதிலை வெளியில் கேட்பதை விடுத்து
முதலில் வீட்டிலேயே கேட்போம்.
தோளுக்குயர்ந்த சொந்தங்களைக் கேட்போம்.
படுக்கையிற் கிடக்கும் பிள்ளையைத் தட்டி

பதிலை அவளிடம் கேட்போம்.
அங்கிங் கெனாதபடி எங்கும் நிறைந்து
அலைகின்ற இளையதலைமுறையிடம் கேட்போம்.
நரம்பிலாத நாவினால்........
இதற்குள் எத்தனை எடுத்தெறிவுகள்?
காட்டிக்கொடுக்கிறது 'கூட்டணி'
எவரும் கண்டிக்கவில்லை.
நீலன் திருச்செல்வம் மோசம் செய்கின்றான்
எல்லோரும் பேசாமற்தானே கிடக்கின்றோம்.
புலிகள் போராடுகின்றனர்.
காய்த்த மரத்துக்குத்தானே கல்லெறி.
தாயகத்தை நெஞ்சிற் சுமந்து
கல்லறைக்குப் போகும் செல்வங்களுக்காக
இந்த வசை?
சும்மா இருக்கச் சுதந்திரமென்றால்
எனக்கும் அதிலே இரண்டு கிலோ !
வெட்கம் கெட்டது இந்த விடுதலையுணர்வு.
நானென்ன,
பிள்ளையென்ன,
நாளை வரும் பேரனென்ன
எல்லோரும் போராடினால் இலக்கு எட்டும்.
விடுதலைப் புலிகளென்பது தமிழன் வீரத்தின் குறியீடு.
பிரபாகரன் என்பது தமிழர் மானத்தின் அடையாளம்.
பின்னடைவைப் பெரும்தோல்வியென்றால்
கண்டதையும் தான் கதைக்க வேண்டிவரும்.
நம்பிக்கையே வாழ்வு.
இனிவரும் நாட்கள் எமக்காகவே விடியும்.
படை பலமே முழுப்பலம்.
நம்பி எழுவோம்.
கற்றுத்தெளிந்தோம்
களம் நோக்கி நடை பயில்வோம்.
வெற்றுக்கதை விடுத்து விடுதலைக்கு விலைகொடுப்போம்.
புலிகளே பலம்
வருவதோ ஜெயம்.





பங்குனி ,1996.



# பூவரசு பூக்கும் பூமிக்கு வெள்ளரசு விலங்கிட முடியுமா?

அலரிமாளிகைக் கூரைமீதெழுந்து
அலைவரிசையில் மிதந்ததோர் அசரீரி.
"தமிழரின் மௌனம் கலையும் தருணமிது
புலிகளுக்கெதிராக எல்லோரும் பேசவேண்டும்".
சந்திரிகாவின் சத்திய வசனமிது.
பிரபாகரனுடன் பேசி
பிரச்சனைக்குத் தீர்வென்ற சீமாட்டிக்கு
இந்த வசனத்தை எழுதிக்கொடுத்தது யார்?
வாசல் தோறும் வாக்குக் கேட்ட போது
பேசியது என்ன?
காவியுடைகள் கூத்தாடத் தொடங்கியதும்
கூறுவது என்ன?
சூத்திரதாரி யாரென்று தெரிந்து விட்டது
மேசைக்குக் கீழே 'நீலனின்' கால்கள்.
வேறொன்றுமில்லை
'கதிர்காமத் தம்பிரானின்' திருவோடு யாசகம்
உத்தமியை உரத்துப்பேச வைக்கிறது.
கொழும்பிற் தொங்கும் 'துரோகவௌவால்கள்'
சொன்னதைச் செய்யும்மென்ற துணிவு
சந்திரிகாவை சண்டித்தனத்துக்கு தூண்டுகிறது.
என்ன செய்வது?

எட்டப்பர்களால் இடிந்த வரலாற்றில்
இன்னொரு அத்தியாயம் இது.
சரி, சரி கிடக்கட்டும்
எரியுண்டு போகுமா எம்மண்?
நடவாது.
பூவரசு பூக்கும் பூமிக்கு
வெள்ளரசு வந்தா விலங்கிட முடியும்?
மழைநீரால் மட்டும் பயிர்செய்யும் பூமியிது.
அசையாதென்பதறிக.
"பாறை பிளந்து பயனெடுக்கும்" தாய் வயிறு
பணியாதென்பதெம் பாடல்.
ஒத்தியெடுத்து ஊற்றுவாய் அடைத்தாலும்
வேர்கசிந்து நீர்பரவும்.
எந்நாட்டு மக்களையும் எம்தேசம் வரவேற்கும்.
படையோடு வருபவர்க்கெம் தலைவாசல் மரமிடிக்கும்.
'குமாரதுங்காவின் குடும்பத்தலைவிக்கு'
யாரேனும் இதனை அறியக் கொடுத்திடுக.
மத்திய வங்கிமீது இடித்தவர் எவரோ?
ஆர் செய்தாரே நாமறியோம் பராபரமே.
என்றாலும்
குண்டுவெடிப்பென்றால் என்னவென்று
கொழும்புக்கும் தெரியட்டும்.
குருதிவெள்ளம் கொழும்பில் வழியும் போதே
அவலமென்றால் என்னவென்று அரசுக்குப் புரியும்.
'நவாலிப் படுகொலையும'
'நாகர்கோவிலில்' நாம் கொடுத்த விலையும்
சந்திரிக்காவின் சமையலறைக்குத் தெரியாது.
'சிலிங்கோ மாளிகை' ச் சிதறல்கள்
'ஜனாதிபதி இல்லத்திலும்' விழுந்திருக்கும்.
எடுத்துப்பார்த்தாவது எம்துயர் அறியட்டும்.
வலிகாமம் போனதால்
நாம் மனம் இடிந்து போகவில்லை.
புலிவாலைப் பிடித்தோமென்று பேசுவதும்
எமக்குக் கோபமல்ல......
இளித்தவாய்த் தமிழருக்கு
அள்ளிக்கொடுக்க வந்த 'அமுதசுரபி' யென்று
தீர்வொன்றைச் சொல்வதே சினமூட்டுகிறது.
பிறந்தமண்ணில் வாழப் "பெமிசன்"எடுப்பதிலும்
இறந்து படல் சிறந்தது.

திணிப்புக்குப் பெயர் தீர்வு என்றால்
தீர்வுக்குச் சிங்களத்தில் என்ன பெயர்?
நேற்றுவரை
அதிகாரமட்டத்திலிருந்த ஆதிக்கவுணர்வை
"வெள்ளைப்புறா" மூலம் வீதிக்குக் கொண்டு வந்ததே
சந்திரிகாவின் சாதனை அரசு தான்.
ஆளவந்தவன் சிங்களவன்,
அடிமையானவன் தமிழனென்று,
பேசவைத்த பெருமையும் பெருமாட்டிக்கே சேரும்.
பேச்சுவார்த்தை மேசையின் கால்களை முறித்து
வெட்டரிவாளுக்குப் பிடிபோட்ட "வெண்புறாவே"
ஒன்றுணர்க.
கருங்கல்லு உடையுமன்றி வளையாது.
கண்ணாடி சிதறுமேயன்றி நெளியாது.
இது உணர்ச்சிவசமான உரையல்ல.....
பிரபாகரனின் ' பொலிசி '
"புலிகளை சித்திரைக்கிடையில்
தீர்த்துக் கட்டுவேன" என்றார்
ரத்வத்தை.
முடிசூடிய மன்னனுக்கு தலைபிசகிய கதைபோல
மந்திரி மாமனுக்கு மாதங்கள் மறந்துபோச்சு.
தேரும், குதிரைகளும், சிம்மாசனக்கதிரையும்
மாப்பிள்ளை மிடுக்கானது மந்திரிக்கு.....
'தமிழர் தொட்டழிப்பை முடுக்கிவிட்ட அக்காவுக்கு'
ஆடியடங்கும் வயதில் ஆயுர்வேத வைத்தியம்.
தம்பியானவன் தலைக்குத் தடவடா புளியெண்ணை.
கோட்டையைப் பிடித்துக் கொடியேற்றி வைத்துவிட்டு
வேட்டை நாய்களுக்கு விருந்து வைத்த போது.....
புலிகளை அழிக்காதுவிடேன் என்று
புலம்பியதாய் அறிந்தோம்.
காற்றுலவும் வெறும்தரையில் காலை வைத்துவிட்டு
பீற்றிக்கொள்ளும் 'பெருந்தகையே'!
தமிழரின் உதிரத்துளி ஒவ்வொன்றுக்கும்
பதிவேட்டில் வரவுண்டு.
காலம் ஒருநாள் கணக்குக் கேட்கும்.
சத்தியத்தை வெட்டியழித்து விடுவதென்பது
நிச்சயம் நடவாது.
புத்தபிரான் சொன்னதிந்தப் போதனை.

தாமரைத் தட்டேந்தும் தளபதிகளுக்கு
இதைப் போதிக்க யாருமே இல்லையா?
புலிகள் வேறு தமிழர் வேறு என்பவர்களே
புரிந்துகொள்ளுங்கள்.
வலிகாமம் வெளியேறிய பின் எத்தனை வாக்குறுதிகள்.
ஒருவராயினும் உள்ளே வந்தார்களா?
ஆயிரம் முரண்பாடுகள் எமக்குள் இருந்தாலும்
அண்ணன் தம்பி உறவெமக்கு.
ஒன்றென்றால் துடிக்கும் உதிரத்துடிப்பு.
வீடிழந்துபோன "வெப்பிசாரத்தில"
யாராயினும் ஓரிருவர் பேசியிருக்கலாம்.
அதை வைத்தா முடிவெடுத்தீர்?
அட பாவமே!
நெருப்புக் குளித்து நிமிரும் திறன்படைத்த
கறுப்புப் பறவைகள் நாம்.
மானமிழந்து மாற்றானின் மடிகிடக்கும்
ஈனர் சிலரிங்கே இன்னும் இருக்கின்றார்.
நீலன்,
கதிர்காமர்,
சிவசிவா...... இப்படியாய்.......
தலையில் ஓரிரண்டு நரைமயிர் போல
இவர்கள் சில பேர்கள்.
எச்சிலிலைகளையே எதிர்பார்க்கும் இவர்களையா
தமிழரென நம்பித் தடம்புரண்டீர்?
ஒன்றுரைத்தோம்.
எம்மண்ணில் வேரைத்தறித்தால் விழுதிருந்து துளிர்த்திடுவோம்.
விழுதைத் தறித்தாலோ வேரிருந்து தளிர்த்திடுவோம்.
காற்றுமீதாணை,
கடல் மீதாணை,
போற்றுதற்குரிய நம்பொன் மண்மீதாணை.
ஆற்றலன் எம் தலைவன்
அண்ணல் மீதாணை.
படைதிரட்டி உடனெழுவோம்.
பகையழித்து ஊர்புகுவோம்.

□□

பங்குனி ,1996.



புதுவை இரத்தினதுரை



# நேற்றெம் பூமிக்கு நெருப்பிட்டவனே காற்றிப்போ எம் பக்கம்.

தென்தமிழீழத்தின் எழுவான் திசை
செந்நிறமானது.
உதயத்தின் பூபாளம்
நீரரமகளிரின் வாய்மொழியானது.
நீண்டகாலம் அழுதவிழிகளில்
சந்தோஷப் பூ மலர்ந்தது.
எம் பிள்ளைகளாலும் இயலுமென
முகங்களின்று முறுவலிக்கின்றன.
அடிக்கடி ஓடியகால்கள்
தரித்து வேர்பிடித்துக் கொண்டன.
அன்னை பூபதி அவதரித்த மண்ணுக்கு
கண்மலரும் காலமிது.
விடுதலைக்கு அதிக விலைகொடுத்தோர் வரிசையில்
முதலிலெம் பேரில் முத்திரை இருக்கும்.
“பட்டுப்போனது மட்டக்களப்பென”
பகைவன் பாட்டே பாடினான்.
வாவியின் மீன்கள் கூட
வாயெடுத்துப் பாடாமல் ஓடியொழிந்தன.
பச்சை நிறமற்றுச் செத்துக்கிடந்தன வயல்கள்.
பாட்டும், கூத்துமாய் கிடந்த ஊர்மனை
பேச்சடங்கி ஊமையானது.

பால்வழிந்தோடிய பூமிக்குக் கால்தளர்ந்து,
காற்றும் கைவிட்டுப்போக
அக்கினி நாளாச்சு நம்வாழ்வு.
எத்தனை வதைபட்டோம்.
துப்பாக்கிப் பேய்கள் ஊர்புகும்.
வெடிச்சத்தம் தூரக்கேட்கும் போதே
வெளியேறி விடுவோம்.
திரும்பி வரும்போது
ஊர் சிதறிப்போயிருக்கும்.
அங்கொன்று இங்கொன்றாக
குண்டேறிய உறவுகள் விறைத்துக் கிடக்கும்.
எடுத்தெரித்துவிட்டு இருப்போம்.
மீண்டும்........
மீண்டும்.......
படுவான்கரைக்கும், எழுவான் திசைக்குமாக
ஓடுவதும் திரும்புவதுமாக
எம் நாட்கள் கழிந்தன.
நாதியற்று நாங்கள் கூவிய குரல்கள்
நாலு திசையிலும் எதிரொலிக்க,
பாதி இரவில் புகுந்து
கூந்தல் பற்றிக் குதித்தவனே!
வாடா வெளியே.
சொல்லியழ யாருமற்றுத் துடித்தபோது
கொள்ளிவைத்துப் போனவனே!
வெள்ளைக் கொடிபிடித்து
வீதிக்கு வா என்றவனே!
கண்ணீரும், சோறுமாய் கழிந்த நாட்களை
எண்ணி நிமிர்ந்தோம் இன்று.
நேற்றெம் பூமிக்கு நெருப்பிட்டவனே!
காற்றிப்போ எம் பக்கம்.
காட்டுக்கு ஓடென்று கலைத்தவனே!
அண்ணாந்து பார்க்கும் அழகோடு,
நெடுமுடி வேந்தராய்
எம் பிள்ளைகள் ஊருளே வந்துளர்.
வெற்றிச் செய்தியுடன் வீடுவருகவென
கட்டிமுத்தமிட்டு அனுப்பியுள்ளோம்.
விண்ணிறங்கும் தேவராய்,
எண்ணிலடங்காத எம் எரிதழல்கள்
அயலெங்கும் அணிவகுத்துள்ளனர்.
இனிக் கலிவீழ்ந்து போகுமென

காற்று காதிலுரைத்தது.
பிள்ளைக் கறி சமைத்த பிடாரனே!
பிள்ளைகள் ஊர் புகுந்தனர்.
உன் கொள்ளைத் தர்பாரின்
கொடிமுறிந்து போனது.
வெள்ளைக் கொடிபிடித்து வெளியேவருக.
நாயாய் கழிந்த நம்வாழ்வை
தாயான தலைவன் தலையுயரச் செய்தான்.
பிரபாகரனின் நெற்றிக்கண் பொறிகள்
நிமிரச்செய்தன.
குஞ்சுகள் கூடுவிட்டுப் போனபோது
உறவுதறிப் போனதாய் அழுதோம்.
இறக்கை முளைக்காத எம் குஞ்சுகள்
இன்று பறக்கக் கற்றுத் திரும்பின.
பார்த்ததும் பட்டதுயரெலாம் பஞ்சானது.
வேர்த்து கிடந்த வேர்களுக்கு
நீர்த்துளியிட்டன உறவுகள்.
பால்வார்த்தது பரம்பரை.
வலிகாம வேர்களை அகழ்ந்தெடுத்து
உதிரக்கொடிகளை தெருவில் எறிந்தவரே!
நிலாவரைக் கிணற்றுக்கா நெருப்புமூட்ட நினைத்தீர்?
அட ;பரிதாபத்துக்குரிவரே!
அங்கிங்கெனாதபடி எங்கும் அடிவாங்கி
தங்கியிருக்க இடமின்றித் தவிப்பீர்,
ஓரிரவில் ஊரிழந்து போனாரெம் உறவுகள்.
உண்மைதான்.
வேரிழந்து அந்தரத்தில் ஆடும் கொடிபோல
பொன்னுலகில் வாழும் பொசிப்பிழந்து போனாரவர்.
பொய்யில்லை.
என்ன பெரிய வாழ்வுக்கதிபதிகளாக இருந்தார்கள்.
எல்லாம் இழந்துவிட்டார்.
இன்று கட்டிய கச்சையும் திருவோடுமாக
தெருவில் நிற்கின்றார்.
எத்தனை தலைமுறை கண்டதவர் வீடு.
பெட்டகத்துள்ளே பேரனின் கைத்தடியும்,
பித்தளைக் குத்துவிளக்கும்
அவர் அடிநீரின் ஆழம் சொல்லும்.
சென்றதுகளுக்கெங்கே இது விளங்கும்.
ஊரைக் கொழுத்தி உலையிற்போடும்.
ஏவற்பேய்கள் கூரையைப் பிரித்து
காவலரணுக்குக் கட்டும்.

முந்தையர் படுத்துறங்கிய கட்டிலைக்கொத்தி
அடுப்பெரிக்கும்.
குங்குமச் சிமிழை எடுத்துக் கொட்டும்.
விபூதித்தட்டை வீசும்.
விரதச்சட்டியைப் போட்டுடைக்கும்,
'செபமாலை' யையும்,
தூரக்கேட்கும் ஆராதனை மணியையும்
தூக்கியெறியும்.
'பாவசங்கீர்த்தனத் தட்டி'யால்
வேலியடைக்கும்.
பேய்களுக்கு இவைகளின் பெருமை தெரியாது.
கத்தும்,
கூத்தாடும்,
முற்றத்தில் நின்று மூத்திரம் பெய்யும்.
பகிரங்கப் பிரகடனமொன்று.
வடதமிழீழத்தை வாட்டநினைத்தால்.....
தென்தமிழீழம் சினந்தெழுந்து
அதிரடிப் படையின் கதைமுடிக்கும்.
பாசறையெங்கும் தீயெழும்.
அச்சமில்லாது பகையுலவ
துண்டு நிலம்கூட இல்லாது குண்டும் வெடிக்கும்.
குனியும் வாழ்வு இனியும் கிடையாது.
வட்டியும் முதலுமாக
தென்தமிழீழம் கணக்குமுடிக்கிறது.
பகை தொலைந்துபோக
புறம்பாடுகின்றது புலிகள் சேனை.
எம் ஊரின் போர்முரசே
தாடிக் கவிஞனே!
உன்வரிகள் ஒவ்வொன்றும் உண்மையானது.
'தமிழன் கனவு' நனவாகும் காலம்
விரைவில் விடியும்.
பரணியொன்றைப் பாடத்தொடங்கு.

□□

சித்திரை, 1996.



புதுவை இரத்தினதுரை



# வாழ்வதெனில் மனிதர்களாக....
# அதுவும் தமிழர்களாக....
# அல்லது கல்லறைகளாக....

இடைவெளியற்று இடிவிழுகிறது எமக்கு.
அவலம் அன்றாட வாழ்வாச்சு.
கறிக்கு உப்பானது கண்ணீர்.
நாசித்துவாரங்கள் காற்றையல்ல
கந்தகத் தூசியையே சுவாசிக்கின்றன.
அடுத்த நேர உணவு எந்த அகதி முகாமில்?
யாரறிவார்?
குடாநீரேரியின் அக்கரையிலும், இக்கரையிலும்
துண்டாடப்பட்டன உறவுகள்.
தெருவிற் காணும் போது சிறிய உசாவலுடன்
சொந்தங்கள் சுருங்கிப் போயின.
நேற்றுக் கும்பிட்டெழுந்த காலைப்பொழுதின்
ஆனந்தம் அற்றுப்போக
இன்று ஏன் விடிக்கின்றது என்று எரிச்சல்.
ஈழத்தமிழன் பாவத் தமிழனாகி விட்டானா?
வேர் பிடித்த துளசிச் செடியாக இருந்தோர்
வாரறுந்த செருப்பாகிப் போனார்.
கிழிந்துபோன பொலித்தீன் பையாக
தேடுவாரற்று வீதியிற் தமிழன்.
விடும் ஒவ்வொரு பெருமூச்சும்
வீட்டின் சுவரை இடிக்க

தூக்கம் தொலைந்து போனது.
விழிகளை இறுக மூடினாலும்
யாரோ தட்டியெழுப்பி
"வாரான்கள்" என்பதுபோல நடுக்கம்.
போதுமடா சாமி.
இனிப் பொறுக்கமுடியாது.
சொல் பகையே!
எம்மீது
இன்னுமெத்தனை வதை சுமத்துவாய்?
உன்னோடு ஒன்றான வாழ்வினி
எப்போதும் இல்லையெனச் சொல்லி
ஊர்பிரிந்து வந்தோம்.
உனக்கடிமை ஆகோமென்று
எழுதிவைத்து விட்டுத்தானே
செம்மணி கடந்தோம்.
ஆயுதபலத்தால் அடக்கி விடலாமென்றா
கணக்குப்போட்டீர்?
வெட்கம் கெட்டவர்களே!
விடிகாலை விழிதிறந்தபோது
முற்றத்தில் நின்றாயாம் நீ.
கோவிலுக்குக் கும்பிடப் போனால்
தேரடியில் நின்றாயாம்.
எப்படி வந்தாய் என்பதல்லக் கேள்வி.
ஏன் வந்தாய் என்பதற்கே பதில் வேண்டும்.
சிலந்தி வலைக்குள் சிக்குண்ட பூச்சியாய்
நெருப்பு வலயத்துள்ளே
எம் உறவுகள் இறுகிக்கொண்டன.
திசைக் கதவு அனைத்திலும் பூட்டு.
உடைத்துத் திறக்க முடியாது.
உள்ளே சொந்தங்கள் உறைந்து விட்டன.
எஞ்சியோர் எதுவும் எடுக்காது
கிளாலிக்கரைக்கு ஓடிவந்தனர்.
அலையெது, தலையெது என்றறியாது
கரையெங்கும் உறவுகள் திரண்டன.
இருந்தது ஒருவழி
அதுவும் கடல்வழி.
ஓடிவந்து மூச்சை ஆசுவாசப்படுத்த முன்னர்
வந்து விழுந்தன எறிகணைகள்.

அடுத்த இடி எவர் தலையில் என்று
கணக்குப் பார்த்தபடி கதறியது
கிளாலிக்கரை.
தென்னைமரத் தோப்பிலிருந்து எழுந்த அவலக்குரல்
முகிலைக் கலைத்தது.
இம்முறை எம்மைவிட்டு ஓடிப்போக முடியுமா?
என்பதான வழி மறிப்பு.
ஆயுதபலத்தின் ஆணவம்.
படகேறிய தமிழர்கள் மீதும்
ஹெலி மீதிலிருந்து சூடு.
துவம்சம்.
கோரப்பற்களில் குருதி வழிய நடந்த
நரபலி வேட்டை.
நீரேரி முழுவதும் இரத்த நிறமாச்சு.
பின்னால் கலைத்தும்,
முன்னால் மறித்தும்
உறவைச் சிறை பிடித்தாய்.
பின்னர் இவர்களைத்தான்
சின்னத் திரையில் காட்டி,
புலிகளின் உறவுதறி வந்த தமிழரென்று
பிரசாரம் செய்கின்றாய்.
இல்லை......
விபசாரம் செய்கின்றாய்.
பொய் சொல்லத்தானா தொலைக்காட்சி?
வாய்மையற்றுப் போனதா வானொலி?
குரூரத்தின் கெடுபிடி இது.
மகளும், தாயும், மாமனும், தளுவத்தவும் சேர்ந்து
அழகிய எம்வாழ்வை அழித்தீர்.
பழிசுமந்தீர்.
புலிகளின் கணக்குப் பொய்க்காது.
ஏதுமறியாத அப்பாவிகளை இம்சித்தபடி,
கொன்று குவித்தபடி,
சிங்களக் கொடியேற்றி வைப்பது
உங்கள் அகராதியில் "வெற்றிக்களிப்பு" என்றால்
சிங்கள தேசத்தில்
புலிக்கொடியேற்றப் பிரபாகரனாலும் முடியும்.
இரத்த ஆறு பெருகியோடவும்,
சடலங்கள் தெருவில் சிதறிக்கிடக்கவும்,
எட்டிக்கடந்து வந்து கொடியேற்றிய ரத்வத்தவுக்கு

ஒன்றுரைப்போம்.
அதிகார மமதையின் ஆணிவேரே!
நீ நிறுத்திப்போகும் படைகள் நிலைக்காது.
ஓடிப்போன துரோகங்களும்
எச்சிலிலைக் காகங்களும் ஊர்புகுந்தனவாம்.
எச்சரிக்கை.
தாய்மடி தொடுகின்றோர் யாரெனினும்
குரல்வளை குதறப்படுவர்.
புலிவீரம் பணியாதென்பது நிறுவிய விதி.
இது
வீம்புக்கு நீயாடும் வீதி நாடகம்.
அக்காவின் அரியணைக்கு
குறிவைத்து நடக்கும் பேரெடுப்பு.
பின்னுரிமம் வாங்கும் பிரசாரம்.
வென்றன்றி வீடுவரேனென்று
மொனறாகலையில் பேசியபோதே
உன் முகமூடி கிழிந்து போனது.
ஊருக்காகவும், பேருக்காகவும்
நீ நடத்தும் ஊமை நாடகம்.
எம் ஊர் புகுந்து எரிக்க உன்னால் முடியுமெனில்
உன்னூர் புகுந்து எரிக்க எம்மால் முடியாதா?
நீ எடுத்து வைக்கும் ஒவ்வொரு காலடிக்கும்
கணக்கு முடிக்கவேண்டிவரும்.
வலிகாமத்தை பலிபீடமாக்கிவிட்டாய்.
அடிமைகளை அழைத்துச் செல்வதுபோல
ரூபவாஹினியில் காட்சி கொடுத்தாய்.
வலிகாமம் கொண்டு சென்றாயே
அவர்கள் அடிமைகளல்ல..... வெடிமருந்துப் பொதிகள்
இனி
எம்மிலிருந்தோர் தலைமுறை துளிர்க்கும்.
கைக்கெட்டும் தூரத்தில் எதிரியுடன் மோதும்
துணிவு அவர்களுக்குச் சேரும்.
சாவுக்கு நாட்குறித்து,
நேரம் குறித்து
விரையும் பலம் இனியும் விளையும்.
பகைக்குள் புகும் பலம் கைவரும்.
விழவும்,
விழுந்தாலும் எழவும்

வீரம் அவர்களுக்குள் விளையும்.
வாழ்வதெனில் மனிதர்களாக,
அதுவும் தமிழர்களாக,
இல்லையெனில் கல்லறைகளாக
ஊட்டி வளர்ப்பவன் காட்டும் வழியிது.
பிரபாகரனென்ற நிழல் கொடுக்கும் நிமிர்வு இது.
அண்ணார்ந்து பார்க்க கண்கள் கூசும் வடிவினராய்
எம் பிள்ளைகள் இனியும் எழுவர்.
சாகாதது ஒன்றுமில்லை
சத்தியத்தைத் தவிர.
நித்தியமானது சத்தியமே.
அதர்மம் வேஷம் போட்டு ஆடும்.
கூத்து முடிந்ததும்
உண்மை முகம் உலகுக்குப் புரிந்துவிடும்.
நாங்கள் சத்தியத்தின் பக்கம்.
வெல்வோம்.
விரைவில் எம் திசைகள் வெளிக்கும்.
நீ வந்த இடம் மட்டுமல்ல
முன்னர் நின்ற இடமிருந்தும் ஓடுவாய்.
எம் எல்லை வரை விரட்டி வந்து
கொடி நாட்டி விட்டு
வெற்றியுடன் ஊர் புகுவோம்.

□□

*சித்திரை,1996.*





## புலிகள் சேனை கொடிகள் ஏற்றும்
## தலைவன் பாதை விடியல் காட்டும்.

எம் ஊரெங்கும் உயர்ந்துள்ள கற்பக விருட்சங்களே!
கண் திறவுங்கள்.
வீசும் காற்றுக்கெல்லாம் தலையசைத்து
தாளம் போடுவதை நிறுத்தி 'சக்தி' பெறுக.
உரம் பெற்ற வைர உடல்வாகும்,
குனியோமெனும் வரலாறும்
உமக்குண்டு.
பகைவனுக்கிதனை உணரச்செய்வீர்.
கோடி பனைகள் நிமிர்ந்த தேசமிது.
குலையாதெம் மனவுறுதியென
வடலிகளும் வரிசை கொள்க.
புயலுக்கும் அசையாத எம் பனைகளே!
தமிழர் தேசத்துத் தருக்களே!
"கருக்குவாளேந்தி" களத்திலிறங்குக.
ஊர் புகுந்த பகையே!
உனக்கு ஒன்றுரைப்போம் கேள்.
வேட்டை நாயென விரட்டி,
சுடுகுழல் வேலியாய்ச் சுற்றி வளைத்து
கூட்டுக்குள்ளே இழுத்துச் சென்றாய்.
ஒப்புதலின்றி உள்ளே கொண்டு சென்றாயே!
அவர்கள் அப்பாவிகளல்லர்....
அமுக்க வெடிகள்.

கோரப்பற்களின் குரூரம் அறியாது
உன் பாதத்தில் வந்து பணிந்தனராம் சிலர்.
இவர்களுன் விசுவாசிகளல்லர்...
அடிவருடிகள்.
சாகும் வரை சிம்மாசனம் தனக்கென்றிருப்போர்.
ஆங்கிலேயர் காலத்திலிருந்தே அடங்கிப்போகும்
பயிற்சியெடுத்த பரம்பரையினர்.
நீ நச்சு விளக்கென்பது
அந்த விட்டில்களுக்கு விளங்கவில்லை.
வெண்தாமரை மலர்கள்
ஆரியகுளத்திலும் பூத்துளதாமே.
நீளக் கயிற்றில் கால்களைக் கட்டி
ஆடவிட்டுள்ளாய்.
பெருவாழ்வு கைவரப் பெற்றதாய்
எம்மிற் சிலர் பொச்சடிக்கின்றனர்.
உன்னை
நச்சுப் பற்கள் கழற்றிய நாகபாம்பென நம்பி,
எம்மிற் சிலர்
தொட்டு விளையாடவும் தொடங்கி விட்டனராம்.
"ஆமிக்காரன் நல்லவன்"
"இப்படி இருப்பானெனத் தெரிந்தால்
எப்போதோ வந்திருக்கலாம்".
"அன்பாக பழகினால்
அவனும் மனிதன் தானே"
காற்றோடு காற்றாகக் கலந்து
இந்தக் கதைகளும் எழுந்து வருகின்றன.
விடுதலையின் விலாசமறியாது
இன்னும் சிலர் எம்முள்ளே இருக்கலாம்.
வீட்டுக்குத் திரும்புவதே விடுதலையென்று
வந்துன் வாசலில் வரிசையில் நிற்கலாம்.
புரதான வாழ்வின் பெருமை அறியாது,
நிவாரண வரிசையில் நிற்பதே தொழிலென,
எட்டியுதைக்கும் கால்களுக்கு முத்தமிட்டபடி,
'புத்திஜீவிகள்' சிலர் உன்னைப்பார்த்து புன்னகைக்கலாம்.
சிங்கக் கொடியை நீயேற்றும் போது
நந்திக் கொடியேற்றவும் நாலுபேர் இல்லாமலா போய்விடும்?
கூப்பிட்டழைத்துக் கொடியை ஏற்றுக.
"வானம் எம் வச"மென்று வாழ்த்துப் பாடிய சிலரை
இங்கே காணவில்லை.
சந்தக் கவிஞர்களல்லவா!

உனக்கு வந்தனம் பாட வந்திருப்பார்கள்.
வாசலில் நிற்க வைக்கவும்.
சாமரம் வீசவும் இவர்களே தகுதியானவர்கள்.
பதவியுயர்வுக்காக உனக்குப் பாதபூசை செய்வார்.
பழைய பேப்பர் வழங்குக.
அவர்கள் பாடநூல் அச்சிடட்டும்.
புத்தக வெளியீட்டு விழாவில் பேசுவதற்கு...
ஆட்களில்லையென்ற கவலையுனக்கழிந்தது.
பட்டிமன்றம்,
கவியரங்கு,
சொற்பொழிவு,
அரங்கேற்றம்,
திருவிழா காலத்துத் திருவூஞ்சற் பாட்டு,
எல்லாவற்றுக்கும் பொருத்தமானவர்கள் உள்ளே வந்துளர்.
ரோச நரம்பை அறுத்தெறிந்துவிட்டு
பேசவரக் கூடியவர்கள்.
பகையுடன் இனி உறவில்லையென்று பாடியவர்களே!
உமக்கு என்ன நடந்தது?
உள்ளி கண்ட இடத்தில் பிள்ளைபெறும் வித்தையை
உமக்குச் சொல்லித்தந்தது யார்?
பொழுதெல்லாம் பொய்யாக இருந்துவிட்டா
வலிகாமம் புகுந்தீர்?
உள்ளே செல்ல வரிசையில் நின்ற சிலர்
வெளியே வந்தவரைப் பார்த்து விசிலடித்தார்களாம்.
"பாட்டுக் கேட்கலாம்,
படம் பார்க்கலாம்.
தடுப்பாரின்றித் தண்ணியடிக்கலாம்....."
என்றபடி சிலர் சென்றாராம்.
வெட்கம் கெட்டதுகளுக்கு எப்படி விடுதலை விளங்கும்.
பற்றியெரிந்த நெருப்பிற் குளித்து,
சுற்றி வளைப்பில் சிக்குண்டு,
வன்னிக்கு வரும் வழிகள் அடையுண்டு,
விழிசிந்தி அழுதபடி
உள்ளே சென்றவரே அதிகம்.
வடமராட்சியிலிருந்து ஓடிவந்து,
கொடிகாமத்தில் வரிசையில் நின்று
உள்ளே போனதுகளும் உண்டு.
புலிகளின் கதை முடிந்து போனதென்றா
பகைவனோடு வலிகாமம் போனீர்?
எனக்கும்,
என் பிள்ளைக்கும்,

முடியுமானால் உறவுக்கும்,
என்பது வயது வரை எதுவும் நடக்காமல்
காலம் கழிந்தால் அதுவே போதும்.
விடுதலையென்ன விடுதலை.
யாருக்கது வேண்டும்?
பாலும், பழஞ்சோறும், பாணும் பருப்புமிவை
நாலும் கிடைக்குமெனில் நமக்கதுவே போதும்.
என்றெண்ணிப் போனவருக்கு
ஒன்றுரைப்போம்.
அடிமைத்தனத்தை அற்புதமென்று
பதிகம் பாடிப் பல்லக்கில் சுமக்கவா
அதிகம் விரும்பினீர்?
அடிக்கடி நாக்கு வழித்துக் கொள்ளுங்கள்.
உங்களில் உப்பு உறைக்கட்டும்.
விரைவில் எம் ஊருள் வருவோம்.
இரவு, இரவாக நீள்வதில்லையே.
காலைப்பொழுதைக் கைகளில் தந்துவிட்டு
இரவு கரைந்து கொள்ளும்.

தமிழர் தேசம் பணிந்திடாது.
தலைவன் இருக்கத் தளர்ந்திடாது.
என நினைந்து எழுக துணிந்து.
எதிரி சேனை எரியும் அழிந்து.
புலிகள் சேனை கொடிகளேற்றும்.
தலைவன் பாதை விடியல் காட்டும்.

□□

வைகாசி,1996.





# வெள்ளைத் கொடி கட்டிய
# வீட்டிலிருப்பது
# விடுதலை அல்ல.

"இதந்தரு மனையின் நீங்கி
இடர்மிகு சிறைப்பட்டாலும்,
பதந்திரு இரண்டும் மாறிப்
பழிமிகுந் திழிவுற் றாலும்,
விதந்தரு கோடி இன்னல்
விளைந்தெனை அழித்திட்டாலும்,
சுதந்திர தேவி! நின்னைத்
தொழுதிடல் மறக்கிலேனே."

பாரதி!
சுதந்திர தேவியின் பாதங்களை வருடி
ஆயிரம் வரிகளால் அர்ச்சித்த பாவலனே!
எட்டயபுரத்து அரசே!
எங்களுக்காகவா எழுதினாய் இப்பாட்டு?
கைதொழத் தக்க கவிஞனே!
காலம் கடந்தாலும் நீளும் உன்குரல்
இன்றுமெம் காதில் ஒலிக்கிறது.
நெருப்பிற் புதைத்து பழுக்கக் காய்ச்சிய சொற்களால்
பொய்யில்லாப் பாடல் புனைந்தவனே!
விடுதலையை விரும்புறும் எவருக்கும்
உன்பாடல் உருவேற்றும்.

விடுதலை! விடுதலை!! விடுதலை!!! என்று
உன் இதயக்குகையெங்கும் இருந்தது விடுதலை.
எம் தேசத் திசையெங்கும் எழுவதும் விடுதலை.
விடுதலை என்பதின் விளக்கமென்ன?
சுதந்திரத்தின் சுருதிப் பொருள் யாது?
அனுபவத்தறியாததிற்கு உவமை கூற முடியாது.
கற்பனையிற்தான் கொஞ்சம் கண்டு கொள்ளலாம்.
விடுதலையை விரித்துரைக்க முடியாதெனினும்,
இது காற்றைப் போல ஒரு உல்லாசம்,
கட்டளையற்றுப் பொழியும் மழை போன்ற சல்லாபம்,
சிட்டுக்குருவியின் சிறகசைப்பைப் போல ஆனந்தம்.
அதிகாலை இதழ் விரிக்கும் மல்லிகைப் பூவின் பரவசம்.
மலைதழுவும் கருமுகிலின் மகிழ்ச்சி.
இரு என்று சொல்லவும்,
எழு என்று உத்தரவிடவும்,
எஜமானர்களற்ற இருப்பு.
என்னை நானே தீர்மானிக்கும் வாழ்வு.
இதுவே விடுதலை.
அதற்காகவே போராட்டம்.
அப்படியா?
கற்பனையிற்கூட எத்தனை ஆனந்தம்.
கைவிலங்குகளற்ற கைதிகளாக வாழ்வதிலும்
மூச்சைத் துறந்து முடிந்து விடுவது மேலானது.
எம் ஊரில்
எம் வீட்டில்
சுற்றம் சூழ இருப்பது மட்டும் சுதந்திரமல்ல.
எம் வாழ்வை இன்னொருவன் தீர்மானிப்பது
விடுதலையுமல்ல.
பட்டிமாடுகளின் கழுத்தில் கயிறில்லை என்பதற்காக
மாடுகள் சுதந்திரமானவை என்று சொல்ல முடியுமா?
கூண்டுக் கிளியை கொஞ்சி மகிழ்வார்கள்
பறந்துசெல்லப் பார்த்திருப்பார்களா?
இன்னொருவனுக்குக் கீழே இருந்து கொண்டு
என்னை நானே தீர்மானிக்கின்றேனென்பது
எவ்வளவு வேடிக்கையானது?
வீட்டு நாய் விறாந்தையில் ஏற முடியும் என்பதற்காக
நான் சுதந்திரமானவனென்று
நாய் எப்படிக் கூறமுடியும்?
இன்று

ஊருக்குப்போன உறவுகளெல்லாம்
"ஆனந்த சுதந்திரம்" அடைந்துவிட்டோமென்று
பாட்டுக்கள் பாட பகைவன் விடுவானா?
சின்னத்திரையில் வண்ணப்படம் பார்ப்பதும்,
"சீமைச் சரக்கில்" வாய் நனைத்துக் கொள்வதும்,
பள்ளிக்குப் போவதும்,
பரீட்சை எடுப்பதும்,
வெள்ளைக் கொடி கட்டிய வீட்டிலிருப்பதும்
விடுதலையல்ல.
விளக்கேற்றாதே,
வீதிக்குவராதே,
ஆறு மணிக்குள்ளே அடங்கிப்போ என்றதும்,
கூனிக்குறுகிக் கிடப்பதும் சுதந்திரமல்ல.....
எம்வீட்டில்,
எம் ஊரில்.
தும்மவும், இருமவும் அனுமதிபெற வேண்டுமென்றால்
அந்த வாழ்வு யாருக்கு வேண்டும்?
எந்தையர் பூமியில் உலா வரும் உரிமம் கூட
எமக்கில்லை என்றான பின்பு
சும்மா மூச்சு விடுவதற்குப் பெயர் சுதந்திரமென்றால்
சொன்னவன் மனிதனல்ல..... சோற்றுப் பிண்டம்.
கைகட்டி சேவகம் செய்பவனுக்கு
காற்சட்டை வேண்டியதில்லை.
வெட்கமென்ன வெட்கம்?
நிர்வாணமாகவே நிற்கலாம்.
அடிமை வாழ்வில் அழுந்திக் கிடப்பவனுக்கு
தோலின் துவாரத்தில் வியர்வை கசிவதில்லை.
நாயாய் கிடப்பவனுக்கெதற்கு கோயிலும், குளமும்?
சுதந்திரமற்ற ஊரில் திருவிழா எதற்கு?
நான் நானாக இல்லையென்றான பின்னர்
தேனென்ன? திரவியமென்ன?
உன்னுடலுக்கெதற்கு உணவென்று
நாக்குக் கூட நகைத்துக் கொள்ளும்.
ஊரிலிருத்தல் உன்னதம் தான்
ஆனால், அடிமையற்று இருத்தல் வேண்டும்.
ஏவல் செய்து கொண்டு இந்திரபுரியில் இருப்பதிலும்
சுதந்திரமாக வனாந்திரத்தில் வாழ்வது சுகமானது.
அச்சத்தோடு அரியணையில் இருத்தலிலும்
பயமேதுமின்றி தரையிலிருத்தல் தாழ்வன்று.
மீளா அடிமையென ஊரிலிருத்தலிலும்

கைவீசிக் கொண்டு காட்டிலிருத்தலே ஆனந்தம்.
வாய்பொத்திக் கொண்டு வலிகாமத்தில் வாழ்வதிலும்
வாய் திறந்து பாடி வன்னியிலிருத்தல் மேலானது.
ஊர்வந்த பகை தொலைத்தெம் பிள்ளைகள் வருவர்.
தலைவன் கொடியேற்றினானெனும் செய்தியும் வரும்.
"எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி
இருந்ததும் இந்நாடே" என்று மகிழ்ந்து
பரந்தன் வீதியில் பாடிக்கொண்டும்,
ஆனையிறவால் ஆடிக்கொண்டும்
நாமுமெம் ஊர் புகுவோம் ஓர் நாள்.
அன்று வலிகாமம் மட்டும் மீட்டதாய் இராது.
தேசம் முழுமையும் எம் வசமானதாய்,
"தமிழீழம்" எல்லையிடப்பட்டு தனிநாடானதாய்
விடுதலையின் மெய்ப்பொருள் உணர்ந்ததாய் இருக்கும்.
உறுதி குலையாது ஒருவன் உள்ளான்
அவனெம் தலைவன்.
மானம் பெரிதென்ற மகுடம் அவன் தலையில்.
ஈனம் துடைக்கின்ற இறுமாப்பு அவன் நெஞ்சில்.
வானம் இடிந்தாலும் வளையாத மனமுண்டு
வரிவேங்கைப் படைவென்று வருமென்ற திடமுண்டு.
அடிமைத்தனத்தில் உழலும் உறவுகளுக்கு
சுதந்திரதேவி!
உன் கண்ணின் ஒளி கொடு.
நிமிர்ந்தெழ நெஞ்சில் உரம்கொடு.
விடுதலை எம் மூச்சு.
விடுதலை எம் வாழ்வு.
அடிமை நரகில் அழுந்திக் கிடப்பதிலும்
விடுதலைக்காக எழுந்து வீழ்ந்து மடிந்தாலும்
அது பெருவாழ்வெனப் பெருமை கொள்வோம்.
ஒன்றே தேசம்.
ஒருவனே தலைவன்.
வென்றே வருவோம்.
விடுதலை பெறுவோம்.



வைகாசி, 1996.



## பொங்கியெங்கள் ஊர்புகவே
## போர்க்கருவி தூக்குவோம்.
## போரில் பகை தொலையுமட்டும்
## ஊரினுள்ளே தாக்குவோம்.

வெள்ளிநிலா பால் சரித்து அங்கு விளையாடும்
வீசுகின்ற காற்றுமெமைத் தேடிவிட்டுப் போகும்
பொன்னலரி பூச்சொரிந்து எம் வரவைப் பார்க்கும்
போக வழி ஏதுவுமின்றிக் கண்ணிரண்டும் வேர்க்கும்

ஊர் மனைக்குள் வாழ்பவரும் வேரிழந்த பேர்கள்
ஊளையிட்டுச் சாகிறதாம் நாம் வளர்த்த நாய்கள்
நாமெழுந்து போர் புரிந்தால் நாளையெங்கள் ஊரில்
நம்பியெழு ஊரினுக்குள் நாம் புகுவோம் தேரில்.

எங்கோ பாட்டுக் கேட்கிறது.
எம்மில் எத்தனை பேர் அர்த்தமுணர்ந்தோம்?
நரகில் கிடந்துழலவும்
நாக்குக்கேதும் படைக்கவுமா நாம் பிறந்தோம்?
உருகியுருகி ஒன்றுமில்லாதாகி
எரியவா உயிரெடுத்தோம்?
வாழ்வு வெறும் வறண்ட நிலமாகி
தாழ்வுற்றுப் போகவா தமிழரென்றானோம்?
திருவோடும் கையுமாக தெருத்தெருவாக அலையவா
கருவுற்றுப் பெற்றாளெம் தாய்?
குயிலிருந்து பாடாத கொம்பாகிப் போகவா
தளிரீன்றோம் நாம்?
வசந்தம் தழுவாது போனதா எம் பூக்காடு?
ஆமெனினும் அடங்கிப்போ.

இல்லையெனில் எழுந்து வா.
எதுவெனினும் முடிவெடுக்க இது தருணம்.
முடிசுமந்த தலையும்,
செங்கோலேந்திய கையுமாக
கொற்றப்பந்தர் வீற்றிருந்த இனத்தின் வேர்நுனி,
நீர் குடிக்க வலுவற்று நெருப்பிடை வீழ்வதா?
புழுதி பறக்கக் குதிரைப்படை போன தெருவிலின்று
குருதிச் சேறு.
தேருலாவிய வீதியில் யாரோவொருவனின் கவசவாகனம்.
பகைவென்று வரும் போது
மகரதோரணம் விளங்கிய வாசலில்
எதிரியின் காவலரண்.
எப்படிப் பொறுப்பாய் மகனே!
எழுக என் மகளே!
நிலத்தில் இறங்குக இளைய விழுதுகள்.
களத்தில் இறங்குக தமிழர் கொழுந்துகள்.
நிமிர்ந்து கொள்ளுங்கள்
முகிலுமக்கு முகம் துடைத்துக் கொள்ளட்டும்.
எல்லாமிழந்து இல்லாதோரானோம்.
உயிர்க்கூட்டை வீட்டுத் தாழ்வாரத்தில் வைத்துவிட்டு
சதைக்கூடென ஜடமாகிப் போனோமெனினும்
பணியோம் நாம்.
இன்னும் வரட்டும் ஏழ்மை.
ஆயினும் இழிவுற்றுனக்கு ஏவல் செய்யோமென
எதிரிக்கு உணர்த்துவோம் வருக.
பிடிசாம்பலானாதா எம் பெருவாழ்வு?
இல்லை..... இல்லையடா.
திக்கெட்டுமதிர பகைக்கொன்றுரைப்போம்.
அறுகுப்புல்லின் மயிரைப் பொசுக்கலாம்
வேரையறுத்து விழுத்தவா முடியும்?
எம் முற்றம் முழுதும் எருக்கலை நாட்டலாம்.
காடாகிப் போகலாம் தாய்மடி.
மீண்டுமெழுவோம் எம் முற்றத்தில்.
உன் மூச்சுத் திணற முளைப்போம்.
இருந்து பார் பகையே! இது நடக்கும்.
எம்மைக் கொல்வாய்.
எம் பிள்ளைகளையும் கொல்வாய்
கொன்றெங்கே புதைப்பாய்?
நீ புதைக்குமிடம் புதைகுழியல்ல.....
அடை வைக்கும் இடமென்று அறிவாய் விரைவில்.
கல்லாலெறிந்து கலைத்தாய் எம்மை.
உள்ளே பிடித்துச் சென்றாய் உறவை.
இரண்டுமே உனக்கு எமனாச்சு.
உள்ளும், புறமும் உனக்கு நெருப்பு மூட்ட

நீயே வழி சமைத்துத் தந்துள்ளாய்.
உன் சீருடையில் தீப்பிடிப்பது தெரியாமல்
சிரித்த படி ஆரியகுளத்தடியில் அமர்ந்துள்ளாய்.
ஐயோ பாவம்.
எரிமலை வாசலை அடைத்தபடி
இன்னும் எத்தனை நாளிருக்கும் உத்தேசம்?
ஆனந்த வாழ்வு அடிவரை வற்றி
வறுமையுற்றுளது எம் நாளாந்தம்.
இல்லிழந்த வாழ்வே இருப்பாகிக் கழிந்தெம்
"வாழ்வு முற்றிற்று" எனத் திரை விழுந்து போமா?
ஊர் மண்ணை எம் கால்கள் தொடாமலே
இங்கோர் சுடலையில் எரியுண்டு போவோமா?
"பாறை பிளந்து பயிர்வளர்த்தோன்" பரம்பரை
சோர்ந்தோர் மூலையில் கிடத்தலென்ன விதி.
எம்மை ஊரிலிருந்து விரட்ட
உனக்கென்ன அதிகாரம்?
கூடியிருந்தும், தனித்தும்
பாடியிருந்து மகிழும் சூழலே பரவசம்.
வெறும் நிலமல்ல எம் ஊர்.
மண் மீது விரியும் ஆனந்தச் சிறகே
ஊர்வாழ்வின் வேரென்றாகும்.
இரண்டுமே இல்லையென்றாயின்
ஊரென்பது வெறும் கல்லும் மண்ணும் கலந்த
கலவை என்றாகி விடும்.
விண்ணதிர, மண்ணதிர, விரிந்தகடலதிர
கண் திறந்து வருக நம் கருப்பை உயிர்கள்.
கொற்றவை பெற்ற குழந்தைகளென
நெற்றிக்கண் திறந்து நிமிருக நம் பரம்பரை.
என் பிள்ளை களத்தில்....
என் பிள்ளை களத்தில் .....
என் பிள்ளையும் களத்திலென்று
எல்லோரும் சொல்கின்ற எழுச்சி நிலை கைவந்தால்
மண்வந்த பகையன்றே மடிந்து விழ மாட்டாதோ?

பொங்கியெங்கள் ஊர் புகவே போர்க்கருவி தூக்குவோம்.
போரில் பகை தொலையுமட்டும் ஊரினுள்ளே தூக்குவோம்
தம்பி பிரபாகரனின் தானையிலே சேருவோம்
தங்கத் தமிழீழம் வரும் நேரம் வரை சீறுவோம்.

□□

ஆனி.1996.



# விரைவில் உணர்வாய் பகையே! உன் வெற்றியெல்லாம் வெறும் கனவே.

"தலைகள் குனியும் நிலையில் இங்கே
புலிகள் இல்லையடா - யாரும்
விலைகள் பேசும் நிலையில் எங்கள்
தலைவன் இல்லையடா."

புயலோடு இடிசேர்ந்து மழைபொழியும் நேரம்
குடைவிரிக்கும் எண்ணம் எமக்கில்லை.
மயிலாசனத்திலமர்ந்து
அகிற்புகையில் தலையுலர்த்தும் ஆசையும் எமக்கில்லை.
எம்மக்களுக்காகவும்,
எமது மண்ணுக்காகவும்,
பாரச்சிலுவை சுமக்க வேகமெடுத்த எமக்கு
கொலுமண்டபம்,
வெண்கொற்றக்குடை,
திறைசேரித் திறப்பு,
அந்தப்புரம் என்று
எந்தச் சபலமும் இல்லை.
மூச்சுப்பிரியும் நொடிவரை முன்னேறுவோம்.
தடையேதும் இடைவந்து தடுக்கமுடியாது.
அருச்சுனனுக்குத் தெரிந்த மச்சயந்திரமாய்
தமிழீழமொன்றே விழிகளுக்குத் தெரிகிறது.
உயிர் பெரிதுதான் ஒத்துக் கொள்கின்றோம்.

அதனிலும் பெரிது சுதந்திரம்.
இழிநிலை சுமக்கும் தமிழர்களாக இருப்பதிலும்
பழிதுடைக்க எழுவதே பெருவாழ்வு.
பழிதுடைக்க எழுந்து களமாடி மடிந்து
குழியிலுறங்குவது குபேர வாழ்வு.
மாயமானுக்கு ஆசையுறும் மயக்கமேதும் எமக்கில்லை.
ஐந்து ஊர் கேட்டு,
ஐந்து வீடு கேட்டு,
அதுவும் இல்லையென்றான பின்னர் போர் கேட்டு
தூதுவிட எங்களிடம் "கண்ணபரமாத்மா"வும் இல்லை.
நாங்கள் பாண்டவரும் இல்லை.
தர்மத்துக்குச் சமரசங்கள் இல்லை.
அதர்மத்துக்கு நீதி நியாயங்கள் இல்லை.
பேச்சுவார்த்தை மூலம் பிரச்சனைக்குத் தீர்வென்றால்
முதலிற் கைநீட்டுவது புலிகள்தான்.
போரின் மூலமே பிரச்சனைக்குத் தீர்வென்றால்
பிரபாகரன் அதற்கும் தயார்தான்.
சரி அடுத்தது என்ன?
புலிகளை அழித்துவிட்டுப் பிரச்சனைக்குத் தீர்வென்றால்
தர்மம் தோற்றுவிட்டதாகவல்லவா சரித்திரம் எழுதும்.
"ஆயுதங்களைப் போட்டுவிட்டுச் சரணடையுங்கள்"
அதன் பிறகு பேசலா மென்றால்.....
நாங்களென்ன 'சம்பற்பள்ளத்தாக்கு'க் கொள்ளைக்காரரா?
குனியாத தலையும்,
வளையாத முதுகும்,
தணியாத தாகமும்,
உள்ளவர் புலிகளென்று உலகறியும்.
சத்தியதேவதைக்கு ஒப்புக் கொடுப்பரென்று
சந்திரிகா அரசுக்கும் தெரியும்.
வா பகையே! வந்தெம் நெஞ்சேறி மிதி.
பூவாகவும், பிஞ்சாகவும் எம் மரமுலுப்பிக் கொட்டு.
வேரைத் தறித்து விழுத்து.
தீமூட்டி எரி எம் தேசத்தை.
எனினும் பணியோமென்பதை நெஞ்சில் வைத்திரு.
இறுதிவெற்றி எவருக்கென்று பகடையுருட்டு
தோல்வி உனக்கின்றி எமக்கில்லை.
'கிபிர்' இருக்கும் திமிர் உனக்கு.

உலகநாடுகள் அள்ளித் தருமென்ற
எண்ணத்தில் வந்து எரிக்கின்றாய்.
எரித்து முடி.
எல்லாம் எரியுண்டு போனதாய் எண்ணி
குளித்துவிட்டு நீ தலைசீவும்போதே குண்டுகள் வெடிக்கும்.
இதுதான் புலி.
இந்த இரகசியத்திற்குப் பெயர்தான் பிரபாகரன்.
எம்மை வெல்லும் திறன் உனக்குமில்லை.
உன் படைக்குமில்லை.
ஹலோ அநுருத்த ரத்வத்த!
புதுமாப்பிள்ளைக்குப் பெரிய வாழ்த்துக்கள்.
ஐம்பத்தாறு வயதில் உமக்குக் கலியாண ஆசை
ஆறிரண்டு பருவத்தில் எமக்கு விடுதலை வேட்கை.
எப்படி எம்மை நீ வெல்லுவது சாத்தியமாகும்?
பத்திரகாளியாய் நீங்கள் பலியெடுத்துக் கொள்ள
அப்படியென்ன கேட்டோம் உங்களிடம்?
கொழும்பை எமக்குத் தாவென்றா கேட்டோம்?
காலித் துறைமுகத்துக்கு வேலியிடவா வந்தோம்?
தலதாமாளிகையின் தங்கக் கவசத்தை
கொடுவாள் கொண்டு கொத்தவா நின்றோம்?
சிங்களவருக்கு இந்நாடில்லை யென்றாவது சொன்னோமா?
நமது நிலத்தைத்தானே நாங்கள் கேட்டோம்?
"நம்மை நாமாக.... நமது நிலத்தில்வாழ
எம்மை விடும்" என்பது எப்படி தவறாகும்?
இதிலென்ன பிழைகண்டு இந்தக்கூத்து?
மாங்கனித் தீவென்றும், மரகதத்தீவென்றும்
நாங்கள் எல்லாரும் பாட்டுக்கள் பாடிக் கொண்டிருக்க
நீங்கள் வேட்டுகள் தீர்த்துக் கொண்டீர்.
வந்தது வினை.
அதன் பிறகும் உம்மோடு அண்டியிருக்கவென்று
விதம் விதமாய் முயன்றோம்.
நீங்கள் விடவில்லை.
கதை முடிந்து போனது.
கட்டிய கோமணத்தையும் கழற்றென்றீர்கள்.
எப்படி நிர்வாணமாக நிற்கமுடியும்?
வெளியேறிக் கொண்டோம்.
இன்று ஆநிரை கவரவா ஊர் புகுந்துள்ளீர்?
விளைவு என்னவானாலும் விடமாட்டோம்.

எம்மண்ணில் முறியும் ஒவ்வொரு மரமும்
முளைவைத்து விட்டே முறிகிறது.
பிரியும் ஒவ்வொரு உயிரும்
அடுத்தகணமே இன்னோர் உடலாகி நடமாடுகிறது.
தளரோமென்று காற்றுச் சத்தமிடுகிறது.
உன்மீதான கோபத்தில் முகம் சிவந்து
இங்கு வெள்ளைப் பூக்களும் சிவப்பு நிறமாயின.
கருப்பைக்குள் எம்பிள்ளைகள் அசையும் போதே
நெருப்புக்குள் நீந்தப் பயிற்சியெடுக்கின்றனர்.
எங்கள் அத்திவாரமே வித்தியாசமானது:
புலிகள் கறுப்பு
பிரபாகரன் நெருப்பு!
விரைவில் உணர்வாய் பகையே!
உன் வெற்றியெல்லாம் வெறும் கனவே!

□□

ஆனி 1996





# பொங்கியெழுந்தினிப் போராடுவோம். எம் ஊரில் வந்த பகைவிரட்டி வரலாற்றை வெல்வோம்.

பெரிய வாழ்வொன்றுக்கு அதிபதிகளாக
இருந்தோம் ஒரு காலம்.
பனிநீரில் குளித்தெழும் அதிகாலையாக
அழகாய் இருந்ததெம் ஊர்.
ஊரெல்லாம் திருவிழா,
உறவெல்லாம் வீதியுலா என்று,
ஆயிரம் பேதங்கள் எமக்குள் இருந்தாலும்
அதற்குள்ளிருந்தது ஆனந்தம்.
இன்று எங்கே போனது அந்த இனிய வாழ்வு?
எவர் பறித்தார் எம் எழிலை?
தமிழா! கிடந்தது போதும் எழுந்து கேள்விகேள்.
எவர் பறித்தார் எம் வாழ்வையென்று?
எட்டுத்திக்கும் எதிரொலிக்க
உரத்துக்கேள். உனக்கொரு பதில் வேண்டும்.
நாம் பிறந்த மண்ணில் நடக்க முடியாது,
நிமிர முடியாது,
பூக்க முடியாது,
புன்னகைக்க முடியாது.
யாரோ ஒருவனின் கட்டளைக்கு நடுங்கி
நரகத்தில் கிடந்துழலும் வாழ்வினி

என்று தொலையும்?
காற்றுக்கொதுங்கிய போர்த்துக்கீசனின்
கண்ணிலெம் தாயகம் தெரியும்வரை,
தலையில் கட்டிய தலைப்பாகையை
முகில் தொட்டுப் போவதென
உயர்ந்த வாழ்வுக்குரியவராய் இருந்தோம் நாம்.
எம்மை நாமே எழுதினோம்.
வெடிமருந்துடன் வந்தவனை
வேலும், வாளும் வெல்லமுடியவில்லை.
வேறொருவனின் காலில் விழுந்தோம்.
கிணற்றில் விழுந்த குங்குமச் சரையாய்
கொஞ்சம் கொஞ்சமாய் கரைந்தோம்.
யானைகள் மிதிக்கும் சேனைப் புலவாய்,
மாறி மாறிப் பலரின் மகுடத்தின் கீழ்
நாறிக்கிடந்தது நம் வாழ்வு.
வெள்ளைக்காரன் வெளியேறியபோது
சேனநாயக்காவுக்கு சிம்மாசனம் கிடைத்தது.
அன்று தொடங்கிய அவலம்
இன்றுவரை தொடர்கிறது.
ஆள்பதிகள் மாறினர்
எங்களுக்கு எந்த மாற்றமும் எட்டவில்லை.
தமிழரின் வாழ்வைத் தணலிலிடுவதிலேயே
அவர்களின் அதிகாரப் போட்டி,
இப்போது சந்திரிகாவின் முறை.
படைகளே ஆட்சிசெய்யும் அடக்கு முறை உச்சம்.
தமிழனே! அழுவதை நிறுத்து.
உன்னை உள்ளுக்குள்ளேயே இழுத்திழுத்து
ஆமையாய் கிடந்தது போதும்.
மிதித்த இடத்துப் புல்லுச் சாகுமெனக்
குதிக்காதிருந்தாய். என்ன நடந்தது?

> "நாளுமுன் ஊரினில் ஊரடங்கும் - உன்
> நாய்களும் ஊமையாய் வாயடங்கும்
> வாழுமுன் உரிமையும் போயடங்கும் - தமிழ்
> வாசல்கள் யாவிலும் பேயுறங்கும்."

கண்ணீர்விட்டு வளர்ந்த விடுதலைப் பயிரை
கருக விடலாமா?

குருதி சொரிந்து ஏற்றிய சுதந்திரக் கொடியை
எரிய விடலாமா?
பல்லாயிரம் பிள்ளைகளின் கல்லறைகள்
வெறும் புதைகுழியல்லவே.
கருத்தரிக்கும் கருவறையென்றல்லவா எழுதினோம்.
பொய்யாய், புனைகதையாய் மெல்ல, மெல்ல இருண்டு
இல்லாமற் போகுமா எம்வாழ்வு?
கலங்காதிரு மனமே!
என்ன நடந்துவிட்டது இப்போது?
நாளைக்கே உலகம் அழியுமென யார் தேதி குறித்தது?
காற்றினி வீசாதென யார் சொன்னது.
நெஞ்சின் உறுதியும், நிமிரும் சக்தியும்
தொலைந்து போகாதிருக்கக் கடவது.
பல்லைக் கடித்துத் துயரைத்தாங்கு.
பகற்பொழுது இனிமேற்தான் வரப்போகிறது.
துப்பாக்கிகளும், பீரங்கிகளும்
சுதந்திரதேவியைச் சுட்டெரிக்க முடியுமெனில்
உலகம் ஒரு நாடாகவல்லவா இருந்திருக்கும்.
அமெரிக்காவின் ஆயுதபலத்துக்குப் பணிந்திருந்தால்
வியட்நாம் நாடு விழிதிறந்திருக்க முடியாதே.
சுதந்திரத்தீயை சுட்டெரிக்க இன்னொரு நெருப்பில்லை.
விடுதலையென்பது அடிவற்றிப்போகும் ஆற்று நீரில்லை.
பீறிட்டுக் கிளம்பும் பூகம்பம்.
தெருவிற் கிடந்தெடுப்பது சமரசம்.
உயிர்கொடுத்து வாங்குவதே உரிமை.
போராட்டமே வாழ்வான பூமியில்
வாரோட்டம் எதற்கு?
விடுதலைப் போரென்பது தலைமுறைக்கான விலைகொடுப்பு.
அடிமை வாழ்வை அறுத்து.
நெடிய பனை போன்ற நிமிர்ந்த வாழ்வுக்காக
உயிரைக் கொடுக்கும் ஒருவேள்வி.
நித்திரைக்கு இதுவல்ல நேரம்.
போராடும் தேசத்தில்
சாய்மனைக் கதிரைகளை தடைசெய்ய வேண்டும்.
பாயையும், தலையணையையும் கொழுத்தலாம் குற்றமல்ல.
தாயாள் பசித்திருக்க
எமக்கு தங்கத்தில் நகையெதற்கு?

ஆடாதகாலும், அசையாத உடற்தசையும்
கூடாது தமிழனுக்கு.
குருதியிலே தமிழ் வீரம்
போடாத தாய்க்குப் பிறக்காத தமிழ் மறவா!
பொங்கியெழுந்திங்கு புலியாகு
எம் ஊரில்......
வந்த பகை துரத்தி வரலாற்றை வென்றெடுப்போம்.

"விழிகள் திறந்து வெளியிற் பறந்து
வருக புலிகள் சேனையில்.
விடியும் அழகை விரைவிற் பருக
எழுக புலிகள் சேனையில்
தலைவன் காட்டும் வழியில் எழுந்து
வருக புலிகள் சேனையில்
தமிழர் தேசம் நிமிரும் நேரம்
எழுக புலிகள் சேனையில்."

□□

ஆடி, 1996.





# நந்திக்கடலோரம்
# முந்தைத்தமிழ் வீரம்
# வந்து நின்று ஆடியது நேற்று.

சிங்கள ஆதிக்கத்தின் சிம்மாசனத்திற்கு என்னபெயர்?
'சந்திரிகா அரசு'
வேரறுத்து தமிழினத்தை விழுத்தி
கொளுத்தியெரிப்பவர்களுக்குத் தளபதி யார்?
'அனுருத்த ரத்வத்த'
துரோகத்தின் உச்சத்துக்கு சமகால உதாரணம் சொல்க?
'லக்ஷ்மன் கதிர்காமர்'
கையிலுள்ள எலும்புத் துண்டுக்காக
காலைச் சுற்றிவரும் அவமானத்துக்கு
மனிதப் பெயரென்ன?
'டக்ளஸ் தேவானந்தா'
கடல் வற்றக் காத்திருந்து
குடல்வற்றிச் செத்த கொக்குக்கு
புதிய உவமை கூறுக.
'நீலன் திருச்செல்வம்'
நாளையெம் தலைமுறையின்,
இன்றைய வரலாற்றுப் பொது அறிவுப் போட்டிக்கு
இதுவே கேள்வியும் பதிலும்.
என்ன பாவம் செய்தது ஈழத்தமிழினம்?
கண்ணீரோடு இன்னும் எத்தனை காலத்தைக் கழிக்குமோ?
மூச்சை ஆசுவாசப்படுத்த முடியாத துயரப் பயணத்தில்

தமிழீழம், தேற்ற ஒருவரற்ற தேசமா?
உயிர் மூட்டையான உடலில்,
உரைப்பை மூட்டையைச் சுமந்தபடி,
பகலில் மரத்தின் கீழும்,
இரவில் மதவின் கீழும்,
வாழும் எச்சில் வரலாறு எவன் கொடுத்தது?
ஈழத்தமிழனுக்கு இந்தவிதியை எழுதியவன் யார்?
கடவுளா?
அவன் கடவுளெனினும் கழுவிலேற்று.
இப்போது மழை காலம்.
ஊரின் முகடு பிரிந்து ஒழுகுகிறது.
சூரியன் எரிகிறது.
மாரிமழை நனைக்கிறது.
கூதற்காற்றோ கொடுகுகிறது,
நுளம்புக்கும் தமிழன் குருதியே குழம்பு.
ருசித்து புசிக்கிறது.
வானக்கூரையின் கீழே ஈழத்தமிழரெல்லாம்
சபிக்கப்பட்ட பாவமக்களாக.....
இங்குமங்குமாக எங்கெங்கோ அலைந்து விட்டு
மரத்தடியையே மாளிகையாக்கி
இப்போது தூளிகட்டிக் கொண்டனர்.
அதற்குள்ளே ஆனந்தமாகத் துயில்கிறது
ஏதுமறியாத எம்மினத்தின் குருத்து.
சந்திரிகா அரசு தமிழரின் வாழ்வை
கொத்திக் குதறிச் சடலமென வளர்த்திய போது
எழுந்த ஒப்பாரிகளும், கூக்குரல்களும்
இன்று வெந்து தணிந்து வெறும் முனகல்களாகி விட்டன.
ஐயோ பாவமெனச் சொல்லிய பல்லிகளும்
வாயடங்கி மௌனித்து விட்டன.
உலகத்துக்கும் பல சோலிகள்
ஈழத்தமிழரை பார்க்க எங்கே நேரம்?
தன்னைத்தானே சுற்றியபடி
சூரியனையுமல்லவா சுற்றிவரவேண்டும்?
அழுகின்ற தமிழனுக்கு ஆறுதல் சொல்ல முடியாது
பூமியும் பேசாமற் சாமியிடம் விட்டுவிட்டது.
சாமியும் இப்போது ஆமியிடம் கொடுத்து விட்டு
பன்றிக்குப் பால்கொடுக்கப் போய்விட்டார்.
தாயுமானவருக்கும் தமிழரைப் பார்க்க நேரமில்லை
ஓய்வு தேடி உறக்கத்தில் கிடக்கின்றார்.

கவிஞர்களின் பேனாக்களும் களைத்துப்போய்விட்டன.
எத்தனை கவிதை தான் எழுதுவது?
மூக்கிலும் விழிகளிலும் ஒழுக்கும் வெள்ளீரை
எத்தனை வரிகளிற்தான் ஒத்தியெடுப்பது?
கவிஞர்களும் கண்ணயர்ந்து விட்டனர்.
ஈழத்தமிழன் வாழும் தமிழனாக
இன்றுவரை இல்லை.
என்கையிற் பிள்ளை எனக்கே அடைக்கலமென்று
தமிழர்களை அவலமே தத்தெடுத்து விட்டது.
துன்பத்தில் திரிபோட்டு கண்ணீரே விளக்கெரிக்கிறது.
ஈழத்தமிழனின் போரிற்தான் எத்தனை வியாபாரம்?
நாடாளுமன்றுக் கதிரைகளில் சில பச்சோந்திகள்.
இடைக்கால அரசை எம்மிடம் தாருங்களென்று
படை நடத்தப் புறப்பட்ட சில பழைய 'தளபதிகள்'.
"வெள்ளைவான்" வெறியர்களாகச் சிலர்.
தலையாட்டும் தஞ்சாவூர் பொம்மைகளாக இன்னும் சிலர்.
போராட்டம் சிலருக்கு பெரிய வியாபாரமானது.
நெருப்பெரியும் நிலமாகத் தாயகம்,
தெருத் தெருவாக உறவுகள்,
கல்லறைகளுக்குள்ளே வல்லமைகள்.
இப்படி எத்தனை விதமான விலை கொடுப்பு.
விடுதலை உயிர்ப்பின் வேரின் அடியில்
உயிரையே உரமாக்கும் ஈகத்துடன் புலிகள்.
கண்ணீரைச் சுமக்கும் விழிகளெனினும்
உள்ளே பார் ;தீயின் நாக்குகள் சுடர்கின்றன.
சொல்பகையே!
ஊரூராக எம் உறவுகளைக் கலைக்கின்றாய்.
கலைத்துவிடு.
அகதியென்று உலகத்திசையெங்கும்
தமிழரை அவதியுறக் கலைக்கின்றாய்.
கலைத்துவிடு.
உறக்கத்தில் கிடக்குமா எம்மினம்?
பக்கவிளைவைப் பார்..... உனக்கது அச்சமூட்டும்.
மட்டக்களப்பிலிருந்து.....
திருகோணமலையிலிருந்து....
மன்னாரிலிருந்து...
யாழ்ப்பாணத்திலிருந்து.....
இன்று வன்னியிலிருந்தும் கலைக்கின்றாய்.

கலைத்துவிடு.
ஈழத்தமிழனின் இளைய தலைமுறைக்கு
கோபம் கொப்பளிக்கட்டும்.
வாழும் உரிமையைப் பறித்தாயே பாவி என்று
தேகம் கொதிக்கட்டும்.
போராடி என்னூர் புகுவேன் என
நம்பிக்கை உதிக்கட்டும்.
இலவம் பஞ்சு வெடிப்பது இனத்தை விருத்தி செய்யவே.
மரங்கள் விதையுதிர்ப்பது புதிய தளிர்களுக்காகவே.
பகையே சொல் !
ஈழத்தமிழனை என்ன செய்யப் போகிறாய்?
கூழாகக் காச்சிக் குடிக்கவா போகிறாய்?
குடித்து முடி.
வயிறு வெடித்துக் கிடப்பாய்.
உனக்கு அழிவில்லையென்றா வரம் பெற்றாய்?
எம் இளைய தலைமுறை"நரசிம்ம அவதாரம்"எடுத்துள்ளது.
சந்ததியின் சக்தி வலுப்பெற்று வருகிறது.
முல்லைத்தீவு.....அதற்கு முன் உதாரணம்.

நந்திக்கடலோரம் முந்தைத்தமிழ் வீரம்
வந்துநின்று ஆடியது நேற்று
தந்தணத்தோம் தா தெய் என்றுநடமாடி
இங்குவந்து வீசுறது காற்று.

□□

ஐப்பசி, 1996.





## பூவரசம் வேலி பொறுக்காது.
## பனைவடலிகள் பணியாது.

ஆறுமணியுடன் அடங்கிப்போவென
அதட்டுகிறது அரசகட்டளை.
ஏனென்று கேட்க எவருமிலர்.
கரப்புக்கூட்டுக் குஞ்சுகளென
திறந்துவிட்டதும் தீனிபொறுக்கி,
உள்ளே போ என்றதும் ஓடியடங்கி,
அடிமைத் தனத்தை அறிந்துகொண்டோம்.
எல்லையிடப்பட்ட மண்ணரனுக்குள்ளே
ஒரு வாழ்வமைத்து
எரிந்து கொண்டிருக்கின்றோம்.
மரம் கூடக் கையசைத்து மகிழ்கிறது.
சிரம்தாழ்த்திக் கிடக்கின்றோம் நாம்.
ஒவ்வொரு "சென்றி" யையும் தாண்டும்போதும்
நீங்கள் எமக்கு அடிமைகளென
"காக்கிப்பார்வைகள்" கத்துகின்றன.
ஆமாம் எனத்தலையாட்டி நடக்கின்றோம் மௌனமாய்.
இதற்குமேலும் இழிவில்லை என்பதை
உணர்கின்றோம் உள்ளே.
வாய்திறக்க முடியாத வதை.
நெருப்பாய் தகிக்கிறது நெஞ்சு.
கோபம் கொப்பளிக்கிறது.

என்ன செய்ய இயலும்?
பொறிக்குள் அகப்பட்ட பூனைக்குட்டியாய்
கழிகிறது எம் நாட்கள்.
இயல்புவாழ்வு திரும்பியதாய்
"ரூபவாஹினி" அலறுகிறது.
மீட்கப்பட்ட மக்களென எம் முகங்களைக் காட்டுகிறது.
இல்லை, வெறும்பம்மாத்து...., சுத்தப்பொய்,
கத்தவேண்டும் போல கோபம் வரும்.
கத்தலாம்.
காணாமற்போனோர் பட்டியலில் பெயர் வரும்
உயிர் வராது.
நள்ளிரவில் கதவு தட்டப்படும்.
திறந்தால் பிடித்துச் செல்லப்படுவோம்.
திறக்காது விட்டால் அடித்துக் கொல்லப்படுவோம்.
பள்ளிக்குப் போவாரெம் தங்கைகள்.
ஒவ்வொரு சென்றியிலும்
கண்களாலேயே கற்பழிக்கப்படுவார்.
பையைத் திறவென்பான்
துப்பாக்கி ஏந்திய சனியன் ஒருவன்.
கையைக் காட்டென்பான் இன்னொரு தூத்தேறி.
"அச்சாப் பொண்ணு
ஆதரே மினிசு" என்று
பாட்டுப் பாடுவான் இன்னொரு பரதேசி.
தினமும் தீக்குளித்தபடி சென்று திரும்புவார்கள்.
" ஏய்புலியைக் கண்டது.....
சரிதாங்..... பொய் சொல்லக் கூடாதிங்"......என்றபடி
சுடுகுழலால் நெஞ்சினில் இடிப்பான்.
சந்திகள் யாவிலும் இது சடங்காகிப் போனது.
அதிகாலை புலராப் பொழுதில்
உயிரை ஏறிமிதிக்கும் சப்பாத்துச்சத்தம் கேட்கும்.
நெஞ்சுக்கூடு உலர்ந்து விடும்.
சுற்றி வளைக்கப்பட்டு
"மீட்பர்களால்" மிதிக்கப்படுவோம்.
காவலரண்களாலும்
கம்பிச் சுருள்களாலும் பின்னப்பட்டு
மிதிக்கப்படுகிறது எம்மண்.
வலைக்குள் அகப்பட்ட மீனைப் போல
துடிக்கிறது எம் ஊர்கள்.
மூத்திரம் பெய்யவும் முன்னனுமதி பெறுவதெனில்

ஆத்திரம் வராமல் என்ன செய்யும்.
மீளப் புனரமைப்பு என்று கொழும்பு சொல்லும்.
உதவி வழங்கும் நாடுகளும் ஒப்புக்கொள்ளும்.
சிறையிருக்கின்றோம் என்பது தெரியாது அவர்களுக்கு.
முகிலுக்குள்ளே நிலவு விழுந்து கிடக்கிறது.
இருட் திரைக்குள்ளே எம் இருப்பு.
தேவாரம் கேட்ட திருத்தலங்களிற் கூட
சாராய வாடை.
எம் மனக்கோட்டைகள் யாவும் எரிந்து போக
இப்போ அம்மணமாக நிற்பதை அறிகின்றோம்.
விதியெழுதிய தீர்ப்பென பேசாமற் கிடக்கவும்
விடுதலை வேட்கை விடவில்லை.
குயில்கள் பாடும் வசந்தத்தை இழந்து
எம் குடியிருப்புகள் தவிக்கின்றன.
புயலுக்கு முந்திய அமைதியென
எம் பொழுதுகள் கழிகின்றன.
எனினும்.....
" தேவகுமாரர்கள்" வருவாரெனும் நம்பிக்கையே
மடிநிறைந்துள்ளது.
எம்பிள்ளைகள் வருவர்.
சப்பாத்துக் கால்களால் மிதிபடும் தெருக்களில்
மீண்டும் "வரிச்சீருடை" யில் உலா வருவர்.
இந்த மண்ணரனும்,
கம்பிச்சுருள்களும்,
சென்றிகளும் என்ன செய்யும் அவர்களை?
பிள்ளைகளின் மூச்சுப்பட்டே பொசுங்கிப் போகும்.
"பஞ்சகல்யாணிக் குதிரை" யேறி
காற்றாய் விரைந்தெம் தெருவிலிறங்குவர்.
எம்மண்ணின் தலைவன் வன்னியிலிருந்து வருவான்.
படை நடத்தியபடி அவன் வரும் தேர்
நகர் புகும் போது
பகைவர் எந்தப் பக்கமாய் ஓடுவர்?
ஓடுவதா? அதுதான் இல்லை.
ஒருவர் கூட எஞ்சாது துடைத்தழிக்கப்படுவர்.
நடக்காமற்போகுமா இது?
நிச்சயம் நடக்கும் இந்த வரலாற்று வெற்றி.
சுயத்தை அழித்து
எம்மண்ணைச் சுடுகாடாக்கி
பயத்தின் பிடிக்குள்ளெம்மை இறுக்கவா நினைத்தாய்?

பகையே! கொஞ்ச நாள் ஆடு.
ஆடி முடி.
பூவரசம் வேலி பொறுக்காது.
செம்பாட்டு மண்ணுக்குச் செருக்குப் பிடிக்காது.
பனைவடலிகள் பணியாதென்பது
நீ அறியாததா?
சும்மா வாசத்துக்காக பூத்துவிழும் மலர்களல்ல எம்பூக்கள்.
வாசம்மில்லாவிடினும் ரோசம் மிக்கவை
எமது செல்வரத்தைகள் என்பதறிவாய் விரைவில்.
தப்புக்கணக்குப் போட்டுள்ளாய் சந்திரிகா!
எத்தனை நாள் வைத்திருப்பாய் எம்மண்ணை?
ரத்தத்தால் எழுதும் யுத்தக் கணக்கை
ரத்வத்தையா எழுதுகின்றார்?
ஹொரந்தாய்.
வீடு கொழுத்தும் ராணிக்கு....
நெருப்பெடுத்துக் கொடுக்கும் மந்திரி
மாமனுக்கும், மருமகளுக்கும் அச்சாப் பொருத்தம்.
ஒன்று செய்யுங்கள்.
போட்டுமூட பொருத்தமான இடத்தில்
குடா நாட்டினுள் குழி தோண்டுங்கள்
யாரை மூட?
உங்கள் படையினரை மூட.

"ஒருநாள் விடியும் இருளும் முடியும்
உதயம் தெரியும் பொழுதிலே - அந்தத்
திருநாளிங்கே வரும்போதினிலே
வருவோம், வருவோம் மகிழ்விலே"

□□

மார்கழி ,1996 - தை, 1997





# உலக மனச்சாட்சியின் உரத்த குரல்களுக்கு ஒரு விண்ணப்பம்.

எம் மண்ணில் இனிவரும் நாட்களில்...
மந்தமாருதம் தழுவும் வசந்தோற்ஸவம்.
மரங்களுக்கு ருதுசோபனம்.
குயில்கள் எம் முற்றத்து வேம்புகளில் வந்து
குக்கூவெனக் குரலெடுத்துக் கூவும்.
அடுத்தடுத்து வரும் திங்கட்கிழமைகளில்
அம்மன் கோவில்களில் பொங்கல் நடக்கும்.
வேப்பிலையும், வெட்டரிவாளுமாக
காவலிருந்த தேவியின் மேனிகுளிரும்.
வெக்கை தணிந்து போவாள் வீரமாகாளி.
எனினும் எம்மண் தன்னிலைமை மாறாது.
பணிதலறியாதவள் எம் தாய்.
கண்களில் மையும்;
கால்களில் சிலம்பெனினும்
கைகளிலிருந்து வீரவாள் நழுவாது.
சுற்றிவளைத்து எல்லைகளைச் சுருக்கி,
தேசத்தை சிறையிருத்திவிட்டு,
பேசலாம் வருகவென மேசைக்கழைத்து,
எச்சிற்சோறளித்து ஏமாற்றிவிடலாமென
யாரும் நினைத்தால்.....
பாவம் அவர்கள்.
வெட்டியடித்து விட்ட வெறும் வயலென்று
எட்ட நின்று எம்மைக் கணக்கிடுவோர் எவரெனிலும்

நாங்கள் முளைக்கப் போட்டிருக்கும் நாற்று மேடையை
முதலில் அளவெடுத்துக் கொள்ளுங்கள்.
உள்ளே எரிந்தபடி கிடக்கும் எரிமலையை
கொத்திப் பிளந்து குளிரவைப்போமென
எத்தனை பேர் வந்து போயினர்.
சோதிப்பிழம்பை எவராலும் தொடமுடியவில்லை.
பசித்த வயிறெனினும்
யாசித்தறியாதவள் எம் தாய்.
வாசலுக்கு எவர் வந்தாலும் வரவேற்பாள்;
அடங்கிப் போவென யாரும் பணித்தால்...
எக்காளத்தொனியில் எம்தாய் சிரிப்பாள்.
விழிகள் சிவந்து விரிய;
சீதளத் திருமுகத்தில் தீயெழ
பிள்ளைகளைப் போர்க்களமனுப்புவாள் பெருமாட்டி.
உலக மனச்சாட்சிக்கு
ஒரு விண்ணப்பம்.
எத்தனை வதைபட்டு
இடிந்துள்ளோம்.
இங்கே ...... குஞ்சுகளை இழந்து
ஒவ்வொரு கூடும் துடிக்கிறது.
உயிரைக் கரைத்தெடுத்த
நீரில் உலையேற்றி
அமுது படைக்கின்றோம்.
எம்மை
தூக்கி நிறுத்த ஒருவரற்று
தோளிற் சுமைதாங்கியுள்ளோம்.
ஆண்டனுபவிக்க
ஒரு அரசுகட்டில்,
வேண்டுமென்பதற்காக
நாங்கள் போராடவில்லை.
பத்துத்
தலைமுறைக்குச்
சொத்துச் சேர்த்து விட்டு
செத்து விட வேண்டுமென்ற
சொப்பனங்கள் எமக்கில்லை.
தங்கக் கட்டிலில் சயனிக்கும்
கனவேதும் கூட
எங்களுக்குக் கிடையாது.
எங்களை மனிதர்களாக....
எங்களைத் தமிழர்களாக....

வாழ வழிசமைத்தீர்களானால்.....
கோடி நமஸ்காரம்.
உலக மனச்சாட்சியின்
உரத்த குரல்களே!
உண்மைக்கு ஒளியூட்டுங்கள்.
தர்மத்துக்குச் சாட்சியாகுங்கள்.
"நாமார்க்கும் குடியல்லோம்
நமனை அஞ்சோம்"
ஆதிக்கத்துக்கெதிராக
போரிடு என்று
அப்பர் சுவாமிகள் போதித்த
அனல் வரியிது.
குனிந்த தலை நிமிராது
பணிந்து போவென்று
எந்த மதமுமே
எடுத்துரைத்தது கிடையாது.
அடக்கவருபவர்முன்
அடங்கிப் போவென
கடவுளெவரும்
கட்டளையிட்டதில்லை.
அன்புக்கு
தலை வணங்கு என்பது
ஆணவத்துக்குச்
சாமரம் வீசென்ற அர்த்தமல்ல.
சாந்த சொரூபம்,
சமரச தேவர்களென
நம்பி ஏமாந்த வரலாறே நமது.
களான்களுக்குக் குடை பிடித்து
கைசலித்தவர்கள் நாங்கள்.
கொஞ்சம் நிமிர்ந்து உட்கார நினைத்தாலே.....
சிம்மாசனத்துக்குத் தீமூட்டி விடுகின்றனர்.
திறைசெலுத்தி சிற்றரசாக இருவென்றால்,
தமிழன் அங்க அடையாளங்களையிழந்து
அழிந்து விடுவான்.
நாங்கள் சாவுக்குத் தாலிகட்டி
பாடைக்குப் பரிசு கொடுப்பவர்களல்லர்.
அமைதிப் புறா வந்து தோளிலிருந்தால்....
அதைத் தட்டிவிடுபவர்களுமல்ல.
வெள்ளைப் பூக்களே எமக்கும் விருப்பம்.
இலை சொரிந்து மொட்டை மரமாகி
எழிலிழந்து கிடக்கிறது எம் வாழ்வு.

ஊற்று வாய் அடைத்த கிணறு போல்
இடிந்து கொண்டிருக்கிறது எம் தேசம்.
புயலடித்த பூமி போல
அழகிழந்து விட்டாள் எம் அன்னை.
வாழ்வுக்கு ஏங்குவதே எம் வரலாறாகி விட்டது.
விலங்கற்றுக் கைகளை வீசி
எம் தெருக்களில் நடக்கவே விரும்புகின்றோம்.
நில்லென ஒருவன் நிறுத்தவும்,
செல்லென இன்னொருவன் உத்தரவிடவும்
எஜமானர்களற்ற பூமிக்கே ஏங்குகின்றோம்.
காற்றைப்போல ஒரு கட்டற்ற வாழ்வு
நேற்றெமக்கு இருந்தது.
மீண்டுமந்த வாழ்வை
எம் வாசலிற்காண அவாவுற்றோம்.
கேட்டோம்!
தரமறுத்த போதே
இந்தத் தர்மயுத்தம் கருக்கொண்டது.
எந்தவழியெனிலும்
எமக்கு வேண்டும் விடுதலை.
கோடி இன்னல்கள் வந்து குதறட்டும்
ஆடி விழாது இந்த ஆலமரம்.
நிலத்தைப் பறித்து நெருப்பூட்டுவதால்....
பலமிழந்து போகாதெம் படையணி.
ஒன்று பத்தாகி... பத்து நூறாகி
வென்றொரு நாள் வீடுவரும் கன்றுகள்.
துப்பாக்கி வாயில்
உலோகச் சன்னங்களுக்குப் பதிலாக
பூக்களைச் சொருகச் சொல்கின்றீர்.
சரி, அப்படியே செய்கின்றோம் ஆண்டவரே!
எமக்கு விடுதலைப் பொருளைத் தருவதாக இருந்தால்...
உலக மனச் சாட்சியே!
சமுத்திரங்களைக் கடந்து
உங்கள் கைகள் நீளுகின்றன.
நமக்காகவென்றால்.....
நன்றிகள்.

□□

பங்குனி ,சித்திரை 1997.



## கனவுக்குள் கரையாதே
## பகையே!
## நிமிருமெம் தேசம்
## நெருப்புக் குளிக்கும்.

ஜனனம்....களிப்புக்குரிய தென்றால்....
மரணம் மட்டும் என்னவாம்?
சாதகப் பறவையின் சங்கீதம் போல.......
அதுவும் மகிழ்ச்சிக்குரியதே.
எஜமானர்களற்ற இருப்பே இனிமையானது.
அடிமைச் சீவியமே எமக்கானதென்றால்.
ஜனனமும் ஒன்றே.
மரணமும் ஒன்றே.
இது தத்துவமல்ல... சத்தியம்.
அன்னை மடியேறி வந்துள்ளது அனற்காற்று.
பூமரங்கள் யாவும் பொசுங்க
வீசுகின்றது விஷக்காற்று.
துடைத்தழிப்பேனெனத் துள்ளி
நடக்கிறது கூத்து.
உண்மை முகங்களை உருமறைத்து விட்டு
கண்களில் கருணை வழிவதாகக் காட்டுகிறது.
உலகெங்கும் ஒய்யார உலா.
இங்கே மட்டும் இரணியத் தர்பார்.
பூதகி பால் கொடுக்க வருகின்றாள்
நப்பாசையில் நம்பி விடாதீர்.
முலை சுரப்பது பாலல்ல....... விஷம்.

குடியெரித்துக் கொளுத்த
இடிஅமீன் சேலைகட்டி வந்துள்ளான்.
மாமன் வேரோடு மரங்களை விழுத்த
மருமகள் உழுது விதைக்க உரம் கொடுக்கின்றாளாம்.
வேடிக்கையான சோடிப்பு.
இவர்களுக்குச் சாமரம் வீச இங்கேயும் ஓரிருவர்.
வெள்ளைவான் கொள்ளைக்காரர்கள்
கொழும்புவிட்டு குடாநாடு வந்துள்ளனர்.
ஈரத்துணியோடு இரவில் உலவுகின்றனர்
சோரம் போன சுந்தரிகள்.
ஓர விழிகாட்டி உள்ளே அழைப்பார்கள்.
யாரும் நம்பி விடாதீர்.
பத்தாயிரம் கல்லறைகளிலெழும் பாடல்களையே
தொடர்ந்து பாடுங்கள்.
மோகினி ஆட்டத்தில் மெய்மறந்துவிட்டால்
தூமணி மாடத்துச் சுடர்விளக்கு அணைந்துவிடும்.
விசர் பிடித்தலைகின்றன தெரு நாய்கள்
கடித்து விட்டு மருந்து கட்டும்.
கவனம்.
விடுதலையை ஏலம் போட்டு விற்பவர்கள்
மேடையேறியுள்ளனர்.
குறைந்த விலைக்கு இனிக் கூவி விற்பார்கள்.
உயிர்கொடுத்துப் பெற்ற திருவிளக்கை
இவரழித்துப் போகவோ?
அரையில் உடுப்பும்,
அதற்குள்ளே மறைவுடுப்பும்
வெறும் திரைபோட்டு மறைக்கும் விவகாரமல்ல.
இது மானஸ்த்தன் சூடுகின்ற மகுடம்.
எச்சிலிலைக் காகங்களுக்கு...... கச்சையெதற்கு?
வில்லேந்திய வீரக்குலத்தின் அடி மனதின்
உள்ளூறும் உணர்வின் ஊற்றடைத்துப் போமென்று
சொன்னது யார்?
சுரந்தூறும் எங்கள் மணற்கேணி.
விடுதலை,
இது எம் சுவாசக்குழலின் சுடுமூச்சு.
சுதந்திரம்,
இதயத் துடிப்பு ஒவ்வொன்றும் பாடும் எக்காளப்பாடல்.
எமக்கில்லை யாயினும்

தலைமுறை எனினும் தலை நிமிரட்டும்.
அதற்கானதே எம் அணிவகுப்பு.
நிலவுலவும் வானத்தின் மீதும்,
நிமிர்ந்த நெடிய பனைகளின் மீதும்,
தமிழனென்றெமை ஈன்ற தாயவள் மீதும்
சத்தியம் ஒன்றுரைத்தோம்.
சாலை ஓரத்துப் பாலை மரங்களே!
முற்றித் திரண்ட முதிரை மரங்களே!
உறுதியொன்றெடுத்தோம் உம்மீது.
தளராதெம் படையணி!
பகைவரும் வழியெங்கும் புதைகுழி வெட்டி
புல்லின் வடிவிலும் புலிவீரரிருப்பாரென்பதை
இனிவரும் நாட்களில் எதிரிக்குணர்த்துவோம்.
வதை சுமந்து சலிப்புற்றது எம்மண்.
காட்டுவாசிகளாயினர் எம் மக்கள்.
அழகொருகாலம் அடைக்கலமிருந்த முகங்களெல்லாம்
ஒட்டியுலர்ந்து உருமாறி விட்டன.
கற்கால மனிதர்களைப் போல காட்சிப்பொருளாய்,
வீதியோரங்களிலெல்லாம்
இன்றைய பொழுதுக்குத் தூங்கி,
நாளைய நாட்களுக்கு ஏங்கி,
தொல் குடியொன்றின் தொப்பிள் கொடி
துண்டாடப்பட்டு துடிக்கிறது.
இத்தோடாவது விட்டானா இடிவிழுவான்.
குடிமனைக்குள்ளே எறிகணை அதிரும் போது
கருவறைகளே கலங்கிப் போகின்றன.
நட்சத்திரங்கள் கூட நடுங்குகின்றன.
மேகங்களுக்கு மூச்சுத் திணறுகின்றது.
நிலவு நெருப்புக் குளிக்கிறது.
வழியெங்கும் அமிலதாரை வழிகிறது.
ஊரெல்லாம் சாக்குருவியின் ஒப்பாரி.
பிணச்சோறுண்ணும் பிசாசுக்கு
இதுவும் போதாதாம்.
சென்றுவரத் தெருவொன்று தேவையாம்.
கொன்று குவித்துக் கூழ் காய்ச்சும் ஆசையில்
கண்டி வீதியிலும் கால் பதித்துள்ளது.
காற்றற்றுப் போனாலும்
நாங்கள் மூச்சு விடும் சாதியென்பதை,

வரும் பகைக்குணர்த்தும் தருணமிது.
இளைய தலைமுறையே!
விழியில் நெருப்பேந்தி வீதியில் இறங்குக.
முரசு முழங்கட்டும்.
புனிதப் போருக்கு புது ரத்தம் பாய்ச்சுவோம்.
பலமிழந்துன் பாதம் பணிவோமெனும்
கனவுக்குள் கரையாதே பகையே.
நிமிருமெம் தேசம் நெருப்புக் குளிக்கும்.
ஆயிரமாயிரம் அக்கினிக் குஞ்சுகள் அவதரிக்கும்.
கொற்றவைத் தேவி! நின் கோயில் வந்தோம்.
அற்புதம் நிகழ்த்த ஆசி கொடு தாயே.
வீரத் தேவி!
நீயே தமிழரின் காவற்தேவி.
ஆயிரம் கைகள் வீசி வீதியிலிறங்கி
அம்மையே! எங்கள் வெம்மை தணிவிப்பாய்.
சங்கெங்கே
எடடா ஊது.
பகையெங்கே?
வாடா காட்டு.
'வெற்றி உறுதியா'?
யாருக்கு?

□□

வைகாசி ,ஆனி 1997.





# எம்மண் ஏறிவருவோனே!
# வருகுது மார்காலம்
# உனக்கினி ராகு காலம்.

ஆவணி மாதம் தாவணி போர்த்துளது.
இடிக்கும், மின்னலுக்கும்
இனிவரும் நாட்கள் கூத்தாடும்.
மேகம் எம் தலைக்கு மேலே மூட்டமிட்டு
உருகியுருகிச் சொரியும் பெருமழை.
வேர் காய்ந்து கிடந்தன யாவும் விழிதிறந்து
ஊரெல்லாம் பச்சை நிறப் பட்டு உடுக்கும்.
சிரித்துக் கொள்ளும் எம் திருவாசல்கள்.
மாறி மாறிக் கோடையும், மாரியும் கொலுவேற
கோடை வெயிலிற் கொதிப்பதும்,
மாரி மழையிற் குதிப்பதும்
வாழ்வின் இரண்டும் பக்கங்களான வழமை.
நேற்றோடு போயின அக்கினி நாட்கள்.
காற்றள்ளிக் கொட்டிய புழுதி கலைந்து போக
இனிச் சீதளக் காற்றின் இதமான வருடல்.
மேகமே! இறங்கு எம் தேசத்தின் தலையில்.
தாகமடங்கித் தவித்த வாய் குளிரட்டும்.
அகதிக் குடியிருப்புக்களும் ஆனந்தம் கொள்ள
நீரற்ற கிணறுகள் நிரம்பட்டும்.
இனியாவது குளித்திருக்கட்டும் குழந்தைகள்.
கூரையற்றிருக்கும் அகதி முகாம்களின் மேலே

நீரையள்ளிக் கொட்டாதே முகிலே.
பாவம் தமிழர்கள் பட்டதுயர் போதும்.
மேயாத கூரைவிட்டு முற்றத்திலிறங்கு மழையே.
காடேறி வீட்டிலிருந்து கலைத்தாள்.
பூர்வீகப் பூமி விட்டு எவர்தான் ஓடாதார்?
ஓடியோடி இடையிலொரு துண்டுமின்றி
ஆடிப்போனது தமிழரின் வேர்கள்.
வேர்த் தலையில் நீர்தெளிப்பாய் மாரியே!
புதிதாய் முளைக்கட்டும் எம் பொன்னாடு.
ஏறிவரும் தேரின் சக்கரங்கள் புதைய
இடையில் "ஜெயசிக்குறுய்" நீரில் அமிழ்ந்து போகும்.
சபித்த வாய்ச்சாபங்கள் பலிக்காமற் போகாது.
நேற்று, மகிழ்ச்சி மத்தாப்பு விரிந்திருக்க
ஏணையாடும் குழந்தையென இருந்தோம் நாம்.
கோபுரக் கலசமென உச்சத்திலிருந்தது எம்வாழ்வு.
ஆனந்தம் கையளைந்து கொள்ள நிமிர்ந்திருந்தோம்.
எல்லாம் இல்லாமற் போக
இடியிறங்கியது எம் தலையில்.
காட்டெருமையென எம் வயல் புகுந்து
காலால் மிதித்தனர்.
ஏனென்று கேட்டபோது இடித்தனர்.
வெடிகொழுத்திப் போட்டோம்.
வெகுண்டு விண்ணுக்கும் மண்ணுக்கும் குதித்தனர்.
அன்று தான் தொட்டது அழிவு.
சுமக்க முடியாத பாரம் தோள்களில்
எனினும் களைக்கவில்லை நாம்.
குருத்தோலையும் காவோலையும் ஒன்றாகக் கருகுகின்றன.
எந்நாளும் வந்துபோக முடியாதென்று
இப்போது எம்மூரிலேயே குடியிருக்கின்றான் இயமன்.
எருமை மாடு இளைத்து விட்டதாம் நடந்து.
எத்தனையென்று தான் சுடலைக்குக் காவுகின்றது.
அலுத்து விட்டது. அடிவளவுக்குள்ளேயே கொழுத்துகின்றோம்.
ஆயினும்,
காற்றிலணையும் தீபமல்ல எம் கையிலிருப்பது.
இது சோதிப் பிழம்பு.
புயலுக்கும் அணையாத புதுவிளக்கு.
உயிர்விட்டு ஏற்றிய உரிமை விளக்கு.
எண்ணையற்றுப் போனாலும் இந்த விளக்கு எரியும்.
பகையே! வழி திறக்க வரவில்லை நீங்கள்.

ஐயோ பாவம்.
உங்கள் குழி திறக்க வருகின்றீர். வருக.
இந்த மழைகாலம் உங்களுக்குப் படுமோசம்.
மந்திரித்து நூல்கட்டி
வெள்ளரசில் நேர்த்தி கட்டி
வீட்டில் விடைபெற்று வருக.
தாண்டிக்குளம்,
புளியங்குளம்,
கனகராயன்குளமென்று
எல்லாக் குளத்துள்ளும் இறங்கத் துடிக்கின்றீர்.
ஏதோவொரு குளத்தோடு இல்லாமற் போவீர்.
இந்த மழைகாலம் முடியமுன்னர் இது நடக்கும்.
தர்மம் எத்தனை காலத்துக்குத்தான் தலை குனியும்?
ஆணவம் தலைக்கேறிய அனைத்தும் அழியும்.
கோவணமுமின்றித் தவிக்கும்.
இது வரலாறெழுதிய தீர்ப்பு.
கடைசித் தமிழனும் அழியும் நாளுக்காகக் காத்திருப்பவர்களே!
எழுந்து நடவுங்கள் இது நடக்காது.
எத்தனை பேரின் கால்களின் கீழே
இத்தனை வருடங்களாகக் கிடந்தது எம்மண்.
செத்தா போனது எம் திருநாடு?
பிரபாகரனையல்லவா பிரசவித்துக் கொண்டது.
எல்லாளனை வேலால் எறிந்து வீழ்த்தி விட்டு
அப்பாடா என்று நீங்கள் ஆசுவாசப்பட்டபோது
காலமொன்றுக்காகக் காத்திருந்தது எம் தாயகம்.
இன்று நீண்ட காலத்தின் பின் நிமிர்ந்துளது.
கைகட்டிச் சேவகம் செய்து,
கொடுத்ததை உண்டு கிடக்கும் சதுப்பு நிலமல்ல,
எம் அன்னை மடி.
இது கருங்கல்லுப்பூமி.
உடைந்து சிதறுமேயன்றி.... உடல் வளைத்துக் கொள்ளாது.
சுற்றி வளைத்தாயானால் சூடேறும்.
கற்பனைக்குமெட்டாத விலை கொடுத்து
அற்புதம் விளைக்கும்.
எல்லாம் முடிந்ததென இருக்க இடிமுழங்கும்.
மாங்குளத்தைப் பிடிக்கவா வருகின்றாய்?
குறித்துக்கொள்.
மதவாச்சியையும் தந்து போவாய்.

புலிகளுக்குப் புண்ணாக்குத் தீத்துவேனெனப் புறப்பட்டவனே!
இயமனுக்கே இடியப்பம் தீத்தியவனடா தமிழன்.
வன்னி மண்ணிலிருந்து ஒரு வரலாறு ஆரம்பம்.
"கண்டிவீதி தான்" அதற்கான முன்னுரை.
சும்மா உறங்கிக் கிடந்த எம் காடுகளை
குண்டடித்து விழித்தெழச் செய்தாய்.
நன்றியுனக்கு.
இனிக் காடுகள் போரிடும்.
இந்தியச் சிப்பாய்களும் இங்கே தான் 'ஞானம்' பெற்றார்கள்.
நீயும் வருகின்றாய் உனக்குமது கிட்டும்.
அடிமுடியறியாதது தொடுவானம்.
அளந்து கணக்கெடுக்க முடியாததை
எப்படி அழிக்க முடியும்?
விடுதலை.
புலிகளுக்கு இது தான் பெரிய பிடிமானம்.

எமக்கு வேண்டும் விடுதலை என்றதும்
என்னது? அதன் உட்பொருள் யாதெனச்
சுமக்க வேண்டிய சுந்தரம் அறிகிலார்
சுதந்திரத்தை எங்கெலாம் தேடுகிறார்.
சிவக்கும் வைகறை வானத்து ஒளியெனச்
சிரிப்பதான நிலையது விடுதலை.
தமக்கு வேண்டிய தனைத்தும் தான் பெறும்
சக்தி கைவரல் விடுதலை என்பதாம்.

□□

ஆடி ,ஆவணி 1997.



புதுவை இரத்தினதுரை



# உலகத் தமிழினமே!
# முழக்கம் இங்காகட்டும்.
# முரசு உனதாகட்டும்.

வெளியில் வராத குரல்களாக
விழுங்கப்படுகிறது எம் வாழ்வு.
மருத்துவர்களால் கைவிடப்பட்ட தீராப்பிணியனின்
சிரிப்புப் போலாச்சு எம் இருப்பு.
யாரோடு நோகலாம்?
யார்க்கெடுத்துரைக்கலாம்?
எத் தெய்வம் சபித்தது எம் தலையில்?
தீவொன்றில் தனித்து விடப்பட்டவர்களாக நாங்கள்.
எவரெம் குரல்களை உலகுக்குச் சொல்வரோ?
எம்மை நோக்கி வையகவிழிகள் எப்போ திறக்கும்?
இருபத்தோராம் நூற்றாண்டுக்கு
தாலி கட்டத் தயாராகிறது உலகம்.
பதினாறாம் நூற்றாண்டிற் படுத்துக் கிடக்கின்றோம் நாம்.
நிரவ முடியாத அகழி.
நினைக்க முடியாத தொலைவு.
குறுக்கு வெட்டாக துண்டிக்கப்பட்டவனே உயிர்க்கும் போது
நெருப்புச் சுட்ட புண்ணுக்கே எங்களுக்கு மருந்து கிடையாது.
உலகெங்கும் அடித்து விரட்டப்பட்ட மலேரியா கூட
ஓடிவந்து இங்கே தான் ஒதுங்கிக்கொண்டது.
தடிமல் மருந்துக்கே தட்டுப்பாடு.
இங்கு மருத்துவர்கள் கைபிடிப்பது

வைத்தியம் செய்யவல்ல.
வெறும் மனநிறைவுக்கே.
சுக்கும்,மிளகும், சுடுநீருமே உயிரைத் தாங்கிக்கொள்கிறது.
எத்தனைக்கென்று தான் அழுவது?
ஊற்றடைத்துக் கொண்டது விழிக்கிணறு.
உலகமேன் ஊமையானது?
பூமிப்பந்தின் பரப்பெங்கும் தமிழன் இருக்கின்றான்.
எம் குரல்கள் மட்டும் ஏன் கேட்கவில்லை?
உறக்கம் கலைக உலகமே.
இங்கே சேடமிழுத்துக் கிடக்கிறது மனிதப் பிண்டம்.
எமக்காகவும் எவரெனினும் பேசுங்களேன்.
உரிமைக் குரல் கொடுக்கும் ஒரு இனத்துக்கு
இதுதானா கதி?
ஆ ரோகணித்திருக்கச் சிம்மாசனமா கேட்டோம்?
கால் மடித்திருக்கக் கதிரைதானே கேட்கின்றோம்.
இதற்காகவா இந்தப் பாரச்சிலுவை?
இயக்கர்களாக அவர்களும்.....
நாகர்களாக நாங்களும்......
இல்லையெனில்.....
அவர்களாக அவர்களும்....
நாங்களாக நாங்களும்.....
இதுவும் இல்லையெனில்
ஏதோ ஒரு வழியில்
ஒன்றாய் இருந்த வீட்டிற்தானே உரிமை கேட்கின்றோம்.
பாதிவீட்டைத் தந்தாற் போதும்.
மீதிவீடு அவர்களுக்குத்தான்.
இந்தப் பிரிவிடுதலுக்கேன் இத்தனை கொதிப்பு?
மிஞ்சிய சோறு வாங்கிக் கும்பிடு போடுவதற்கு
நாங்கள் இராப்பிச்சைக்காரர்கள் அல்ல.
தாம்பத்தியம் தள்ளாடும் போது
விவாகரத்துத்தான் விமோசனம் அளிக்கும்.
சமாதானத் தூதர்கள் தோற்றுப்போனபோதும்,
பேச்சுவார்த்தை மேசையின் பூச்சழிந்த பின்னருமே
நாங்கள் போருக்கெழுந்தோம்.
இடிக்க வந்தது மாடு.
அடித்தோம்.
மாட்டுக்கு அடித்தல் பாவமென மனுப்போடுபவர்களே!
எங்கள் கூட்டையே குலைத்தது குரங்கு.

குரங்கையேன் நீங்கள் குற்றங் காணவில்லை?
யானை வந்தழிக்கிறது எங்கள் புலவை.
வெடிகொழுத்திப் போடுகின்றோம்.
மிதிக்கும் போது ஊமையான வாய்கள்.
கலைக்கும் போது மட்டும் கண்டிக்கின்றன.
எருமைத்தோல் உடுத்தவனா தமிழன்?
சுரணையற்றுக் கிடப்பதற்கு
உதைத்த காலுக்கு முத்தமிட்டுக் கிடந்த
ஒரு இனத்தின் ஓரத்தில்
நெருப்புப் பொறியொன்று நீறுபூத்துக் கிடந்தது
அது....... பிரபாகரன்.
கோபம் உரசிய போது தீக்குச்சி பற்றிக்கொண்டது.
இன்று தீச்சுவாலை முளாசி எரிகிறது.
தர்மயுத்தமென்பதே தமிழீழப்போரானது.
பாய்ச்சல் நடக்கும் போது
பாவ புண்ணியக் கணக்கு கொஞ்சம் கூடும், குறையும்.
அதற்கேன் இத்தனை ஒப்பாரி?
மரங்களைத் தறிக்காதே,
சூழலை மாசு செய்யாதே,
மிருகங்களை வதையாதே,
பூக்களைக் கிள்ளாதே என்று
குரல்கள் கேட்கின்றனவே.
ஈழத்தமிழனை எரித்து முடிக்காதேயென்று
உலக முகடையிடிக்கும் குரல்கள் எப்போது எழும்?
அவலக்குரலை எப்போது உலகமறியும்?
எல்லைகளை,
வேலிகளை,
வரம்புகளைக் கடந்து
ஈழத்தமிழரைத்தாங்க நீளும் கரங்கள்
எப்போது கிட்டும்?
அழியும்வரை போராடுவோம் என்பதில் அர்த்தம் கிடையாது.
கிட்டும்வரை எட்டுவோம்.
உயிரெனப்படுவது மானம்.
அதையிழந்து வாழ்வதென்பது சாவுக்குச் சமம்.
பெரும்புயலில் அல்லாடுகிறது எம் போர்ப்படகு
கரையேறக் கயிறெறியுங்கள்.
உலகத் தமிழனமே!

உன்போர் இது.....உனக்கான போரிது.
முழக்கம் இங்காகட்டும்.
முரசு உனதாகட்டும்.
எம்மைக் காசுக்கு யாசிக்கவிடாதே.
வாரிவழங்கு.
தாங்கும் தோள்களிலொன்று உன்தோளுமாகட்டும்.
மூட்டம் போட்ட மேகத்தைக் கலைத்து
உரிமைப் போருக்கு ஊட்டம் கொடு.
வாழ்ந்தான் தமிழனென வரலாறு எழுதப்படும் போது
முன்னுரையிலே உன் பெயர் இருக்கட்டும்.
பரணிக்கு நாயகர்களைப் பாட
உலகெங்குமிருக்கும் புலவர்களே எழுக.
பொய்மைத்திரி அணைந்து போக
உண்மையை வாயால் ஊதுங்கள்.
சத்தியமே ஜெயம்.

சூரியன் யாருக்கும் சேவகம் செய்தவர்
கால்களிற் பூசைகள் செய்யாது.
போரினிலே பிரபாகரன் சேனைகள்
சாவினுக்கஞ்சியே ஓடாது.

□□

புரட்டாதி, ஐப்பசி 1997.





# கட்டபொம்மன் காலத்தில் மட்டுமல்ல எட்டப்பர்கள் இன்னும் இருக்கின்றனர்.

தமிழனே!
இன்னும் எத்தனை காலத்துக்கென்றுதான்
கண்ணீர் வடிப்பாயோ?
விழிநீர் உப்புடன் விருந்துண்பவனே
நரகிற் கிடந்துழலும் விதியை
எவனடா எழுதினான் உன் தலையில்?
விடுதலைக்காக நீ விழி திறக்கும் போதெல்லாம்
கூடப்பிறப்பொன்றே உனக்குக் குழி பறிக்கும்.
நீ படை வைத்து அரசாண்ட காலத்தில்
இன்று சந்திரனுக்குச் சென்று
சாதனை படைத்தானே,
அவன் ஆடுகள் மேய்த்துக் கொண்டிருந்தான்.
செவ்விந்தியனைக் கொன்று சிம்மாசனம் பிடித்தவன்
இன்று "சர்வதேசப் பொலிஸ்காரன்" ஆகிவிட்டான்.
கோட்டைகட்டியாண்ட குலத்துக்குரிய நீ மட்டும்
மாட்டைப் பூட்டியே இன்றும் மண்ணைக் கிளறுகின்றாய்.
நீ கப்பலிலேறிக் 'கடாரம்' வென்றபோது
ஜப்பான்காரன் "எக்ஸ்போ" நடத்தவில்லை.
தடிக்குச்சிகளால் தட்டிகட்டித்தான் வாழ்ந்தான்.
என்ன செய்வது?
எல்லோர் தலையிலும் பிரம்மன் கையால் எழுதினான்.

உன் தலையில் மட்டும்
அழிக்க முடியாதபடி ஆணியால் எழுதிவிட்டான்.
இடைக்கிடைதான் நீ எழுவது வழக்கம்
அப்போது கூட அடித்து விழுத்தப்படுவாய்.
அதுவும் அன்னியராலல்ல.....
உன்னவரால்.
நீ நிமிர்ந்து கொள்ளும் ஒவ்வொரு நேரத்திலும்
நெஞ்சுக்குப் பாய்கிறதே நெருப்புக்குண்டு.
குண்டெறிபவன் வேறு யாருமில்லை.
கூடப்பிறந்தவனென்பதைக் குறித்துக்கொள்.
கராம்பும், கறுவாவும் வாங்கத்தான்
பீரங்கியோடு புறப்பட்டு வந்தான் வெள்ளைக்காரன்.
வந்தவனுக்கு உந்தன் வரலாறு தெரிந்ததும்
வல்லமையைக் காட்டி வரி கேட்டான்.
பாஞ்சாலங் குறிஞ்சியில் மட்டும்
ஒருவன் பணிய மறுத்தான்.
வெள்ளைக்காரனால் அவனை விழுத்த முடியவில்லை.
பக்கத்திருந்த பாளையக்காரன்
அவனும் தமிழன்,
அதுவும் உருத்துடைய உறவுக்காரன்
காட்டிக்கொடுத்துக் கழுத்தை முறித்தான்.
வன்னியிலும் இதே வரலாறுதான்.
வெள்ளைக் கொக்குகளுக்கு எதிராக
கறுப்புக் காகமொன்று கச்சை கட்டியது.
துரத்தித் துரத்தி கொக்குகளைக் கொத்தியது காகம்.
வன்னியனை வளைத்துப் பிடிக்க முடியவில்லை.
காட்டிக்கொடுத்தது இன்னொரு காக்கை
அவனும் தமிழன்.
அதுவும் உருத்துடைய உறவுக்காரன்.
அத்துடன் முடிந்ததா அந்த வரலாறு?
இல்லையே..... இன்றும் தொடர்கிறது.
எல்லோரின் தோள்களிலும்
இன்று சூரியன் சுடர்கிறது.
உன் தலையில் மட்டும் இன்னும் இருட்டுத்தான்.
என்ன விதியடா உனக்கு?
நீண்டகாலமாக நெடுமூச்செறிந்தபடி
தட்டியெழுப்ப யாருமின்றிக் கட்டிலிற் கிடந்தாய்.

விடுதலைச் சிறகுதந்து உன்னைப் பறக்கவைக்கும்
தேவகுமாரனொருவனைத் தேடிச் சலித்தாய்.
காலம் உன்னை காத்திருக்க விடவில்லை.
கையிற் தந்தது ஒரு கைவிளக்கு.
பிரபாகரன் என்ற பெயரைச் சுமந்து.
வந்தது அந்த வல்லமை.
தூசிகளை எரித்த படி தோன்றியது
அந்தச் சுதந்திர நெருப்பு.
அப்போதும் உன் தலையெழுத்து மாறவேயில்லை.
அப்படியேதான் கிடந்தது அது.
காலம் மாறியது.
களங்கள் மாறியது.
பெயர்கள் மாறியது.
வரலாறு மட்டும் மாறவேயில்லை.
எட்டப்பன், துரையப்பா என்றானான்,
காக்கை வன்னியன் கதிர்காமர் என்றானான்.
கூடப்பிறந்ததுகளே குழிபறிக்கும் தலையெழுத்தை
எவர்தான் உனக்கு இல்லாமற் செய்வரோ?
பக்கத்து வீட்டுக்காரன் படலை திறந்து வந்து
"பூமாலை" யென்று பொரியரிசி போட்டபோதும்
பிரபாகரன் தன்னந்தனியாய் போராடினான்.
இரவற் தாய்நாட்டின் இராப்பிச்சைக்காக.
'வரதராசபெருமாள்' வாலை ஆட்டியது.
தின்று முடித்ததும்
சொந்தவீட்டிலேயே ஒண்டுக்கிருந்துவிட்டு
அது ஒரிஸாவுக்கு ஓடியது.
இன்று நடிகன் மனைவியின் நாடகம் நடக்கிறது.
ஒப்பனையில் மயங்கி எத்தனை பேர் கிடக்கின்றனர்.
பிரபாகரன் ஒருவன் தான்
அரிதார முகத்தை அறிந்துகொண்டு
காட்டு மரங்களிடையே களங்களை விரித்து
பூட்டுடைக்கப் போராடுகின்றான்.
உயிர் விலை கொடுத்தபடி உண்மையும்,
சத்தியத்தை சலுகை விலையில் விற்றபடி பொய்மையும்
சந்தித்துக்கொள்கின்றன.
வீரசிங்கத்துக்கு வெண் சாமரம் வீசும்
ஆனந்தத்தையே சங்கரிப்பவர்களும்,
தேவ ஆனந்தத்துக்குத் தேதி குறிப்பவர்களும்

கொள்ளைக்காரிக்கு குடைபிடித்தபடி
கள்ளத்தனம் செய்யும் கதிர்காம முருகர்களும்
எல்லோரும் அம்மணமாக ஆடுகின்றனர்.
ஆடிவிட்டு போகட்டும்.
இது தலையெழுத்தென்று இருந்து விடலாம்.
அறிக்கைகளுமல்லவா அச்சிடுகின்றனர்.
ஈழத்தமிழர்களை ஈடேற்ற வந்தவர் போல.....
இடைக்கிடை உற்சவமூர்த்திகளைப் போல...
ஊர்கோலம் வேறு.
இன்னொருவன் இருக்கின்றான்.
இவனே பெரிய எட்டப்பன்.
நஞ்சு நிறம் இவனின் நாமம்.
பிடாரிக்குத் தலைவாரி விடுபவன்.
தமிழனே!
இன்னும் எத்தனை காலத்துக்கென்றுதான்
கண்ணீர் வடிப்பாயோ?
விழிநீர் உப்புடன் விருந்துண்பவனே!
நரகிற் கிடந்துழலும் விதியை
எவனடா எழுதினான் உன் தலையில்?

□□

கார்த்திகை, 1997.





# துளியும் வெட்கமில்லை என்றானால்..... துண்டெதற்கு? துணியெதற்கு?

நல்ல காலம் பிறந்தாச்சாம்.
குடுகுடுப்பைக்காரர்கள் குறிசொல்லத் தொடங்கி விட்டனர்.
இனியென்னவேண்டும் உனக்கு?
புகுந்து விளையாடு.
தமிழனே!
நீ தேடிய ஒளிவட்டமும்,
அவாவிய நிமிர்ந்த வாழ்வும்
உனக்கினிக் கிட்டும்?
வாய்க்கால் வெட்டும் மாநகர ஆட்சிக்கும்,
நாய்பிடிக்கும் நகரசபைக்கும்,
சின்ன மதகு திருத்தும் பிரதேச சபைக்கும் தானே
இத்தனை விலைகொடுத்துப் போராடினாய்?
நேற்றுவரை நெஞ்சு நிமிர்த்தியிருந்த
ஆற்றலின் வடிவே!
யாழ்ப்பாணக் குடாநாடே!
கண்ணாடிக் குடுவையில் கருத்தரித்த "தலைவர்கள்"
உன்னைக் கைபிடித்துப் பார்க்க வருகின்றனர்.
என் தாய்மடியே!
உன் அடிமன ஆழத்தை யார்தான் அளவெடுக்க முடியும்?
நெஞ்சுக்குள்ளெரியும் நெருப்பைக் கணக்கெடாது.

மௌனத்தைச் சம்மதமென்று எண்ணியபடி,
பேர் தெரியாத புதுமுகங்களெல்லாம்
ஊர் வருகின்றனர்.
கேட்டுப்பார்.
உன் தலைவர்களென்று சத்தியப்பிரமாணம் செய்வர்.
உலகுக்கே தலைமை தாங்கும் தகுதியுள்ள உனக்கு
இவர்களெல்லாம் தலைவர்களென்றால்....
அழுவதா? சிரிப்பதா?
நேற்றுவரை கொழும்பிலிருந்து
கப்பலில் உனக்குப் பெற்றோல் வந்தது.
சக்குப்பிடித்த குத்தரிசியும்,
சாராயமும் வந்தது.
இன்று விமானத்தில் "தலைவர்கள்" இறக்குமதியாகின்றனர்.
உள்ளே புகைந்தபடி கிடக்கும் எரிமலையை
எவர்தான் கணக்கிலெடுத்தார்?
வந்திறங்கும் இவர்களின் வரலாறு தெரியுமா?
சந்தர்ப்பவாதச் சகதியில் புரண்டெழும்
எந்தச் சுரணையுமற்ற எருமைகள்.
கண்ணீரே வாழ்வென உனக்கெழுதிய கைகளுக்கு
வளையல் பூட்டி வடிவு பார்த்தவர்கள்.
வற்றாவுன் கிணற்றின் அடிநீருறிஞ்சிய
தீயின் நாவுகளுக்குத் தீனி போட்டவர்கள்.
அவலமுற்று நீ ஊரெங்கும் ஓடியபோது
கவலையற்றிருந்த "கொழும்பு உல்லாசிகள்".
வேதமோதும் சாத்தான் மரத்தின் வேர்கள்.
விலைபோன பழைய சேனாதிபதிகளின்
புதிய வாரிசுகள்.
நவாலியிலும்,
நாகர்கோவிலும்,
யாகப்பர் கோவில் நடுக்கூரை மீதும்
குண்டெறிந்தவனுடன் கூடிக்களித்திருந்தோர்.
இன்று
காணாமற் போனவர்களுக்காகக் கண்ணீர் வடிக்கின்றனர்.
உழுது விதைத்தவன் ஊரிலில்லாத போது
கதிரறுக்க வந்துள்ளனர் முகமூடித் திருடர்கள்.
ரோசநரம்பை ஏலத்தில் விற்றுவிட்டு
வேசங்கள் வீதியுலா வருகின்றன.

எட்டு வருடங்கள் எங்கெங்கோ தீனிபொறுக்கிவிட்டு
முற்றத்தில் இறங்குகின்றன கண்கொத்திப்பறவைகள்.
விண்தொட நிமிர்ந்த உன்வாழ்வு கருக்கிய,
பேய்களின் கண்களுக்கு மையெழுதிய பிடாரிகள்
வாசல் வருகின்றனர்.
கையில் விளக்குமாறுடன் காத்திரு.
விளாசு.
செம்மணியிலுந்தன் சிறு பூ சிதைந்த போது
அந்தக் கண்மணி கதறிய காலக்குரலுக்கு,
மௌனத் திரையிட்டு மறைத்தவர்கள்
எந்த முகத்தோடு வந்துள்ளனர்.
மானத்துக்கணியும் வேட்டியை மடித்து வைத்துவிட்டு
ஆடென்றாள் அவள்.
இவர்கள் அம்மணமாக ஆடுகின்றனர்.
கூரையேறிக் கோழி பிடிக்கத் தெரியாதவன்
வானமேறி வைகுந்தம் போவானாம்.
துளியும் வெட்கமில்லையென்றானால்
துண்டெதற்கு? துணியெதற்கு?
கண்ணீரில் உன் கன்னங்கள் கரைந்து
உயிர் கருக நீ ஓலமிட்டபோது .....
"வெற்றிவேலரின் மருமகளுக்கு" விழிதிறக்கவில்லை.
வெள்ளவத்தையில் வீதியுலாவும்,
கொள்ளுப்பிட்டியில் கோலாகலமாகவுமிருந்த
சீமாட்டிக்கு இன்று சிம்மாசனம் தேவையாம்.
பழைய உறவுகளுக்கு பாலம் அமைக்க வந்துள்ளார்.
விடுதலைக்கு உயிர் விலை கொடுத்து
நீ அவலத்தின் மடியில் அந்தரித்துக் கிடந்த போது,
சுதந்திரத்துக்கான
காணிக்கையென நீ கண்ணீர் பூக்களைச் சொரிந்த போது,
மாணிக்கதாசனென்ற "மக்கள் திலகத்திற்கு"
உனக்காகப் பேச ஒரு வார்த்தையும் கிட்டவில்லை.
தாண்டிக்குளத்தில் தலையாட்டிக்கொண்டும்.
வவுனியாவில் வரி வாங்கிக் கொண்டும்,
பிள்ளை கடத்திப் பேரம்பேசிக் கொண்டிருந்தவர்களுக்கு
நகரபிதாவாகும் நப்பாசை வந்துள்ளது.
இன்னும் எவரெவரோ
பேர், ஊர் தெரியாத "பிரபலங்களெல்லோரும் "

பாருந்தன் வீதியிலே...... பறக்கின்றார்.
ஊரையடித்து உலை மூட்டி வாழ்ந்தவர்கள்,
சங்கக் கடையுடைத்துச் சாப்பிட்ட சாதுரியர்,
தர்மகர்த்தா சபையின் தலைவர்,
செயலாளர்,
சைக்கிள் களவெடுத்த சமாதான நீதவான்கள்,
எல்லோரும் உனக்கு இனித்தலைவரென்றானால்
உள்ளே உனக்கெரியும் உரிமைத் தீ என்னவாகும்?
ஆவி கலங்கி அந்தரிப்புக்குள்ளான
தாயே! கலங்காதே.
சூரியனைச் சுற்றிய தூசிப்படலம்
விரைவில் எரிந்து பொசுங்கும்.
கொடியேறியுள்ளது.
ஊர் முழுதும் வீதியிற் திரண்டுள்ளது.
திருவிழா முடிந்ததும் வீதி வெளிக்கும்.
பிறகும் நாங்களும், நீயும் தான்.
எம்மைப் பிரிக்க எவரால் முடியும்?
உன் உயிர் மூச்சையே சுவாசித்தபடியுள்ளோம்.
வருவோமெனச் சொல்லுக.
வருவோம்.

□□

மார்கழி, 1997.



புதுவை இரத்தினதுரை



# காற்றுக்குப் பொன்னாடை முகில்களுக்கு மூக்குத்தி ஒப்பனையின் ஒய்யாரம் வெகுநேர்த்தி

வேணிச்சங்கரர் தொண்டர்களென்று
வீடுதோறும் இரப்பவர்க்கெல்லாம்
மாணிக்கமள்ளிப் பிச்சை கொடுத்திடும்
மாவலிகங்கை நாடெங்கள் நாடே.

துஞ்சுமேதி சுறாக்களைச் சீற
சுறாக்களோடிப் பலாக்கனி கீறியே
இஞ்சிவேலியில் மஞ்சளிற் போய்விழும்
ஈழமண்டல நாடெங்கள் நாடே.

இப்படித்தான் எத்தனை வடிவாய்
ஈழத்தமிழ்ப் புலவோர்கள் இலங்கையைப் பாடினர்.
சிங்களக் கவிகளே சொல்லாத அழகாய்
செந்தமிழ்ப் புலவர்கள் செப்பினர்.
எல்லாம் கனவாய்,
எல்லாம் கற்பனையாய்,
மெல்ல, மெல்லக்கரைந்து முழுவதும் தொலைந்தது காண்.
சிங்கமணித் தீவுக்கு
4-2-1998 அன்று
தங்கமணித் திருவிழா.
வெள்ளைக்காரனிடமிருந்து விடுதலை பெற்று
இன்று ஐம்பது வருடங்கள் ஆகிறதாம்.

பொன்விழாப் பூரிப்பில் "லங்கா" பூத்துக்கிடக்கிறதாம்.
காலில் மாட்டிய விலங்குகள் கழன்று
சிங்கபுரி பாலிற்குளித்த நாள்.
தோளிற்பூட்டிய நுகத்தடி முறிந்து
"நாயக்க வம்சம்" நிமிர்ந்து நடந்த நாள்.
தொண்டு செய்திருந்த தொலை தூரத்தை விட்டு விட்டு
கண்டி உயர்மலைகளின் கால்களில்
சிங்களதேசம் சேவித்துக் கொண்டநாள்.
வெள்ளைக்காரன் காலத்துப் பல்லக்கு
விடுதலைக்குப் பின்னர் ஆடம்பரக் காரென்றாச்சு.
அவ்வளவுதான்.
வெள்ளைக் கொக்குகளிடமிருந்த
ஆட்சியதிகாரம்
கறுப்புக் காகங்களிடம் கைமாறியது.
அவர்களிடமிருந்த எல்லாமே
இவர்களுக்கென்றாச்சு.
அவ்வளவுதான்.
தந்தைக்குப் பின் மைந்தன்,
புருசனுக்குப் பின் மனைவி,
தாய்க்குப் பின் மகளென்றும்,
இடைக்கிடை சண்டியர்களுக்கெனவும்
மாங்கனித்தீவு ஏலம் போனது.
போராடாமற் கிடைத்த சுதந்திரமென்பதால்
சிங்களதேசமும் பேசாமற் கிடக்கிறது.
வேருக்கு நீரில்லையென்றாலும்
பேருக்காவது சுதந்திரம் கிடைத்ததேயென்று
சிங்கபுரி தோள்களைச் சிலிர்த்துக் கொண்டது.
தமிழர் தேசத்துக்குத்தான் "சாக்குரல்" பரிசாச்சு.
இறைமைகள் வெவ்வேறான இரண்டு தேசங்களின்
எல்லைகளை வெட்டி
வெள்ளையன் ஒன்றாக்கினான்.
போகும் போதாகிலும் பிரித்துத் தந்திருக்கலாம்.
பூனைக்கண்ணன் பேசாமற் போய்விட்டான்.
நாயக்கா வம்சத்துக்கு நாடாகிவிட்டது.
இன்றதற்குப் பொன்விழாவாம்.
கண்டிமலைகளின் கழுத்தில் மாலைகட்டப்படுகிறது.
கங்கைகளின் கால்களில் சதங்கை பூட்டப்படுகிறது.
காற்றுக்குப் பொன்னாடையும்,
முகில்களுக்கு மூக்குத்தியும் வழங்கப்படுகிறதாம்.

ஒப்பனைகளின் ஒய்யாரம் வெகுநேர்த்தி.
விடுதலைபெற்ற இரண்டு விழிகளில்..
ஒன்றுக்கு மைதீட்டப்படுகிறது.
மற்றக் கண்ணுக்கு மண்ணெண்ணை ஊற்றப்படுகிறது.
இலங்கையின் பொன்விழாவே இதுதான்.
பன்றிகளைக் கூட்டிலடைப்பது போல
தமிழர்களை "கோழிக்கூட்டில்" அடைத்துவிட்டு,
உரத்துப்பேசும் உரிமையையும்
நிமிர்ந்து நடக்கும் இறைமையையும்
தமிழருக்கு இல்லாதழித்துவிட்டு,
தன் சொந்த ஊரிலேயே நடந்து செல்லும்
சுதந்திரத்தையும் பறித்து விட்டு
கண்டியில் பொன்விழாவாம்.
வன்னியில் காட்டுவாசிகளாகிவிட்ட தமிழருக்கு
உண்ணும் அரிசியைத்தானும் ஒழுங்காய் அனுப்பாது.
பட்டினிச் சாவுடன் பரிதவிக்க விட்டு விட்டு
சுதந்திரப் பொன்விழாவாம்.
விடுதலை என்ன என்றறியாது வாழும் தமிழனுக்கு
பொன்விழா என்ன? புது விழா என்ன?
தமிழனை அடக்கியாளும் சிம்மாசனத்துக்கு
சிங்கள இனம் மாறி, மாறி மன்னரை அனுப்பும்.
இப்போது சந்திரிகாவின் முறை.
பொன்விழாவுக்குப் பொருத்தமானவரின் கையில்
கண்டி நகரம் களைகட்டுகிறது.
சந்திரிகா தலதாமாளிகைக்கு....
தங்கமுலாம் பூசுகின்றார்.
மாமன் கண்டி வீதி போடுவதற்கு
மண்ணும் கல்லும் பறிக்கின்றார்.
வேடிக்கையான கூட்டமடா.
"ஹெரகொல்லை" வேர்களுக்கு....
திமிரடங்காச் செருக்கு இன்றும்தான்.
குடா நாட்டில் தேர்தலை நடத்திவிட்டு,
"கும்பிடுபூச்சிகளைக்" கண்டிக்கழைத்துச் சென்று ,
"இலங்கைத் தேசியம்" மீண்டுமெழுந்ததென்று
முழங்கப் போகின்றனர்.
வடக்கும், கிழக்கும் தெற்குடன் இணைந்ததென்று
கண்டியின் எண்கோண மண்டபத்தில்,
'ஓர்ட்கிட்' மலர்களிடையேயிருந்து

சந்திரிகா "சபதம் நிறைவேற்றுவார்."
அத்துடன் அடுத்த தேர்தலுக்கு ஆயத்தமாகும் நாடு.
இதுதான் பொன்விழா.
இதற்குத்தான் இந்த விழா.
குடா நாட்டுத் திருவிழாவில் சதிராடிவிட்டு
விமானமேறி விருந்துக்கப் போகப்போறவர்களே!
வன்னியில் குண்டெறிபவனை மன்னித்து
கொழும்பில் குற்றுவிளக்கேற்ற அழைப்பவர்களே!
முற்றாகத் தமிழரை அழிக்கும் வரை
சிங்களத்துக்கு முண்டுகொடுக்கப் போகும் சீமான்களே!
வெட்கம்,ரோக்ஷம் பார்த்தால்
உங்கள் இலக்கை அடையமுடியாது.
விட்டுத்தள்ளுங்கள்.
பொன்விழா நேரத்தில் புகுந்துவிளையாடுங்கள்.
தமிழனே!
உன்னைப் போல் பாவம் செய்த ஜென்மம்
உலகத்திற் கிடையாது.
கண்களைத் திறக்காதிருக்கக் கடவது.
இந்தக் காட்சிகளை எப்படி காண்பது?
கலங்காதிரு தமிழா!
வன்னிமண் வரலாறுணர்த்தும்.
வீரம் நிமிர்ந்து விளையாடும்.
இது: பெறாத விடுதலையின் பொன்விழா.
நாங்கள் பெற்ற விடுதலையின் வெற்றி விழா நடத்துவோம்.
நாளை.

□□

மார்கழி ,1997 - தை 1998 .





# இதுதான் ; இப்படித்தான் எங்களுக்குள்ளேயும் கோபம் எரிகிறது.

தலதா மாளிகை.
வெறும் கல்லாலும் மண்ணாலுமான கட்டிடமல்ல.
ஒரு இனத்தினதும், மதத்தினதும்
உயிரும், உணர்வு கலந்த உயிர்க்கூடு.
சிங்கள அரசின் சொர்ணமுடி.
புத்த மதத்தின் பொற்கோவில்.
பட்டத்து யானையே பணிந்தேற்றும் பாதக் கமலம்.
சிங்கபுரியைச் சிங்களர் ஆண்டார் என்பதை
காலம் காலமாகக் கட்டியம் கூறும் தந்தமாளிகை.
பௌத்தனொருவன் தன்னுயிரினும் மேலாக
பாதுகாக்க நினைக்கும் புதையற் பொக்கிஷம்.
வெளிச்சுவரில் சின்ன வெடிப்பேற்பட்டாலே....
அழிவு வந்துறுமெனப் பதறும்
நம்பிக்கையின் தூலவடிவம்.
சிங்கள மன்னர்கள் சிம்மாசனமேறியதும்
சந்திரவட்டக் கற்களில் தலைசாய்த்து நிற்பர்.
அந்தளவு பிணைப்பு.
உள்ளே புகும்போதில் பௌத்தனொருவனுக்கு
நரம்புகளுடே ஒளியூறி உயிர்கிறங்கும்.
மகாவம்சத்தின் மந்திரக்கோவில்.
கண்டிக்கு வனப்பூட்டும் கலைக்கூடம்.

யாரெனிலும் பணிந்தேற்றக்கூடிய
பேரெழிற்புரம்.
சிங்கள இனத்தின் சொர்ப்பன மாளிகை மீது தான்
எங்கிருந்தோ வந்திடித்தது இடியன்.
உள்ளே வெடி சுமந்த ஊர்திவெடித்ததும்
வெள்ளை மண்டபம் விதிர்விதித்துப் போனதாம .
உலகம் ஒரு கணம் இருண்டதாம்.
உயிர் மீது எவர் வந்து இடித்தார்களென்று
"சித்தார்த்த கூடம்" திணறியதாம்.
உடலைக் கிழித்து உள்ளே கைவிட்டு
இதயத்தைப் பிடித்து நசித்தது எவர் கைகள்?
அத்தாணி மண்டபத்து அழகிய தூண்களை
அடித்து நொருக்கியது யார்?
பொன்னோடு வேய்ந்த புனிதத்தின் வாழ்விடத்தில்
கண் வைத்திடித்தவர் எவர்?
"தர்மம்" வந்திடித்ததெனிலும் தண்டிப்போம்.
"வினைப்பயனே" வெடி சுமந்து வந்ததெனிலும்,
கண்டிக்க வேண்டிய கைங்கரியமென்று
தமிழர்களைத் தாக்கியது "சார்ந்த மார்க்கம்."
புலிகள் மீது மீண்டுமொரு பழி.
பழி சுமக்கவே பிறந்தவரானார்கள் புலிகள்.
மேட்டுக் குடியின் முந்தானை சரிந்ததென்று
சிங்களத்துக்குக் கோபம் சிரசிலடிக்கிறது.
இந்த நிலத்தின் சொந்தங்கள் மீது
வந்த குடிகள் வல்லமை காட்டுவதா? என்று
அஸ்கிரிய பீடத்துக்கு ஆத்திரம்.
எல்லாளன் இன்றும் இருக்கின்றான் என்பதறிந்து
இல்லாமற் செய்வேனென எழுகிறது மல்வத்தபீடம்.
தலதாமாளிகையை இடித்தது யாரென்று
எவருக்கும் தெரியாது.
சரி! தமிழனே செய்தானென்று
வெறும் ஒப்புக்கொருமுறை ஏற்றுக்கொண்டு
சரி, பிழையைத் தராசிலிடுவோம்.
எந்தத் தட்டு தாளுமோ
அந்தத்தட்டில் தர்மம்.
வெள்ளையனிடமிருந்து விடுதலை பெற்று
சிங்கள இனத்துக்கு ஐம்பது வருடங்களாகின்றன.
பொன்விழாக் காலம் புலர்ந்ததும்
பொன்விழாவை கண்டியில் கொண்டாடென்று

"சீமாட்டிக்குச்" சொல்லியவன் எவன்?
அவனே குண்டு வெடிப்பின் ஆணிவேர்.
பரம்பரை இராசதானியின் பஞ்சுக்கதிரையிலிருந்து
எண்கோண மண்டப எழிற்பீடமமர்ந்து,
தமிழர்களை வெற்றி கொண்ட சங்கதியை
நாட்டுக்குச்சொல்ல "நாச்சியார்" நினைத்தார்.
கூட்டை உடைத்துருவியது குண்டுப்பறவை.
வெளிச்சமானது விடயம்.
அம்மையே குண்டு வெடிப்பின் அடிநாதம்.
"பொன்விழாவுக்கு முன்னர் போரிட்டு வெல்வேன்"
வன்னி பிடிப்பேன்.
கண்டிவீதி என் ராஜஉலா காணும்.
யாழ்ப்பாணத்திலிருந்து தமிழரை ஏற்றி வரும் வாகனத்தை
பொன்விழாவில் வரவேற்பேன்.
பிரபாகரனா யாரவன்?
பொடியன்.
வென்ற பின் அவனுக்கும் கைகுலுக்குவேன்.
என்று சொன்னவர் எவர்?
சிங்களப் படைகளின் சேனாதிபதி.
பிரசண்ட ராஜமார்த்தாண்டன்.
"ராஜினாமாத் திலகம்" ரத்வத்த.
வெளிச்சமானது விடயம்.
கண்டி வெடிப்புக்குக் காரணமே இவர்தான்.
தலதாமாளிகையை இடித்தது யாரென்று
எவருக்கும் தெரியாது.
எனினும் எங்களையும் கொஞ்சம் பேச விடுங்கள்.
பிணம் தின்னும் பேயரசின் கோபுரவாசலுள்ள
ஆராய்ச்சி மணிகளுக்கு ஒரு கேள்வி.
குண்டு வெடித்ததைக் கண்டிக்கின்றவர்களுக்கு
ஒரு துண்டுக் கடிதம்.
தலதாமாளிகையின் சுவரில் ஒருகீறல் விழுந்ததுக்கு
இத்தனை கோபப்படும் இரட்சகர்களே!
மனிதம் மனிதமென்று மாரடிக்கின்ற புனிதர்களே!
சிங்களத்தின் தலையில் இடியிறங்கியதும்,
உங்களுக்கு கோபம் வருகின்றதல்லவா?
இதுதான்! இப்படித்தான்.
எங்களுக்குள்ளேயும் கோபம் எரிந்தது.
எப்போது?
நவாலி சென்பீற்றர் தேவாலயத்தில்

கூடு கலைந்த குருவிகள் ஓடிவந்து குடியிருந்த போது
குண்டுபோட்டாயே! அப்போது.
பூவும், பிஞ்சும், காயும், கனியுமாக
முழுமரத்தையே உலுப்பிச் சரித்தாயே! அப்போது.
நாகர்கோவிலில் ஒருநாள்
வெள்ளை வெளேரெனக் கள்ளமில்லாத குஞ்சுகள்
பள்ளிப்பாடங்கள் படித்துக் கொண்டிருந்த போது
குண்டெறிந்து கொன்றாயே! அப்போது.
புழுபோற் துடிக்கத்துடிக்க புதைத்தாயே அப்போதும்.
ஒவ்வொரு நாளும்
ஒவ்வொரு நொடியும்
எத்தனை வீடுகளை எரிக்கின்றாய்.
எத்தனை கோவில்களை இடிக்கின்றாய்.
எத்தனை உயிர்களை எடுக்கின்றாய்.
இனத்தின் அடையாளங்கள் ஒவ்வொன்றையும்
ஒத்தியெடுத்து உருக்குலைக்கின்றாயே.
இதுதான்! இப்படித்தான்.



எங்களுக்குள்ளேயும் கோபம் எரிகிறது.
தோன்றாப் பொருளாய் எம்மிற்சுடரும்
மாவீரர் துயிலுமில்லத்தைத் துளைத்த போதும்,
வானமரர் என நாம் வணங்கும் மறவர்கள்
தூங்குமிடம் உழுது தொலைத்த போதும்.
கண்மணிகளின் நிம்மதி கலைந்த நிமிடமும்,
புதிய மரபொன்றின் புனிதர்களின்
நினைவிடங்களை அழித்த நேரத்திலும்
இப்படித்தான் எங்களுக்குள்ளும்
கோபம் கொப்பளித்தது.
புத்தபெருமானைப் பேச விடுங்கள்.
சித்தார்த்தனுக்கு எல்லாம் தெரியும்.



மாசி ,பங்குனி 1998.

புதுவை இரத்தினதுரை



# பனங்காம மண்ணை நெற்றியிலிட்டு வணங்காமண் போரிடும்.

"தாமரைப் பூவினால் மாலை கட்டி - எங்கள்
தாயகப் பூமிக்குச் சாத்துங்கடி
பா மழையால் நிலம் பண்பட்டுப் போகவே
பாடியே கும்மிகள் கொட்டுங்கடி"
என்றான் ஒரு ஈழப்புலவன்.
"மட்டக்களப்புடன் யாழ்ப்பாணம்- வன்னி
மன்னார், திருமலை எம்தேசம்.
கொள்ளைஅழகடி எங்கள் தமிழீழம்
கொட்டுங்கடி ஒரு வட்டக்கும்மி"
எல்லை வகுத்து எழிலுரைத்தான் ஒரு கவிஞன்.

பெற்ற தாய் பெரியள்.
அவளே அனைத்திற்கும் ஆதிமூலம்.
முலைசுரந்த அமுதூட்டிய முதல்வள் அவள்.
கருப்பைக்குள்ளிருந்து காலாலுதைத்த போதும்
விருப்புற்றெம் பாதங்களுக்கு வெளியே முத்தமிட்டவள்.
தாயே சிறந்தவளெனிலும்
தாயகம் குறைந்தவளல்லள்.
கால்தொட்ட நாள் முதல் உயிர்தொட்ட உறவெது?
அன்னை மண் மீதான உறவே தான்.
பிறந்த மண் உறவே சிறந்தது.
தான் உயிர்கொண்டுலாவிய தாய்மண் மீது

உறவற்றுப் போகுமொருவன்
மனிதனே அல்ல.
மண்ணிழந்த பின்னும் வாழ்வோமென்பது
கண்ணிழந்த பின்பும் காண்போமென்பதற்குச் சமன்.
கறந்தமுலையும், பிறந்த பூமியும்
சுரந்தூறும் அமிர்தக் கேணிகள்.
ஊர்க்கிணற்றில் குளித்து,
ஊர்ப்புறத்தில் உலவி,
ஊர் மடியில் உறங்கி
வாழும் ஒருவனுக்கே வாழ்வு சித்திக்கும்.
அன்னை மண்ணின் சுகமிருக்கே அது அலாதியானது.
எம் முந்தையரின் எத்தனை தலைமுறையை
தாங்கியதித் தாய்மடி.
வயல்கள்,
வீதிகள்,
வனங்கள்,
வீடுகள்,
ஆறுகள்... அருவிகளென்று
பரம்பரையின் வேர்களைத் தாங்கியதல்லவா இம்மண்?
பெற்றவள் பெற்றுப்போட்டுவிட்டுப் போய்விடுவாள்.
அள்ளியணைத்தது எது?
கட்டியணைத்தது இந்தக் காதற்தேசமல்லவா?
காலையானதும் பறவைகள் எங்கெங்கே பறக்கின்றன.
மாலையானதும் கூடு திரும்புகின்றனவே..... ஏன்?
மேச்சலுக்குப் போகின்றன மாடுகள்
அந்தியானதும் வீடு திரும்புகின்றனவே..... ஏன்?
தனக்கொரு தாய்மடி இருப்பதென்பதும்,
அந்த மடியிற் தூங்குவது ஆனந்தமென்பதும்
அவைகளுக்குத் தெரியும்.
வளர்ப்பு நாய் வீடு காக்கிறது.
கோழிவந்தாற்கூடக் குரைக்கிறதே.... ஏன்?
இந்தளவும் எனதென்ற உறவின் உணர்வது.
என் தேசத்துக் கள்ளிச்செடியெனினும்
எனக்கது கற்பக விருட்சம்.
என்தேசம் சுடுபாலை வெளியெனினும்
எனக்கது இந்திரலோகம்.
காகமெனினும் என்னூரின் காகமெனில்
எனக்கது பஞ்ச வர்ணக்கிளி.

இந்த உணர்வு எவனுக்குக் கைவருமோ
அவன் மனிதனேயல்ல ; இறைவன்.
தாயகத்தைக் காதல் செய்பவன்... தேவன்.
சொந்த நாட்டில் உலவும் போது தலை குனிவதில்லை.
வேறு எந்தநாட்டில் உலவும் போதும்
தலை நிமிர்வதில்லை.
மண்ணின் மடிபிளந்து மரம் வளர்கிறது.
வளர்ந்ததும் நன்றிக்கடனாகக்
குடைபிடித்து நிழல் விரிக்கிறது.
தாயின் உடல்கீறி ஆறுபாய்கிறது
போகுமிடமெல்லாம் நன்றிக்கடனாக
தாகம் தணித்துச் செல்கிறது.
மண்ணிற் பிறந்தது முதல் இறக்கும் வரை
மனிதன் கிடக்கின்றான்.
நன்றிக் கடனாக என்ன செய்தான்?
ஒன்றுமில்லை.
தமிழனே!
தாயகமேனியைக் கூறு போட்டு வேலி அடைத்தவனே!
இன்றுன் தாய் கண்ணீர் வடிக்கிறாள்.
மாற்றான் உன் தாயின் மடியேறி மிதிக்கின்றான்.
முட்கம்பிச் சிறைக்குள்ளே வதை செய்கின்றான்.
மேனிமயிர் பொசுங்கக் கொழுத்தியெரிக்கின்றான்.
புண்ணாகியுள்ளாள் அன்னை,
என்ன செய்யும் உத்தேசம்?
தம் தாயகத்திற்குக் காயமேற்படுத்தியவனை
வியட்நாம் மக்கள் விரட்டியடித்தனர்.
பிறந்த மண்ணைப் பொசுக்கியெரித்தவனை
சீன மக்கள் துரத்தியடித்தனர்.
தமிழனே!
பிறந்த மண்ணோடு பெரிய உறவுள்ளவனே!
கண்ணீர் விடுகின்றாள் உன் காதற்தாய்.
அழகுக்கு இலக்கணமானவள் எம் அன்னை.
மட்டுநகர்வாவி அவள் மேனியின் அழகுத்தேமல்.
கோணமலை முகடுகள் அவளின் கோலமார்புகள்.
வன்னிக்காடுகள் பரந்த கூந்தல் விரிப்பு.
மன்னார் வயல்கள் முதுகுப் பரப்பு.
யாழ்ப்பாணம் அவளின் நெற்றிப்பொட்டு.
பேரெழிலோடு இலங்கினாள் எம் பொன்மகள்.
கடல் கடந்து வந்தவரெம் தாயைச்

சிறையிருத்தினர்.
சிறையிருத்திய போதும் சிரித்தாளெம்தேவி.
பூனைக்கண்ணன்,
புகைக்கண்ணன்,
செங்கண்ணனென்று வந்து விலங்கிட்டனர்.
வந்தவரால் தங்கி நிற்க முடியவில்லை.
ஆத்தாள் பொறுத்திருந்து வென்றாள்.
இன்றுமெம் தாயைச் சிறைபிடிப்பேனென்று
பக்கத்து வீட்டுக்காரன் படைநடத்தி வருகின்றான்.
வீரமாதேவியுடன் விளையாட நினைத்து
தேரேடுத்து வருகின்றனர் சிறுவர்கள்.
கைவளையல்களைக் கழட்டி வைத்து விட்டு
பண்டாரவன்னியனின் வாளெடுத்து நிற்கின்றாள் பத்தினி.
பக்கத் துணையாகப் பல்லாயிரம் வீரர்கள்.
இன்னும் கொஞ்சம் ஆட்பலம் வேண்டுமென்று
களத்திலிருந்து வந்துள்ளது கடைசிச் செய்தி.
உங்கள் வரவையும் எதிர்பார்த்திருக்கின்றாள்
தாயாள்.
கவசம் பூண்டெழுக தாயின் வேர்களே.
பனங்காம மண்ணை நெற்றியிலிட்டு
வணங்காமண்ணே எழுக.
எடுத்துவைக்கும் காலடி ஒவ்வொன்றுக்குள்ளும்
எதிரிக்குப் புதைகுழிவெட்டிப் புதைப்போம்.
வீரம் வற்றாத வீரமண்ணின் தளிர்களே!
பணியோமெனப் பகைக்குணர்த்தும் தருணமிது.
தலைகுனிவாளா தாய்?
இல்லையெனக் கொதிப்புறுக இளைய குருதியே.

□□

சித்திரை, 1998.





# பொக்கைவாயானது ஜயசிக்குறுய் இன்று பக்கவாதத்திலே ஜயசிக்குறுய்.

"சிக்குறுய் சிக்குறுய் ஜயசிக்குறுய் - வந்து
சில்லெடுக்கின்றது ஜயசிக்கிறுய்
பொக்கை வாயானது ஜயசிக்குறுய் - இன்று
பக்கவாதத்திலே ஜயசிக்குறுய் "

13.05.1998 இன்று
ஜயசிக்குறுவுக்குப் பிறந்த நாளல்ல
இறந்த நாள்.
ஈழத்தமிழனே! இன்றுனக்கு விடிந்தது காலை மட்டுமல்ல
வெல்வாயென்ற நம்பிக்கையின் துளிர்ப்பும் தான்.
இன்றுன் முற்றத்தில் பூக்கள் மட்டும் மலரவில்லை
புதிய வாழ்வொன்றின் சிரிப்புமென்றறிவாய்.
அடிவற்றி விடுமென்ற கிணறொன்றின் ஆழத்தில்
பீறிட்டெழுந்தது புதிய ஊற்று.
மூச்சடங்கிப் போகாதென்ற முனைப்பிது.
நம்பிக்கை நாற்றங்கால் போட்ட நாளின்று.
இனி அழுதது போதுமென்று எழுவாய்.
நிலவை பிடித்து நெஞ்சிற்சூட நிமிர்வாய்
முகிலையெடுத்து முகம் துடைத்துக்கொள்க.
காற்றைப்பிடித்து கயிறாகத் திரித்து
ஏற்றக்கொடியாக்கி இறை.
படுத்திருக்கும் பழைய பாயைச் சுருட்டி எறிந்து விட்டு

நட்சத்திரங்களை எடுத்தடுக்கி மெத்தையிடுக.
இன்றுனக்குச் சந்தோச நாளொன்றின் ஜனனம்.
வன்னிமரங்களுக்கு வளைகாப்பு.
அகதிக்குடிசைகளுக்கு ஆரோகண உற்சவம்.
குழாய்க்கிணறுகளுக்கு கும்பாபிஷேகத் தினம்.
உன்பிள்ளைகள் உனக்குப் பெருமை சேர்த்தனர்.
நரகாசுர சங்காரத்துக்குத் தேதிகுறித்த நாளிலின்று.
கண்டிவீதியிலேறிக் களிப்புற்று,
வென்றிலர் பகைவர்களென்று
பறவைகளுக்குப் பாடல் கற்றுக்கொடு.
எத்தனை காலமாய் இழிவுற்றிருந்தாய்.
குற்றேவல் செய்வதே குலப்பெருமையென,
கற்பனைக்குச் சேலைகட்டி
கண்ணாடி முன்நின்று களித்தாய்.
எற்சிற் படிகம் சுமந்து இன்புற்றாய்.
ஆள்பவனெவனெனினும் அவனுக்கடங்கி
காலடியில் கைகூப்பித் தொழுதாய்.
தலைநிமிர வழியற்றுத் தாழ்ந்திருந்த உனக்கு
பெருமை வந்தடைந்தது.
நாயென்றுன்னைப் பேசிய நாவுகள்
புலியென்றுன்னைப் போற்றியதே! யாரால்?
புறமொதுக்கித் தாழ்வாரத்தில் போட்டிருந்த உன்னை
நீயும் மனிதனென நிமிர வைத்தவர் எவர்?
பிரபாகரன்,
புலிகள்,
உன் பிள்ளைகள் இவர்கள் தான்.
ஒப்பனையில் மயங்கி உறங்கிக் கிடந்தவனே!
இன்றுனக்கு எழச்சி நாள்.
இன்று வரையான வரலாற்றில்
இன்றுதான் உனக்கு இனிய நாள்.
உன்னாலும் முடியுமென நீயே உணர்ந்த நாள்.
வேரறுத்து உன்னை வெளியே கலைத்து விட்டு
ஊருக்குள் புகுந்தனர் அசுரர்.
உரச்சாக்கு மட்டும் உனக்கு உறவாச்சு.
மரத்தடி மனிதராய் தமிழர் மாறினர்.
எதிர்காலம் சூனியமாச்சு.
இருளிற் கிடந்தன உறவுகள்.
ஓடிய இடத்திலிருந்தும் உன்னைக் கலைப்பேனென

சந்நதம் கொண்டது சந்திரிகா அரசு.
எதிர்கொண்ட எதையும் அள்ளி விழுங்கியபடி
கண்டிவீதியேறி வந்தது.
புலிக்கதை முடிந்ததென்று சாக்குருவிகள் பாடின.
வன்னிக்குள் அழிந்தது வரிப்புலிச்சேனையென்று
களிப்புற்றனர் கால் கழுவிகள்.
கிடைத்தளவில் மகிழ்வுற்று
அடிவருடிகள் அரசேறக் காத்திருந்தனர்.
பல்லுப்பிடுங்கிய பாம்புகள் கூடப் படமெடுத்தாடின.
புலிகள் தோற்றுப் போவார்களென்ற பெருநம்பிக்கையில்,
தேர்தல் நடிகர்கள் அரிதாரம் பூசிக்கொண்டு
குடாநாட்டில் குடியேறினர்.
ஜயசிக்குறுய் ஜெயிக்குமென்பதில்
நம்பிக்கை வைத்துத்தான் இந்தளவும் நடந்தன.
பொன்விழா கண்டிக்குப் போனகதையும் இதுதான்.
13.05.1997 அன்று
விகாராதிபதி எடுத்துக்கொடுத்த விசேடநாளில்,
தரணியாளவல்ல பரணிநட்சத்திரத்தில்,
மேஷராசியில்,
உதயகால உத்தம நேரத்தில்,
மந்திரித்துக் கட்டிய மஞ்சள் நூலுடன்
"வெற்றிநிச்சயம்" வீதியில் இறங்கியது.
பத்துநாட்களில்,
ஆகப் பத்தே நாட்களில்
கண்டிவீதி என் காலில் விழுமென
கைத்தடி காலக்கெடு விதித்தது.
சமாதானத்துக்கான சண்டையென்றது
பொதி சுமக்கும் பெரிய கண்ணாடி.
நள்ளிரவு விருந்து முடித்து நாடு திரும்பிய
"அவ்வை சண்முகிக்கு" ஆனந்த பரவசம்.
குடாநாட்டு மக்களுக்கான "சிலுவை சுமப்பு" என
சக்கரவர்த்தினியின் தங்கவாய் திறந்து
வெற்றி நிச்சயத்திற்கு விளக்கம் சொன்னது.
தடல் புடலாகத் தம்பட்டம் அடித்த படி
சிக்குறுய் சீறிப்பாய்ந்தது.
புலிகளினித் தப்பமுடியாதென்றே பேசப்பட்டது.
"போஸ்ற்மாட்டம்" செய்யும் "ஆய்வாளர்கள் "கூட
புலிக்கதையை முடித்துப் புதியகதை தொடக்கினர்.

ஓமந்தை வரை ஏவற்பேய்கள் எக்காளமிட்டன.
புலியழித்து நகருகிறோம் என்ற பெருமிதம்.
கண்டிவீதியின் வரைபடத்தைக் கையில் வைத்துக்கொண்டு,
உயிர்நிலை எட்டும் தூரத்திற்கு வரும்வரை
காத்திருந்தான் தலைவன்.
கட்டளைக்குக் காத்திருந்தனர் புலிகள்.
பாதித்தூரம் கடந்ததும்,
"வெற்றியினி உங்கள் பக்கம் விளையாடுங்கள்" என்று
கட்டளை பிறந்தது.
பதுங்கியிருந்த வேங்கைகள் பாயத்தொடங்கினர்.
முகத்திலொன்று,
முதுகிலொன்று,
கையிலொன்று,
காலிலொன்றென விழுந்தது புலியினடி.
சிக்குறுய் சிதறிச் சிலும்பியது.
முன்னே போனால் முகத்துக்கு அடி.
பின்னே போனால் பிடரிக்கு அடி.
மூஞ்சூறை விழுங்கிய சாரைப்பாம்பாய்
முக்கிக்கொண்டு கிடக்கிறது ஜயசிக்கிறுய்.
பிரபாகரன்,
அடியும்,முடியும் அறியமுடியாத அதிசயம்.
புலிகள்,
வேரையும், விழுதையும் இனம்காண முடியாத விருட்சம்.
எவனெவன் எந்த மொழியிற் கேள்விகேட்டானோ
அவனவனுக்கு அந்தமொழியிற் பதில் சொல்பவர்களே
புலிகள்.

> "பாரடா தமிழரின் பாதைமீதேறி - யாழ்ப்
> பாணம் போவேன்ற ஜயசிக்குறுய்.
> பன்னிரண்டானது மாதங்கள் ஆயினும்
> பல்லிளிக் கின்றது ஜயசிக்கிறுய்"

□□

வைகாசி, 1998.



## நீதி செத்துக் கிடக்கிறது.
## பொதி சுமக்கும் கழுதை
## பேசாமற் கிடக்கிறது.

ஒப்புக்குப் போர்த்திய பட்டுச்சட்டையின் உள்ளே
ஒட்டி உலர்ந்துளது உடலொன்று.
பட்டினி கிடக்கும் பாழும் குடலை மறைத்து,
பசித்த வயிறுக்குப் பன்னீர் தெளித்து,
உலகுக்கொரு "ஓரங்கநாடகத்தை" ஒப்பேற்றியுள்ளனர்.
வேருக்கு விஷநீர் பாய்ச்சி விட்டு
விழுதுக்கு வெளிச்சம் போட்டுள்ளனர்.
"கிருஷாந்தி கொலை வழக்கில் எதிரிகளுக்கு மரணதண்டனை"
செம்மணிக்குத் தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளதாம்.
எரிவாய்க்குப் புனுகு தடவி
கொளுத்திய குற்றம் குறைக்கப்பட்டுள்ளது.
எய்தவனிருக்க அம்புக்குத் தண்டனை.
எரித்தவனிருக்க நெருப்புக்குத் தண்டனை.
கிருஷாந்தி மீதான முலைதிருகலும், நகக்கீறல்களும்
வக்கிரகாமத்தின் வடிகாலல்ல.....
ஒரு இனத்தின் மீதான அடக்குமுறை அடையாளங்கள்.
செம்மணியில் புதைத்தது உயிரற்ற உடலங்களை மட்டுமல்ல.....
எம்மினத்தின் "வாழ்தல் உரிமையின்" குறியீடுகளையும் தான்.
நான் ஆள்பவள்...... நீ ஆளப்படுபவன்......என்ற
அதிகாரத்தின் அளவிடுதலிது.
"செம்மணியில்" நானூறு உடல்களுக்கு மேல்

புதைக்கப்பட்டிருக்கும்"
சொன்னவன், பார்த்தவன் மட்டுமல்ல.....
செய்தவனும் கூட.
சொல்லிய இடமும் கள்ளுக் கடையின் தாழ்வாரத்திலல்ல.
தீர்ப்பெழுதும் "தர்மதேவதை"யின் திருக்கோவிலில்.
நாலுபேருக்கு நீதி வழங்கிய "நல்லவர்களே"
நானூறு பேருக்கு நீதி எங்கே?
வாழ்வை முடித்தேகிய சோதரிக்காக வாதாடியவர்களே!
வாழ்ந்து கொண்டிருக்கும் கிருஷாந்திகளுக்காக
தீர்ப்பெழுதும் "தேவதை" சிம்மாசனமேறுவது எப்போது?
மனிதஉரிமை வாய்களுக்கும் பொரியரிசிபோட்டு
அநியாய நாடகத்தை அரங்கேற்றி விட்டனர்.
செம்மணி வயல்வெளியே!
எலும்புக் கூடுகளைச் சுமந்து உறங்கிக்கிடப்பாயாக.
செம்மணியில் உரமான "சீவன் முத்தர்கள்"
யார் யாரென்பது யாருக்குத் தெரியும்?
அவசரக்காலச் சட்டத்தை ஆதரித்து வாக்களிக்கும்
"பெரியவர்"களுக்குத் தெரியும்.
வன்னி நிவாரணத்துக்குக் கூட வரி கேட்டு நின்ற
"சின்னத்தலைவர் " களுக்குத் தெரியும்.
மாநகரசபையை ஆளவந்துள்ள "மன்னவனுக்குத்" தெரியும்.
எல்லோரும் சேர்ந்தே எங்களை ஏமாற்றுகின்றனர்.
காணாமற் போனவரைக் கருவிற்சுமந்தோரே!
இனி நல்லூரின் வீதியில் உண்ணாவிரதம் இருக்காதீர்.
கச்சேரிக்கு முன்பாகக் கண்டன ஊர்வலம் நடத்தாதீர்.
ஐ.சீ.ஆர்.சீக்கு மகஜர் அனுப்பாதீர்.
கண்டுபிடித்துத் தருவதாகக் கூறும் "கட்சிக்காரர் " களைப்பிடித்து
தண்டிக்க எழுவீர்.
களுத்துறையில் "தர்மம்" கழுத்துவரை சென்றுவிட்டு
பிழைத்துப்போவென்று போட்டு விட்டுப் போனதாம்.
அனுங்கிக் கொண்டு கிடக்கிறதாம் "அதர்மம்."
எழுவீர் எம்மக்களே!
காலச்சூதைக் கழுவேற்ற வேண்டும்.
நீதி செத்துக் கிடக்கிறது.
"பொதி சுமக்கும் கழுதை" பேசாமற்கிடக்கிறது.
இளிச்சவாயர் தமிழரென்ற இளக்காரம் எரிந்துபட
வெளிச்சங்களே! வீதியில் இறங்குங்கள்.
முகத்தை முத்தமிடுங்காற்றை மூச்சுக்குழலிட்டு
சின்னச்சின்னக் கூடுகளைக் கட்டி

சீவித்திருந்தன குருவிகள்.
மலைகளற்ற ஊரெனிலும் உயர எழுந்து
சிட்டுக்குருவிகள் சிறகடித்தன.
பருந்துகளுக்குச் சகிக்கமுடியவில்லை.
பச்சைவயல்களிற் பாதம்பதித்து
ஓடும் வாய்க்காலில் உடல் நனைத்தன மணிப்புறாக்கள்.
கழுகுகளுக்கு மனம் பொறுக்கவில்லை.
சந்திரனிலிறங்கும் கனவுகளோ,
இந்திர வாழ்வுக்கான எதிர்பார்ப்புக்களோ
எதுவுமின்றி இன்புற்றன பொன்வண்டுகள்.
சுமையற்ற வாழ்வே சுகமெனக் கருதியதால்
அமைதியுற்றிருந்தது குருவிகளின் அன்றாடம்.
அதையும் இல்லாததாக்கினாள்
நிலவின் மறுநாமம் கொண்ட "நெட்டூரி".
"பெண்ணான மாயப்பிசாசு" என்று
சித்தர்கள் வார்த்தைச் சாட்டையால் விளாசியது
எல்லாப் பெண்களையுமென்று எண்ணவேண்டாம்.
கொத்தியெரிக்க வருமொரு "குடிகேடி" என்று,
முக்காலமுணர்ந்த முனிவர்கள்
வருங்காலமுணர்த்திய வரிகளிவை.
அப்பன் ஐம்பத்தாறிலும்
ஆத்தாள் எழுபத்தேழிலும்
மகளானவள் இன்றுமாக
தமிழரின் குருதியில் ஜலக்கிரீடை.
கோழி பிடிக்கத் தெரியாத பூனைகள்சில
கோமணம் கட்டினவாம்.
அது போல
எங்களுக்குள்ளும் சில கோமாளிகள்.
பாதம் கழுவும் பல்லக்குக் காவிகள்.
சாயம் போன சேலைக்கு நீலம் போடுகின்றனர்.
ரோஷநரம்பையே அறுத்தெறிந்து ஆடுபவர்களுக்கு
வீரஉணர்வு பற்றிய விளக்கம் வேண்டியதில்லை.
எம்தேசமே! எழுக.
காட்டிக் கொடுப்பவரின் கழுத்தை நெரித்திடுக.
இருளே ஆனந்தமென இருக்குதொரு கூட்டம்.
விடிகாலை இவர்களுக்கு வேம்பு.
இட்டபணிக்கு ஏவல் செய்வதே இன்பம்.
"தேசியநீரோட்டத்திற்குத் திரும்பியவர்" என்று

கூசாமற் கூறும் குறைப்பிரசவங்கள்.
நிமிர்ந்த வாழ்வை நிறுத்து விற்றுவிட்டு
அயர்ந்து கிடக்கின்ற அற்பங்கள்.
பேய்கள் வந்து தன் ஊரைக் கலக்கும் போது
தாயாளையும் விற்றுச் சாப்பிடும் தலையாட்டிகளை
ஏது செய்யப் போகிறாய்?
திசையெட்டுமதிர தலைவிரித்தாடு தாயே.
வசையழிந்து போகட்டும்.
இனிக் கிருஷாந்திக்காக எவரும் அழவேண்டாம்.
அவளை ஒருமுறை புதைத்தது போதும்
தோண்டியெடுத்து மீண்டும், மீண்டும் புதைக்க வேண்டாம்.
"என்னைப் புதைத்தவரைப் புதையுங்கள்
உங்களைப் புதைக்காதிருக்கப் புறப்படுங்கள்"
இது கிருஷாந்தியின் அசரீரி.
சோதரி பாரச்சிலுவை சுமந்து போய்விட்டாள்
இனியேனும் எழுவீர்.
செம்மணியிலுள்ள நானூறு உடலங்கள் மீதும்
உறுதியென்றெடுத்து உயர்வோம்.
வீரியமுள்ளவரின் கைக்கெட்டும் தூரத்திற்தான்
சூரியனுள்ளது.
"எடுத்தகாரியம் யாவிலும் வெற்றி"
காலையில் ஐ.பீ.சீ சொல்வதின் அர்த்தம் புரிகிறதா?
நீ அதிர நடந்தாற் போதும்
பூகம்பம் வாய்புதைத்துக் கொள்ளும்.
இன்னும் உறக்கமா?
உன்விழி திறக்குமா?

□□

ஆனி ,ஆடி 1998.





# குனியாதெம் தலை
# வளையாதெம் முதுகு
# சோகம் பாடாதெம் தெரு.

பொன்தாதுப் பொடிதூவி
வந்தெழுவான் வான்ரசன்.
பாட்டுக்கு எதிர்பாட்டுப்பாடிச் சிலம்பும் சேவல்கள்.
காலைப்பனியில் நீராடிக்களிக்கும் மரங்கள்.
முழுகிய தலையுணர்த்த மயிர்நீவும் பயிர்கள்.
தலை கவிழ்ந்து நாணி மலர்வுறும் பூக்கள்.
உடல் முறித்து வயலேகும் உழவு மாடுகள்.
எம் நிலமுற்றம் ருதுவுறும்.
வேர்கொண்ட யாவும் விளங்கும்.
வைகறை வரும் ஒவ்வொரு நாளிலும்
இப்படித்தான்
உய்வுற்றுயரும் எம் ஊர்.
இன்று?
கோயில் மணி அடிக்காது.
கோழியொன்றும் கூவாது.
வாசல் மரம் பூக்காது.
வயல் சிரித்துப் பேசாது.
மாடெழும்பிப் போகாது.
மடிநிரம்பிக் கனக்காது.
கோடையென்ன? மாரியென்ன?

குயிலெதுவும் பாடாது.
நேற்றுப்போல் இன்றோ இன்றுபோல் நாளையோ இன்றி,
தினம் தினம் புதிதெனவாகிக்
"காலநதி" பெருக்கெடுத்துப் பாய்கிறது.
அணையிட்டுத் தேக்க முடியாத வேகப்பாய்ச்சல்.
தாக்குப் பிடிக்க முடியாதன சரிந்து விழ
பழையன கரைந்தும்,
புதியன நிமிர்ந்தும்,
நுங்கும் நுரையுமாகக் காலக்கங்கை பாய்கிறது.
நீச்சலடித்து நிமிர்கிறது உலகம்.
ஈழத்தமிழன் மட்டும்
கரையில் நின்று கால் நனைக்கக் கூட முடியாது
தூரத்திருந்து துடிக்கிறான்.
உலகத்தில் எத்தனை மாற்றங்கள்.
நொடிக்கொரு நூதனமாய்ப் பூக்கிறது பூமி.
இருண்ட கண்டத்துக்கே விடிந்து விட்டது.
நேற்றுவரை ஆடையற்று அம்மணமாய்த் திரிந்த
ஆதிவாசிகளுக்குள்ளேயும் "வேதியல்" புகுந்து விட்டது.
பாலைவன ஒட்டகக் கூட்டம் கூடச்
சோலைகளுக்கும் ஆலைகளுக்கும் சொந்தக்காரரானார்.
செவிவந்தடையும் செய்திகள் திகைக்க வைக்கின்றன.
விஞ்ஞானப் புதுமைகள் வியக்கவைக்கின்றன.
நாங்கள் மட்டும்
நரகிற்கிடந்துலவும் நரர்களானோம்.
"ஜென்ம சல்லாபங்கள்" எதுவுமற்று
இடிவிழுந்த பனைபோலும் அடிசரிந்துள்ளோம்.
குரல்வளைகள் நெரிக்கப்பட்டு,
திசையெட்டும் அடைக்கப்பட்டு,
விடுதலை அவாவிய குற்றத்துக்காக
திறந்த வெளியிற் சிறையிருக்கிறோம்.
முள்முடியும், பாரச்சிலுவையும் சுமக்கிறோம்.
வாசமிழந்து வாடிய மலர்களாய்
"தேஜஸ்" இழந்து தெருவிற் கிடக்கிறோம்.
எவர்தானெம்மைக் கணக்கிலெடுத்தார்?
வையப்பரப்பெங்கும் வேர்கொண்ட இனத்தின்
உறவுகளிங்கே உலர்ந்து சருகாயின.
"நாமுளோம் அஞ்சற்க" என ஒரு அசரீரி
கேட்குமென நம்பிக் காத்திருக்கிறோம்.

பன்றிக்குப் பால்கொடுத்த பரமசிவனுக்கும்,
"பாரம் சுமப்போரே வாருமென்ற" பரமபிதாவுக்கும்
எங்களுடன் மட்டும் என்ன கோபம்?
" மாடுகட்டிப் போரடித்தால் மாளாது செந்நெல்லென்று
ஆனைகட்டிப் போரடித்த" பரம்பரை
தீனிபொறுக்கித் திரிகிறது.
திருவோடும் கையுமாகத் தெருவில் நிற்கிறது.
பகைவனிடம் கையேந்திப் பிடியரிசி வாங்கியே
உலைமூட்டும் விதியெமக்கு.
உரைப்பையுடன் ஊர்வலம் சென்று
இரப்பை நிரப்பும் இழிநிலை வந்தாச்சு.
வெற்றிவிழா அணிவகுப்பில் நிமிர்ந்தும்,
நிவாரண ஊர்வலத்தில் குனிந்தும்,
எமக்கு இரண்டக வாழ்வு.
காலநதிக்கென்ன? அது வேகமெடுத்துப் பாய்கிறது.
ஈழத்தமிழரை எவர்தான் கணக்கிலெடுத்தார்?
விடுதலைக்கான வழியில் எத்தனை முட்கள்?
சலிப்புற்றுச் சரியாதே தமிழனே!
உலகமொருநாள் உன்பக்கம் திரும்பும்.
உறவுக்கிளைகளில் ஊஞ்சல்கட்டி
உன்னை வைத்து ஆட்டும்.
எம் முகில்கள் எங்கெங்கோ உலவிடினும்
மழைபொலிவதுன் தலையிலென நம்பு.
ஜெனீவாவில் திரண்ட ஜென்ம உறவுகளே!
'உள்ளோம் நாம்' என்ற உரத்த குரல்கள்
வன்னிவரை வந்து வாழ்த்தின.
போராடும் எமக்குப் போதுமிது.
இனியும் குனியாதெம் தலைகள்.
வளையாதெம் முதுகு.
யார்காலிலும் பணியாதெம் வீரம்.
சோகம் பாடாதெம் தெருங்கள்.
வேரறுந்து முளைகருகாதெம் விடுதலைப்போர்.
" இலக்கு" எட்டும் வரை எம் கால்கள் நடக்கும்.
விழுந்தாலும் எழுந்து விரைவோம்.
மீண்டுமொரு நரவேட்டைக்காகக்
கத்திகள் தீட்டப்படுகின்றன.
குதிரைகள் நிரையிட்டு சரிபார்க்கப் படுகின்றன.
வில்லுக்கு நாணேற்றப்பட்டு

அம்புமுனைகள் கூராக்கப்படுகின்றன.
கோரவாய் ஏவற்பிசாசுகள் உருவேற்றப்பட்டு
"சோமபானம்" பரிமாறப்படுகின்றது.
குடல்கிழிக்கவும் குருதி குடிக்கவுமென
தடல்புடல் பயிற்சி நடக்கிறது.
அடிக்கடி தேரில்வந்திறங்கும் " சேனாதிபதிகள்"
"உற்சாக மந்திரத்தை உச்சாடனம்"செய்கின்றனர்.
புஷ்பக விமானங்களுக்கு பீரங்கி பொருத்தப்பட்டு
தயார் நிலையில் தரித்துள்ளன.
வெளியே தெரியாது திரையிடப்பட்ட கூடாரத்துள்ளே
இரவும் பகலும் நடக்கிறது பெரிய முயற்சி.
மாரிமழைக்குள்ளே நடக்கவுள்ள காரியமென்ன?
உன்னியொரு எக்கெக்கி
"மாங்குளம் பிடிப்பது".
"கண்டிவீதிக்கு என்னவிலையும் கொடுப்பேன்"
இது ரத்வத்த.
"கண்டிவீதிக்கு என்னையே கொடுப்பேன்"
இது புலிவீரம்.
சத்தியமே ஜெயம்.



ஆவணி , புரட்டாதி 1998.



## கண்டி வீதியைக்
## கட்டித்தழுவு.
## கோவிந்தன் கடைச் சந்தியில்
## கூத்தாடு.

*வெற்றித் திருநகரான கிளிநொச்சி*
*வீரத்திலூறிய பூமியடா - புலி*
*அற்புதங் காட்டிடப் போரிடை வீழ்ந்தது*
*ஆயிர மாயிரம் ஆமியடா.*
*கலிங்கத்துப் பரணியை*
*எழுதிய புலவனைக்*
*கைதட்டிக் கூப்பிடுங்கள் - வந்து*
*கிளிநொச்சிப் பரணியை*
*எழுதியிடச் சொல்லியே*
*குரல் வைத்துக் கூப்பிடுங்கள்.*

கிளிநொச்சி.
உழுவோர் ஏரொலியும்,
கடைவோர் மத்தொலியும்,
சேர்ந்தொலிக்கும் வயலூர்.
தமிழீழத்தின் தானியக் களஞ்சியம்.
நகராகத் துடித்த பெருவூர்.
முகத்துக்கு அளவான ஒப்பனையுடன்
மிளிர்ந்தது அதனழகு.
பட்டறையிலடுக்கிய பழையநெல் முடிய முன்னரே
அடுத்த போகத்தரிசி அடுப்படிக்கு வந்து விடும்.
கறவைப் பசுக்கள் சொரியும் பாலில்
வயிறு மட்டுமல்ல

முற்றத்துப் பூமரத்தின் வேர்களும் நனையும்.
இந்த வாழ்விழந்து,
அந்துப்பூச்சி அறுத்தளவு அரிசி வாங்கவே
நிவாரண வரிசையில் நிற்கும் விதியென்றாச்சு நேற்று.
"சத்ஜய" எனப் பேரிட்டு வந்து
சண்டாளர் பிடித்தாரிந்தச் "சந்தனக்காட்டை".
பின்னர்
வல்லுறவுக்குள்ளான வாலைக் குமரியென
சிதைவுண்டு போனதிந்தத் திருநகர்.
திசையெட்டுமோடிச் சிலும்பினர் மக்கள்.
தரிசாகிப் போயின வயல்கள்.
மண்ணின் முலை யாவும் எரியுண்டு போக,
சின்னக் கூடுகள் கட்டிச் சீவித்திருந்த குருவிகள்
முட்பற்றைக் கிளைகளிலிருந்து மூச்சுவிட்டன.
26.09.1998 சனிக்கிழமை
நல்லூரிலுருகிய நாயகனின் நினைவு நாளன்று,
சாமம் கடந்து மறுநாளைச் சந்தித்த நேரம்
விடிய விடிய அருகிற் கேட்டது வெடியதிர்வு.
வன்னியின் கண்கள் பின்னர் மூடவேயில்லை.
கிளிநொச்சிக்குள் பிள்ளைகள் புகுந்தாரென்பதை
பீரங்கிவாயின் மௌனத்திலிருந்து புரிந்து கொண்டனர்.
ஈழத்தமிழனுக்கு மட்டுமல்ல,
உலகெங்கும் வாழும் தமிழனுக்கும்
முதுகில் இறக்கை முளைத்தது.
காற்றிலெழுந்து பறந்து
முகில்களை உரசி மிதந்தான்.
நிலவை விருந்துக்கழைத்தான்.
நட்சத்திரங்களைத் தொட்டு முத்தமிட்டான்.
மறுநாள் வந்த சூரியனையும் வழிமறித்து
சுகம் கேட்டான்.
ஆனந்தக் களிப்பு அடங்காதவனாய்,
"சந்திரன் பூங்காவில்" வந்திறங்கி
"கண்டிவீதியியைக்" கட்டித் தழுவினான்.
"கோவிந்தன் கடைச்சந்தி"யில் நின்று
கூத்தாடினான்.
"இரணைமடுக்குளத்தின்" அணைக்கட்டேறி
அருகிலுள்ள காடதிரக் கத்தினான்.
நெஞ்சுக்குள் ஆயிரம் நீரோற்பலம் பூக்க

குஞ்சுப் புறாவாகிக் குதுகலித்தான்.
விடிந்தது.
அன்று ஒரு நாளின் பொழுது மட்டும் விடியவில்லை.
ஈழத்தமிழனின் எதிர்காலமும் சேர்ந்தே விடிந்தது.
எந்தப் படையையும்,
அது எவனுடையதாக இருந்தாலும்,
தடுத்து நிறுத்தலாமென்பது மட்டுமல்ல,
அடித்து விரட்டலாமென்பது மட்டுமல்ல,
துடைத்து அழிக்கலாமென்பதற்கும்
விழிக்கு முன்னே சாட்சியாக விரிந்தது கிளிநொச்சி.
புலிகள் பூஞ்சனம் பிடித்துக் கிடக்கிறாரென்ற
வந்தேறு படைகளுக்கு வாயடைத்துப் போனது.
உருத்திரபுரம் ருத்திரபுரமாக
திருவையாறு மேனிபுளகமெய்திப் பெருகிப் பாய்ந்தது.
காளித்தாய் ஊழிக்கூத்தாடினாள்.
வேங்கைகளிடம் வீழ்ச்சி கண்டது வெறுமொரு முகாமல்ல.
பலமேறிய படைத்தளம்.
காற்றும் புகமுடியாதென்ற கனவிற்கிடந்து
பீற்றிய பகைவனின் பெருந்தளம்.
ரத்வத்தவின் கச்சையே அவிழ்ந்து விழ,
கைகளாற் பொத்தியபடி
இடிந்துபோன இரண்டு கடைகளைப் பிடித்து
மாங்குளத்தில் கொடியேற்றினார் "மானஸ்த்தன்"
பிரபாகரனைப் பிடிப்பேனென்ற பெருமானே வருக.
சீமைக்குச் சென்ற சீமாட்டியே வருக.
மையங்கொண்ட புயலின் முடிச்சவிழ்த்து
வீசும் வழியுரைத்த வித்தகன் யார்?
ஈயடிக்கக்கூட எழும்பாதிருந்த இனத்துக்கு
பேயடிக்கும் பலத்தைப் பெற்றுக் கொடுத்தவன் யார்?
கிளிநொச்சி பிடித்த புலியணி நகர்வுக்கு
வழிகாட்டி நடத்திய வல்லவன் யார்?
நீவிர் பிடிப்போமென்றுரைத்த பிரபாகரன் தான்.
காலின் கொலுசிலும்,
கையின் வளையலிலும்,
மெய் மறந்து கிடந்த மின்னல்களின்
நாடித்துடிப்பில் நாட்டுப்பற்றூட்டியவன்.
கோடி விழி திறந்து ஆடினாள் கொற்றவைத்தேவி.
பேயுண்டமாதிரிப் போனதவர் பாசறை.
கலிங்கப் போரை ஜெயம்கொண்டான் பாடியதே

கிளிநொச்சிக்கும் பொருந்துமென்றானது.
எவரிடமாவது கேட்டு
கலிங்கத்துப் பரணியை மொழிபெயர்த்துப் படியுங்கள்.
மிதித்த இடமெல்லாம் புல்லா நசிந்தது?
இல்லை! பிணமே நசிந்தது.
காலிடை கையும்,
கையிடை தலையும்,
தாய்நிலமெல்லாம் காய்கிற பிணமும்
நீரறியாமலே நெருப்பிடை வெந்தது.
ஆயிரம் யானைகள் களத்திடை வீழ்த்தியோன்
பரணியொன்றுக்குப் பாட்டுடைத்தலைவனாம்.
விதிமுறைப்படியிது சரியெனக் கொண்டால்
கிளிநொச்சிப் பரணிக்குப்
பிரபாகரனே பாட்டுடைத்தலைவன்.
போரினிற் கலந்த புலிமற வீரர்
பரணிக்குரிய பாட்டுடைப் பொருளர்.
இன்றோ, இனி என்றோ
எவனோ ஒருவன் இதை எழுதுவான்.
இந்த மாரியுடன் முறியும் வந்தவனின் நாரி.
அடுத்த கோடையுடனேறும் சிக்குறுவின் படை.

ஊர்பிடிக்க வைத்தாய் காலக்கெடு - இப்போ
உள்ளதுவும் போனதடா ஊளையிடு.
நீர் நிறைந்தாடுகுது இரணைமடு - இங்கே
நீ விழலாம் வந்து உயிரை விடு.
எட்டி நின்று வாழுகின்றாய் பொய்யிலே - கிளி
நொச்சியிப்போ எங்களது பையிலே
கட்டிவைத்த பங்கரெங்கள் கையிலே - நாங்கள்
காணப்போறோம் நாவற்குழி தையிலே.



□□

ஐப்பசி , கார்த்திகை 1998.

புதுவை இரத்தினதுரை



# மழைத்தொதுங்கிய திண்ணையிலிருந்து எனத்தது என்றானாம் இராப்பிச்சைக்காரன்.

"மாறாத புனல்பாயும் திருக்குளமும்
வயல்வெளியும் வருந்திச் செய்தே
வீறாக என்மரபோற் கீயாமற்
கோணமலை விமலர்க் கீந்தேன்.
பேறான பெரியோரே இதற்கழிவு
நினைத்தவர்கள் பெட்பு நீங்கி
நீறாகப் போவரிது நிச்சயம் நிச்
சயங் கோண நிமலர் ஆணை."

- யாழ்ப்பாண வைபவமாலை-

"பொன்னகர் நிகருங் கதிரையம் பதியிற்
போயரன் மகவினை வணங்கி
பின்னருக் கிரம சிங்கசேனன் றன்
பெண்ணென விருந்தன ளதன்பின்
மன்னவ னடங்காப் பற்றினிலேகி
மாநாகர் வாவெட்டி மலையிற்
தன்னிக ரற்ற மண்டப மியற்றித்
தனியர சியற்றின னிருந்தான்."

- வையாபாடல்-

"சிங்களவருக்கு மட்டுமே ஸ்ரீலங்கா
வந்தேறு குடிகளுக்கென்ன வழங்கவுண்டு"?
இது! கன்னாபின்னாவெனக் கத்தி
சன்னதமாடும் "சாது" கூறியதல்ல.
தென்னாபிரிக்காவின் தலைநகர் நின்று

அதிகார அணங்கு என அங்கீகரிக்கப்பட்ட
திமிரிலுருவான சந்திரிகாவின் திருவாய் மலர்வு.
பேசிய வார்த்தைகளுக்குப் பூடகப் போர்வையிட்டு
வீசிய அம்பு.
அம்பின் நுனியிலும் பூசியிருந்தது நஞ்சு.
ஒப்பனை நீவிய வார்த்தைகளை
இனி உருமறைப்புச் செய்து
குற்றத்தைக் குறைத்துக் கொள்ள முயலலாம்.
எனினும் எமக்கு
எய்த அம்பு தைத்த காயம் பெரிது.
காயத்திலிருந்து பெய்த குருதி அதிகம்.
வெய்ய வார்த்தைகள் தந்த வேதனை வலிது.
சுருக்கெனத் தைத்த சுடு வார்த்தைகளால்
திடுக்குற்றுப் போனோம்.
"சமாதான தேவதை" யின் "சரித்திரப் பிரகடன"த்தின் பின்னும்
அலரி மாளிகையின் அடுப்படிவரை சென்று
சட்டிகழுவிக் கொடுக்கின்றனர் சில "தமிழுகள்"
தாயின் சேலையுருவிய "சண்டிராணி" யின்
மாயமொழி இவர்களுக்கு "மந்திர உச்சாடனம்".
நரம்பறுத்த நாம்பன்களே உழவுக்கு நல்லதென
கமக்காரி கண்டுபிடித்துள்ளாள்.
வைக்கோலோடு வயல்முழுவதும் உழுதாச்சு.
மூச்சிரைக்க உழுகின்ற சில "மூதேசி மாடுகள்"
உழுது தொலைக்கட்டும்.
மான வேறறுத்த மனித மரங்களெல்லாம்
ஈன இரைதின்று இலையாட்டுகின்றன.
ஆடித்தொலைக்கட்டும்.
தமிழனாய்ப் பிறந்ததே பாவமெனச்
சரித்திரம் தொடர்ந்தும் எழுதுகின்றது.
நக்கிப் பிழைக்கும் நரகல்கள்
எக்கேடாயினம் கெட்டுத் தொலைக்கட்டும்.
சிங்கள தேசத்தின் சீமந்த புத்திரியே!
வந்தேறு குடிகளென்ற வாயே!
சாந்த சொரூபியெனத் தலைமாற்றிக் கொண்டவளே!
சந்தைக்குச் சரக்கு விற்க வந்த
வந்தேறு குடிகளா எங்கள் வம்சம்?
மழைக்கொதுங்கிய திண்ணையிலிருந்து
எனக்கிது என்றானாம் இராப்பிச்சைக்காரன்.

கூலிக்கு வேலியடைக்க வந்த குடிகாரன்
வேலி தனக்கென்று வழக்காடப் போனானாம்.
காற்றாலொதுங்கிக் கரைதொட்ட பரம்பரையா
பூர்வீகம் பற்றிப் பினாத்துவது?
காலாதி காலமதாய் கையளைந்த எம்மண்ணில்
"லாலா" நாடிருந்து வந்த "லைலாவா ஆடுவது?"
பண்டிருந்து நாங்கள் படுத்தெழுந்த பூமியதை
ஒண்ட வந்த பிடாரி உரிமை கொண்டாடுவதா?
"அடியடா சக்கை
அம்மன் கோயில் புக்கை.".
இலங்கை முழுவதும் எங்களுக்கே சொந்தமென
புலம்பித் திரிந்தோமா நாங்கள்?
வந்தேறு குடிகளென வரலாற்றைத் திரிந்தோமா?
உங்களுக்கு மண்ணில் உரிமையில்லை என்றோமா?
இல்லயே.
இலங்கை இரு நாடுகள் கொண்ட ஒரு தீவு.
இதுதானே நாம் கேட்கும் தீர்வு.
"வெண்சாமரைக்காரிக்கு" இது ஏன் விளங்கவில்லை?
எங்களுக்குச் சொந்தமானதில் நாங்களும்,
உங்களுக்குச் சொந்தமானதில் நீங்களும்,
சந்தோஷம் கொள்ளத்தானே
அன்று "சமஷ்டி"கேட்டான் தமிழன்.
உன் தந்தை தந்திருந்தால்
இந்தளவு ரத்தம் சிந்தவேண்டி வந்திராது.
தந்தை தரவில்லை,
தாயாளும் தரவில்லை,
அடுத்தடுத்து அரியணையேறிய யாரும் தரவில்லை.
அம்மணி!
"பெரியபடிப்பெல்லாம் "பிரான்ஸில் படித்தவளே!
அனைத்தும் நமதென்று வாதிடும்
அறியாமை எமக்கில்லை.
ஊரான் வயலையெல்லாம் உழுமாசை எமக்கில்லை.
நாமிருக்கும் பூமி நமக்கு.
நீரிருக்கும் பூமி உமக்கு.
நல்ல அயலவராக நாமிருப்போம்.
முந்தைக் குடியென்றும்,
வந்தேறு குடிகளென்றும்,
பீற்றலும், புலம்பலும் உனக்குப் பெருமை தராது.

நேற்றிருந்த வாழ்விழந்து நெடு மூச்சுவிட்ட எங்களுக்கு
தேற்றுதலளிப்பாயெனத் தேறியிருந்த போதுதான்
நீ கூற்றுவனாய்க் குதித்தாய்.
குடிகலைத்தாய்.
நாற்று வயலையெல்லாம் நாசமுறச் செய்தாய்.
இன்று, வந்தேறு குடிகளென வரலாற்றைத் திரிக்கின்றாய்.
சமாதான நர்த்தகியெனச் சதங்கை கட்டிய நீயும்
கசங்கிப்போன பழைய உடுப்புடன் தானே
காட்சி தருகின்றாய்?
இந்த மாங்கனித்தீவு தீவாக முன்னரே
நாங்களிங்கு வாழ்ந்திருந்த கூட்டத்தின் வம்சம்.
இங்கு முளைத்த முதல் மரத்துக்கே நீருற்றியவர்.
ஆறுகளுக்கு அணைகட்டிய ஆரம்ப மனிதர்.
கந்தரோடையிற் கிடக்கும் "ஈமத்தாழிகளுக்குச்"
சொந்தக்காரர்.
முதுமனிதக் கூட்டத்தின் முற்றம் இதுவானால்
அதுவும் எமதாகும்.
"தமிழ்பௌத்தத்தை"எம் முந்தையர் சார்ந்திருந்தனர்.
சிலப்பதிகாரமும்,
மணிமேகலையும் சொல்லும் திருநகர்கள் எமதே.
கொம்பு செவியை மறைத்தல் கூடாது.
அளவுகோல் பிழையானால்
விளைவுகள் விபரீதமாகும்.
முந்தைக்குடியென்று உம்மையும்,
வந்தேறு குடிகளென்று எம்மையும்,
வகைபிரித்தல்
நன்றல்ல.....நன்றல்ல..........நன்றேயல்ல.

> "துஞ்சுமேதி சுறாக்களைச் சீற
> சுறாக்களோடிப் பலாக்கனி கீறியே
> இஞ்சிவேலியின் மஞ்சளிற் போய்விழும்
> ஈழமண்டல நாடெங்கள் நாடே".

□□

மார்கழி ,1998.



# வாழ்வான் தமிழன்
# இல்லையேல்
# விடுதலைக்காக
# வீழ்வான் தமிழன்.

பாதைமீதேறிப் பரவியே வந்த
பகைவரைத் தடுத்தனர் புதல்வர்.
சீதளக்காற்றில் தீயெழ வந்தோர்
திகைத்திடப் பொருதனர் மகளிர்.
பூ தலம் வியந்து போனது, வீரம்
புலர்ந்திட நின்றது தாய்மண்.
மாதவம் செய்த மண்ணடா அள்ளி
மார்பினிற் பூசடா தமிழா.
எத்தனைக்கென்றுதான் அழுவதெம் வாய்கள்.
எத்தனை காலத்துக்கு நீரிறைப்பது கண்கள்.
சீறிச்சீறியே மூக்குகள் சிவந்து போயின.
சோகம் கீறிய கோடுகள் முகத்திலும்,
வேகம் ஆறிய கால்கள் நிலத்திலுமாக
சடமாய் நடக்கின்றன எம் உடல்கள்.
கேள்விக்குறியாய் வளைந்தோமெனினும்
நாளைக்கு நாமேதான் பதிலென்பதில் வெகு சந்தோஷம்.
நவீன உலகிருந்து எட்ட இருந்தாலும்,
கால நீரோட்டத்தில் கால்கழுவி
வாழாப் பிறவிகளெனினும்,
விடுதலையின் திசையில் கிட்டவுள்ளோமென்பதில்
மெத்த மகிழ்ச்சி.
பசியால் நிறைந்துளது வயிறு

எமக்கிப்போ பசிப்பதேயில்லை.
ஊறியூறி வெளியே பெருகி,
நயனக்கிணறுகள் ஊற்றடைத்து விட்டதால்
எமக்கிப்போ கண்ணீரே வருவதில்லை.
சாவும் நாமும் ஒரே படுக்கையிற்தான் சயனம்.
ஆக, சாவெமக்குச் சகஜமாகி விட்டது.
எமன் பயம் கூட எமக்கில்லை.
என்னதான் நடந்து விடும்?
மிஞ்சி மிஞ்சிப் போனால் உயிர் போகலாம்.
அட, அதற்கேன் அச்சமுற வேண்டும்.
"போகுமுயிர் இந்தப் பொன்னாட்டின் விடுதலைக்காய்
போகுமெனில் அந்தப் புனிதங்கள் கோடி பெறும்".
இங்கே உச்சரித்துக் கொள்ளும் ஒவ்வொரு வாயும்
தத்தெடுத்துக் கொண்டது இந்த வரிகளைத்தான்.
மூன்றாம் தரப்பு மத்தியஸ்தை முன்மொழிந்தோம்
வழிமொழிய வேண்டியவர்கள் வாயடைத்துப் போனார்கள்.
சமாதானத்துக்கான சாளரங்களை விரித்தோம்
சமருக்கான களங்களையே அவர்கள் விஸ்த்தரிக்கின்றனர்.
போரை நிறுத்தி பேசலாம் வருக என்றால்
பலமிழந்து போனதால் பணிந்து போகுறோமென,
எள்ளலும் ; எகத்தாளமுமாக
எரிவார்த்தைகளைக் கொட்டுகின்றனர்.
போரற்ற நூற்றாண்டைக் காண விளைந்தோம்
போருக்கான ஆண்டென பிரகடனம் செய்துள்ளனர்.
குருஷேத்திரத்துக்குத் தேதி குறித்து
சேனாதிபதிகள் திக்விஜயமும் புறப்பட்டு விட்டனர்.
எதிரிக்கு எதிரி எனக்கு நண்பனென
ஓடுகாலிகளை அழைத்து உபசாரம் செய்கின்றனர்.
சரி, அவர்களுக்காயினும் சரியாசனம் கொடுத்தார்களா?
தாழ்வாரத்தில் வைத்துத்தானே சாப்பாடு போடுகின்றனர்.
புலிகளை அழிப்பது தமிழரை அழிப்பதே என
சரியாகத் தெரிந்து கொண்டது சந்திரிக்கா அரசு.
கொழும்பில் "கதிர்காமமகரிஷி" யை வைத்து
"அராஜக ஆச்சிரமம்"நடத்துகின்றாள் அரசி.
கண்களைக் கத்தியாற் தோண்டுவது தானே குற்றம்.
கைவிரலால் குத்துவிப்பது எப்படிக்குற்றமாகும்?
வித்தையறிந்தவர்கள் விளையாடுகின்றனர்.
பாவம் செய்த தமிழனே!
உனக்கெவர்தான் பரிதாபப்படுவாரோ?
தமிழரைப் பகையழித்த சம்பவம் கிடையாதே.
தமிழரைத் தமிழனழித்த கதைதானே

தமிழர் வரலாறு.
அது இன்றும் தொடர்கிறது.
தொழும் வாழ்வு அற இன்றாயினும் எழுந்தாயே
தகும் இது.
புலியான வாழ்வே உனக்குப் பெருமை தந்தது.
அடிமாடாய்க் கிடந்த போது யாருன்னை மதித்தார்?
உழக்கிச் சென்றனர் எல்லோரும்.
புலியெனத் தலை நிமிர்த்திய பின்னரே
உன்னை ஒளி வட்டம் சுற்றிக்கொண்டது.
நேற்று வரை உனக்கு என்ன பெருமை?
காற்றில் சருகான சிறுமை.
கேட்டுப்பார் யாருன்னைக் கணக்கிலெடுத்தார்?
மலேசியாவில் கூலி,
சிங்கப்பூரில் சித்தாள்,
ஆபிரிக்காவில் அடிமை,
பர்மாவில் துரத்தப்பட்ட வேண்டாதாள்.
இத்தனை கோடிபேர் இருந்தும்
இந்தியாவில் மட்டும் என்னவாம்?
ஆரியனுக்கு அடிமைதானே.
கோயில்கட்டி கும்பாபிஷேகம் நடத்திய போதும்
நீ வாசலுக்கு வெளியே நின்றுதானே வணங்கினாய்.
உன் யானைப் பலமாறியாது நசிந்தாய்.
ஆரியன்தானே ஆள்கின்றான்.
இலங்கையிலாவது துலங்கினாயா? இல்லையே,
காலத்துக்குக் காலம் காலால் மிதிபட்டும்,
வருடமொருதடவை வதைபட்டும்
புலியாகு மட்டும் நீ பிச்செறியப்பட்டாய்.
பின்னர் தானே பேசும் பொருளானாய்,
இன்று உலகெங்கும் உனக்கு வேர்கள்.
வையப்பரப்பெங்கும் இன்றுனக்கு வாய்கள்.
தளத்தில் “வெல்வோம்” என்ற நம்பிக்கையுடனும்,
புலத்தில் “தோற்கவிடோம்” என்ற துணிவுடனும்
எல்லோரும் ஒன்றான ஒரு வாழ்வு துளிர்ந்தது.
சாவுவரினும் வரட்டும்.
போகும் திசைமட்டும் மாறாதென்று
சின்னஞ்சிறு வன்னியே! சிலிர்த்து நின்றாய்.
உன் நிமிர்ந்த வாழ்வைத்தானே நிலமெல்லாம் பேசுகிறது.
எவரெவர் காலையெல்லாம் தழுவிச்செல்கிறது காற்று.
காற்றை எவராவது கணக்கிலெடுத்தார்களா?

புயலாக மையங்கொண்ட போது மட்டும்
வானொலி வாய்களெல்லாம் அலறுகின்றன.
அடங்கிக் கிடந்த போது தமிழனையெவரும் ஆதரிக்கவில்லை.
கழிவு வாய்க்கால் கழுவும் ஒருவனாக,
கரிமண்டிக்கிடக்கும் அருவருத்த பொருளாக
கால்தொடக்கூடக் கூசும் பிண்டமாகத்தானே கருதினர்.
இன்றுனக்கு எத்தனை பெரியவாழ்வு.
புலியென்றால் தமிழனென்றுரைக்கிறது புதிய அகராதி.
தமிழனென்றால் புலியென அலறுகிறது சந்திரிகா அரசு.
திசைக்கொன்றாய் உன்னுறவுகள் சிலம்பிய போதும்
தமிழனென்றதும் தசையாடுகிறது.
மூச்சாக நாமிருப்போம் முன்னேறுங்களென்று
புலத்திலிருந்து வரும் குரல்கள் புல்லரிக்க வைக்கிறது.
போதுமடா உனக்கிந்தப் பெருமை.
உலகமெங்கும் தமிழன் உன்னால் நிமிர்ந்தான்
அவர்களாலேயே நீ அலங்கரிக்கப்படுகின்றாய்.
நேற்று வன்னிக்கொரு வரலாறிருந்தது.
இன்றும் இருக்கின்றது.
நாளையும் இருக்கும்.
வாழ்ந்தான் தமிழனென்ற வரலாறு வேண்டும்.
இல்லையேல் விடுதலைக்காகப் போராடி
வீழ்ந்தான் என்றாவது சொல்லி வீசட்டும் காற்று.
அகலத்திற கதவை.
வருவது உறவானால் வரவேற்போம்.
பகையேவரினும் வரட்டும்.
கொல்லைப் புறத்தில் குழியிலிடுவோம்.

ஊரெல்லாம் தீயில் உழன்றனவெனினும்
உயர்ந்தன தமிழரின் தலைகள்
வேரறுந்தாடி விழுந்தன மரங்கள்
வியப்புறும்படி அடிமண்ணிற்
பீறின தளிர்கள் பொசுங்கியதனைத்தும்
பூத்தன: தீயின் வாயுண்டு
நீறின யாவும் நிமிர்ந்தன; பசிய
நிலமென வானது தாய்மண்.

□□

மாசி, பங்குனி 1999.



# அடங்காமண்ணுக்கு விலங்கிடத் துடிப்பவனே உன்னைப்பார்த்து அழுவதா? சிரிப்பதா?

கதவு திறந்து வெளியே வந்தன கால்கள்.
முகம் மறைத்த முகிலின் திரைவிலக்கி
நிலவு இப்போ நேராகப் பார்க்கத் தொடங்கியது.
காற்றை எதிர்கொள்ள மரங்கள் தயாராகி விட்டன.
இனி விழுதறுந்து போனாலும் வேர்கள் மரத்தைத் தாங்கும்.
கருப்பைக்குள்ளும் நெருப்பு வளரும் காலமிது.
பொத்திப் பொத்தி வளர்த்த குஞ்சுகள் மட்டுமல்ல
தாய்க்கோழிகளும் சண்டைக்குப் புறப்பட்டு விட்டன.
இதுவரை தாய்ப்பசுக்கள் பாலூட்ட
கன்றுகள் களமிறங்கின.
இப்போ பால்மடிப் பசுக்களே பயிற்சியெடுக்கின்றன.
நேற்றுவரை காளைகள் சூடடிக்க
கைத்தடிகள் ஓய்வெடுத்தன.
இன்று பஞ்சுத்தலைகளும் சேர்ந்து பயிற்சியெடுக்கின்றன.
அட......பைத்தியக்காரப் பகைவனே!
வாய்க்காலைத் தடுத்து தண்ணீரை மறித்தாய்
இந்தாபார் வரப்பேயுடைந்து பாய்கின்றது.
வளையிருந்த முயல்களைக் குழியடைத்து விரட்டினாய்.
கூடிருந்து கலைத்தாய் குருவிகளை.
பூக்களில் அமரலாகாதென
தேனீக்களுக்குப் புதிய கட்டளை பிறப்பித்தாய்.

எல்லாமே உனக்கு வில்லங்கமானது.
குரல்வளை நெரித்துக்குதற நினைத்தாய்
இப்போ பெருவிரல்கள்கூடப் பாடத்தொடங்கின.
அடங்கா மண்ணுக்கு விலங்கிடத் துடிப்பவனே
உன்னைப் பார்த்து அழுவதா? சிரிப்பதா?
ஈழத்தமிழன் சீனச்சட்டியிற்செய்த அண்டாகுண்டா அல்ல....
போட்டதும் உடைந்து போவதற்கு.
இவன் உருக்கில் வார்த்தெடுத்த தாச்சிச்சட்டி.
நெருப்புப் படப்பட இன்னும் உருக்காவான்.
கைத்தடிக்கே அடங்கிய காலமொன்றிருந்தது தான்.
காக்கிச் சட்டைக்கு அஞ்சிய காலமும் இருந்துதான்.
எல்லாமே புஸ்வாணமாக எழுந்தன எம் தளிர்கள்.
இன்று பீரங்கிக் குழலிற்தான்
எம் பிள்ளைகள் புல்லாங்குழல் வாசிக்கின்றனர்.
கவச வாகனச் சக்கரங்களைச் சேகரித்து
காவலரண் அமைக்கின்றனர்.
பகைவனின் தலைக்கவசத்திற்தான் தண்ணீர் கொதிக்கிறது.
காலால் நெரித்துக் கசக்கிவிடலாமென நினைத்தாய்.
நெரிக்க நினைத்த பாதங்களில் நெருஞ்சிமுள்ளேறுகிறது.
இது தான் புலிவீரத்தின் புதிர்.
"சும்மா கிடந்த சங்கை ஊதிக்கெடுத்தானாம் ஆண்டி"
பொருத்தமான பழமொழியானது.
முளைத்த மரம் வேர் விடும்.
சடைத்தமரம் விழுதெறியும்.
தர்மத்தின் வாசலைத் தாழிடவா துடிக்கின்றாய்?
அட மடையா! அதர்மத்துக்கு ஆயுள் கம்மி.
ஈழத்தமிழன் நீரடி ஊற்றின் தோற்றுவாய்
தோண்டத் தோண்டச் சுரப்பான்.
அள்ளி இறைக்க நினைத்தால் அது வற்றாது.
இறைத்த கைகளே அலுத்துப் போகும்.
புலிகள் முறிந்து போக நேரிடில்,
முறிந்து போவார்களேயன்றி
வளைந்து போக மாட்டார்கள்.
அழியில் அழிவார்களேயன்றி அடிவணங்க மாட்டார்கள்.
கோடையிற் கருகிக் கிடந்தாலும்
மாரியிற் துளிரெறிந்து படரும்.
அறுகின் வேரறுத்து அழிக்கமுடியுமென்றா நம்புகின்றாய்?
உலகெங்கும் விசாலித்த புளிய வைரம் எம் சாதி.
பாலைவனத்திலும் எம் பரம்பரை உண்டு.

துருவப்பகுதியிலும் எமக்குச் சொந்தங்கள் உண்டு.
நெருப்பிற் குளித்து நிமிர்ந்துள்ள கோபுரத்தைப் பார்த்து
மண்மேடொன்று மார்பிலே தட்டியதாம்.
மடுபிடித்த மமதையில் திமிர்பிடித்தா நிற்கின்றாய்?
படுகுழியொன்று உன்பக்கத்தில் தோண்டப்பட்டுள்ளது.
குழியறியாது குதிப்பவனே!
வழியெங்கும் உனக்கு வலை விரித்துள்ளோம்.
பொன்னெழில் பூத்துக்கிடந்த எங்கள் பூவனத்தை
கண்ணி வயலாக்கிக் காடாக்கினீர்.
வண்ணம் குலையாதிருந்த எங்கள் வசந்தவாசலைச்
சன்னம்சிதறித் தகனம் செய்தீர்.
இன்னும் பொறுத்திருப்போமென எப்படி எதிர்பார்ப்பீர்.
நீ மட்டும் நாட்டாண்மை காட்டிக்கொண்டு
எம்மை எழும்பக்கூடாதென எப்படி உத்தரவிடலாம்?
அம்மா சந்திரிகா! நினைக்கோர் விண்ணப்பம்.
நேற்று சமாதான வேடமிட்டு நீ வந்தாய்.
சந்தோசம் கொண்டாடினாய்.
நாமும் முகம் மலர்த்தி நம்பிக்கையுற்றோம்.
மூன்றே மூன்று மாதத்தில் உன் முகமூடி களைந்தாய்.
உள்ளேயிருந்தன குருதி வழியும் கோரப்பற்கள்.
யுத்தப்பிரியரென எம்மையே சுட்டினாய்.
விக்கித்துப் போனோம் நாம்.
சுட்டெரிக்கத் தொடங்கி எம் மண்ணைச் சுடுகாடாக்கினாய்.
இனியும் புலிகளை அழிப்பேனெனப் புலம்பாதே
செய்துகாட்டு தாயே.
அழிவது யாரென அதன் பிறகு தீர்மானிப்போம்.
அடி சரிந்து வீழ்வோமா நாங்கள்?
எத்தனை புயல்களைத் தாங்கியது எமது இனம்?
அத்தனை தாங்கியும் அழிந்ததா? இல்லையே.
நிமிர்ந்து தானே நிற்கிறது.
இந்திரலோகத்திலிருந்தா இறங்கியது சிங்களசாதி?
சகதிப்புழுவானதா தமிழ்ச்சாதி?
ஏனிந்த எடுத்தெறிவு?
ஏனிந்த அருவருப்பு?
வையம் அறியாதா எங்களின் வரலாறு?
முழுப்பலத்துடன் விரைவிலெம் முற்றத்தில் சந்திப்போம்.
அப்போதறிவாய் எங்களின் ஆற்றல்.
நேற்று வரை தமிழினம் தாழ்ந்திருந்ததென்னவோ உண்மைதான்.
எனினும் வீழ்ந்தறியா விலாசமுடையது எமது இனம்.

முழுமையான பலத்துடன் எழுவோம் தமிழரே.
எழுபது வயதிலும் பிடரிமயிர்சிலிர்த்து
பயிற்சியெடுக்கும் பாதங்களே!
உம் பாதம் தொழுதோம்.
விடுவதில்லையென வியூகமமைத்த முதிர் வேங்கைகளே!
மடுமாதா கோயிலுக்காகட்டும்
உமது முதற்பயணம்.
மாதாகோயில் மணியோசை உம்மை ஆசீர்வதிக்கட்டும்.
வரலாற்றில் உம் நாமம் வாழும்.
பகைவன் உன் பயிற்சியறிந்தே பதறுவான்.
கரையுடைத்து எழும் அலையென ஆர்ப்பரிக்கும்
உம் குரல் அறிந்து எதிரியின் குடல் நடுங்கும்.
இங்கே குடிசைகள் ஒவ்வொன்றும்
இப்போ புலிக்குகையாச்சு.
இனியும் விடியாமலா போகும்?
காத்திருந்த காலமே எங்கள் கைகளில் வந்தது.
போர்த்திறன் காட்டும் இனிப் புலிச்சேனை.
சுற்றி நிற்கும் எதிரிப்படை திக்குமுக்காட.
பற்றியெரியும் நெருப்பு.
இனிவரும் காலம் எமதே.



பணிந்து போகத் தமிழன் என்ன
நனைந்த கோழியா?
குனிந்துபோகப் புலிகள் என்ன
நாணல் வேலியா?
சாவுக்கு நாமினிச் சாவெழுதி - பகை
ஊறும் குருதியில் நாம் முழுகி
வேகமெடுத்திடுவோமடா - இந்த
வீரமண் வென்றிடும் ஆமடா



சித்திரை, வைகாசி 1999.

புதுவை இரத்தினதுரை



# இந்த மண்ணும் அந்த இனிய நாட்களும்.

எழுவான் திசையைக் குருதிச் சேறாக்கி
வானத்தில் பிரசவம் நடக்கும்.
முகம் மலர்த்திப் பிள்ளைச் சூரியன் பிறப்பான்.
பனிநீராடிய மரங்கள் குங்குமப் பொலிவோடு சிரிக்க
இருள் விலகும்.
காணும் பொருளனைத்துக்கும்
யார்தான் காற்கொலுசு பூட்டுவாரோ?
எல்லாமே செல்லமாகச் சிணுங்கியபடி சிலிர்க்கும்.
மெல்லிய குளிரும் பூவாசமுமாக முற்றம் இருக்கும்.
கூடுவிட்டு விடுதலைப் பண்பாடி
விரித்த சிறகெடுத்துக் குருவிகள் வந்திறங்கும்.
வேலி விட்டிறங்கும் கோழிகள்.
வெறுந் தரையானாலும்
விளைந்த வயலானாலும்
அவை அழகு ஆயிரம் கோடிக்குத் தகும்.
ஏதோ உலக இயக்கமே தன்னசைவிற்தான் என்பதுபோல்
கோயில் மணிகளின் நாதம் காற்றிலிழையும்.
கோபுரப்பறவைகள் சிறகடித்துப் பறந்து
திரும்பவும் வந்து குந்தும்.
பூமி ருதுப்பெறும் பொழுதிதுதான்.
கட்டவிழ்த்த கறவை மாடுகள் மேய்ச்சலுக்குப் போகும்.
ஏரிநிமிர்த்தி வயலேகும் நாம்பன்கள்.

புத்தகச் சுமையோடு பள்ளிக்குச் செல்லும்
வண்ணத்துப் பூச்சிகளால் தெருக்கள் வடிவுபெறும்.
கலகலத்தோடும் அந்தச் சிறுநதிகளின்,
பிஞ்சுப் பாதங்கள் தொடும் வீதிகள்
புண்ணியம் செய்தன.
நகர்நோக்கிப் போகும் பேருந்துகள்
ஊரின் ஏகாந்த அமைதி குலைத்து ஏகும்.
வண்டில்கள் - தாளச்சுருதிக்குச் சரியாகக் குடக்கடித்து
கிடுகேற்றி வரும்.
இப்படித்தான் எத்தனை அழகோடு
இந்த மண்ணின் அந்த நாட்கள் இருந்தன.
நெஞ்சில் சுமையற்ற நிறைவுடன்
மண்ணுடன் இணைந்த வாழ்விலொரு மகிழ்விருந்தது.
தெருவிளக்குகளற்ற இருள் கவிந்த வீதிகளெனினும்
பயமற்றிருந்த பரவசம் எமக்கு.
அச்சமில்லாத வாழ்வின் அழகில்
எம் ஜீவிதத்துக்கு ஒரு அர்த்தம் இருந்தது.
மரங்களுடன் கூட இழைபிரியா உறவிருந்தது.
வேலையும் உழைப்புமாக பகலும்,
ஆடலும் பாடலுமாக இரவும்,
வருவதும் போவதும் அறியாமல் கழிந்ததெம் காலம்.
வெளியுலகம் விஞ்ஞானத்தைச் சுற்றிச் சுழன்றது.
எங்கள் வாழ்வு மட்டும் அதே அழகுடன்,
அதே எளிமையுடன்,
அதே பேரமைதிப் பொலிவுடன்
முகத்தில் இதழ்பிரியாச் சிரிப்புடனிருந்தது.
உலகெங்கும் ஊர்கள் இப்படித்தான் இருந்ததெனினும்
அழகிருந்தது எங்கள் பூமியிற்தான்.
எங்கள் முகத்திலும் வடுக்கள் இருந்தன.
கைகளிற் கறைகள் இருந்தன.
எங்கள் பக்கங்களிலும் இருண்ட பக்கங்கள் இருந்தன.
எல்லாமே இருந்தனதான்.
ஆயினும் எம் ஊர்களின் அழகிருக்கிறதே,
அது வார்த்தைகளால் வடிவமைக்கமுடியா
பேரெழிற்சிற்பம்.
கவிதைகளால் கட்டமைக்க முடியாத கட்டுமானம்.
ஒரு நாளெனினும் இங்கு வாழ்ந்தவர்களுக்கே
இதை உருவகமாக்கி உணர்த்த முடியம்.
வையப்பரப்பெங்கும் அகதிகளாக அலையும்

தேசபுத்திரர்களின் நரம்புகளைச் சுரண்டிப் பாருங்கள்.
அந்த உணர்வுக் கொப்பளிப்பில்
ஊரின் அழகே தெரியும்.
கால நிர்ப்பந்தத்தினால் அலையெற்றிய சருகாய்
எங்கெங்கோ கரையொதுங்கிய இதயங்களைக் கேளுங்கள்.
விழிக்கசிவுடன் வெளியே வழிவது
ஊரின் உன்னதங்களே.
நீரடித்துப் பிரியாத நீராய்,
தாயடித்து நோகாத சேயாய்
மறக்கமுடியுமா அந்த மகோன்னதமான நாட்களை?
இத்தனை அழகையும்தான்
அடித்து வாயிற்போட வந்தனர் அவர்கள்.
எல்லாவற்றையும் இல்லாதனவாக்கினர்.
சின்னக் கூடுகட்டி வாழ்ந்த ஜீவிதத்துக்கும்,
வண்ணம் கலையாதிருந்த எங்கள் வாழ்வுக்கும்
என்னதான் நடந்தது?
ஒரு விளக்கியெடுத்த குத்து விளக்குப் போல
கன்னம் குழிவிழச் சிரிக்கும் சின்னக் குழந்தையைப் போல
நிர்மலமாகக் கிடக்கும் நீலவான விதானத்தைப் போல
இருந்த வாழ்வைத்தானே இல்லாமற் செய்தனர்.
வேர்கருகிக் கிடக்கிறது விருட்சம்.
துக்கித்துக் கிடக்கிறதெம் சோபிதம்.
ஏர்கீறிய எங்களின் தாய்மடியை
இன்று யந்திரயானைகள் உழக்குகின்றன.
பழங்கள் மட்டும் விழுந்த பூமியின் மேனியில்
இன்று குண்டுகள் விழுந்து குழியாக்குகின்றன.
எந்நேரமும் எதுவும் நடக்கலாம்.
செவ்வந்திப் பூவாய் சிரிப்புப்பூ பூத்திருந்த தேசம்
கம்பிகளுக்குள்ளே இப்போ கண்ணீர் வடிக்கிறது.
கள்ளிச்செடிகளின் கையிடுக்குகளுக்கிடையே தான்
முல்லைப் பூக்களிப்போ மூச்சு விடுகின்றன.
குயிலிருந்து பாடிய கொம்புகளிலிருந்து
ஆந்தைகள் அலறுகின்றன.
சாக்காடாய்ப் போனது சந்தனப்பூமி.
நாமெல்லாம் தனித்தனி தீவுகளாகி
நிர்ப்பந்த நீர் சூழ்ந்துள்ளோம்.
எட்டாத்தொலைவில் எல்லா உறவுகளுமென்றாச்சு.
தும்மினாலே ஓடி வந்து பார்க்கும் சொந்தங்கள்
செத்தாலே வரமுடியாத தொலைவொன்றாச்சு.
எப்படிச் சிரிக்கும் எங்கள் முகங்கள்?

ஒப்பாரியும் எம்தேசமுமே இப்போது உறவாச்சு.
பனிவிழும் தேசங்களிலும்,
பாலைவனச் சுடுபுழுதியிலும்,
பூமிப்பந்தின் எல்லாப் புள்ளிகளிலும்
வகைதொகையின்றி வாழும் எம் சொந்தங்களே!
இனிக் கவலைகளை காய்ச்சிப் பாகுசெய்து
மதுரச்சுவையாக்கி மகிழ்வோம்.
என்றினிக் காண்போம் என்ற ஏக்கத்தைத் தொலைத்து
ஊர்திரும்ப நீங்களும் நாங்களும் உழைப்போம்.
வாழுமெம் தொப்பிள்கொடி உறவுகளே!
தாய்நிலத்தை மீளமைக்கும் பணிக்கு,
நாமிருக்கிறோம் என்ற உங்களின் குரல்கள்
வந்தெம் காதுரசும் போது
எத்தனை மகிழ்ச்சியாக இருக்கிறது.
சிறைப்பட்டிருக்கும் சிட்டுக்குருவிகளாய்
நாங்களிங்கு சிக்குண்டுள்ளோம்.
எனினும் விரைவில் விலங்குடைத்து
மீண்டும் சிறகு விரிப்போம்.
கூண்டுடைத்து வெளியே குதிப்போம்.
வசந்தம் வரும்
குயிலின் குக் கூச் சத்தம் அடிவளவு மாமரத்தில் எழும்.
முகம் திருத்திய முற்றத்து பூமரத்தின் பூக்கள்
குங்குமம் பூசிக் குதுகலிக்கும்.
நீங்கள் வருவீர்கள்
நீங்கள்; வந்திறங்கும் வாசலில் நாங்கள் வழிபார்த்திருப்போம்.
மீண்டும் இங்கே வசந்தத்தின் பூவாசம் வந்து
எம்மேனி தழுவும்.
பாட்டும் கூத்துமாக எம் பகலிரவு கழியும்.

□□

ஆனி, ஆடி 1999.



*எரிமலை வாசலில்*
*இருக்கின்றாய்*
*என்று நீ அறியாமல்*
*சிரிக்கின்றாய்.*

முன்னொரு காலத்தில்
பாசிபடர்ந்த பாழும் கிணறாய்,
தூசிபடிந்த தூண்டாமணி விளக்காய்
பெருவிதி இதுவெனப் பேசாதிருந்தது எம்தேசம்.
கைகட்டி, வாயும் பொத்தி,
மெய்யுமொடுங்கிக் கிடந்தது எம்மண்.
வருவோரெவரெனினும் வரிசையில் நின்று
வாழ்த்துப் பாடியது எம் வாசல்.
வெள்ளைக்காரனுக்கு வெள்ளாடை விரித்து
கல்லொழுங்கை எல்லாம் கைகுலுக்கிக்கொண்டன.
சிங்களவரிடம் எம் தேசம் கைமாறியபோதும்
அங்கிருந்து வந்த அனைவருக்கும் ஆராத்தி சுற்றியது.
தலைப்பாகை கட்டிய தலைவர்கள் எல்லோருக்கும்
நிலபாவாடை விரித்தது எம் நிலம்.
நேற்று, காண்டை பரவிய கருவேலங்காடு என்றவனே
இன்று, நோண்டிப்பார் தெரியும் முள்ளேறும் நோவு.
தூங்கித்தான் கிடந்ததெம் தேசம்.
துணிவின்றித்தான் இருந்ததெம் தோள்கள்.
ஏழில் செவ்வாய்,
ஏழரைச்சனியன்,
குருபார்வை வக்கிரமெனக் குறிப்பெழுதிய மண்ணை
நெருப்பென நிமிர வைத்தது ஒரு கைவிளக்கு.

சாவுப் பயத்தில் சன்னியே பிடித்திருந்த தேசத்துக்கு
பள்ளியெழுச்சி பாடினார் எம் பிள்ளைகள்.
புழுதி விளைச்சலெனக் கிடந்த தெருவை
எழுது புதுவிதியென எழுப்பினர் புலிகள்.
மலையென எழுந்தது எம்மண்.
பாம்படிக்கக்கூட பக்கத்து வீட்டானைக் கூப்பிட்டதேசம்.
கோழிதிருகக் கூலிக்கு ஆட்பிடித்த குலம்,
முட்டைபாவம்
முருங்காய் மச்சம்.
மட்டத்தேள் கூட மரியாதைக்குரிய உயிரென,
பயத்துக்கு பவ்வியமாகக் காரணங்களைக் கூறி
வேர்த்துக் கிடந்த தேசம்தான் இன்று விழித்துக் கொண்டது.
எமக்குள்ளே ஆயிரம் பிரிவுகள்.
எமக்குள்ளே ஆயிரம் பேதங்கள்.
ஒன்றாக முடியாதவாறு உருவகித்த கற்பிதங்கள்.
இன்று எல்லாமே இற்று விழுந்தன.
காலத்துக்கொவ்வாதன கரையொதுங்க
நுங்கும் நுரையுமாகப் பொங்கிப் பாய்கிறது
எங்கள் கங்கை.
இது விடுதலை அவாவிய வேகநதி.
எம் தாயகம் கிட்டும்போதே இனித்தணியும்.
சங்கமிக்கச் சம்மதிக்கும்.
அதுவரையும் பாயும்..... அடங்காது.
யாரும் தடுத்து அணைபோட நினைத்தால்,
அணையை மட்டுமல்ல,
அணைபோட நினைக்கும் 'எஞ்சினியர்களையும்'
அள்ளிச் செல்லும்.
இத்தனை வேகம் ஏன் வந்தது?
புரண்டோடும் கங்கையின் நதிமூலம் என்ன?
தருவதைத் தாருங்கள் எடுத்துக்கொள்வோமென
ஐம்பதில் கேட்டது எம்மண்.
சேனநாயக்காவுக்கு குதிரையேறிய செருக்கு
காதில் விழவில்லை.
ஒரு நாடு இரு ஆட்சி இது போதுமென
அறுபதில் கேட்டது எம் தேசம்.
பண்டாரநாயக்காவுக்கும் கண்டியத் திமிர்
காதில் விழவில்லை.
எல்லாப் பாவங்களையும் தலையிற் சுமந்தபடி,
இன்று தள்ளு வண்டியிற் சஞ்சரிக்கும் சிறிமாவிடமும்

சேர்ந்து வாழ முடியுமென்றே சொன்னது எம் தேசம்.
இளமை மிடுக்காலும், இதிகாசப் பெருமையாலும்
ஆச்சிக்கும் அன்று காதில் விழவில்லை.
சண்டைக்குத் தயாரா? என்று வந்தார் ஜே. ஆர்.
இன்று வரை நீளும் சமருக்கு இவர்தான் பதியம் போட்டவர்.
இவருக்கு மூக்கு மட்டும் மூன்றடி.
காதுகளைக் கணக்கிலெடுக்கவில்லை.
பின்னர் பிரேமதாசா.
இன்று சந்திரிக்கா.
கையேந்திய போதே தந்திருந்தால்
ஈழத்தமிழனின் இன்றும் நன்றியுடனிருந்திருப்பான்.
எல்லோருக்கும் தமிழனென்றால் இளக்காரம்.
சிங்களத் திமிர்.
ஆளுவோரென்ற மமதை.
தமிழன் சாக்கடை அள்ளவந்தோனென்ற எகத்தாளம்.
பயந்தவன் தமிழனெனும் படிமம்.
கொழுப்புப் பிடித்து கொழும்பு குதிக்கத் தொடங்கியதும்
எமக்குள்ளும் விழிப்புக் கொண்டது விடுதலையுணர்வு.
நாலு பேருடன் வந்து உன்னாலன்று
யாழ்ப்பாணத்தையே எரித்துப் போக முடிந்தது.
நாற்பதினாயிரமாய் வந்து வன்னியில் நிற்கிறாய்.
உள்ளே வர உன்னால் முடியவில்லையே.
இன்றுதான் தமிழர் தமிழராயினர்.
இன்றுதான் தமிழர் புலிகளாயினர்.
சந்திரிக்கா;
நேற்று வரை நிவாரண வரிசையிலும்
காட்டு மரத்தின் கீழும்
போட்டது போட்டபடி கிடந்த தமிழனை
போருக்கெழவைத்த புண்ணியவதி.
அடுப்பிலும் நெருப்பிலும் வெந்து
உரலும் உலக்கையுமாக இருந்த தமிழச்சியை
ஆயுதமேந்தச் செய்த அம்மை.
வேட்டைத் துவக்குக்கே வெருண்டடித்த தமிழரை
"ஏகே நற்பத்தேழு" ஏந்த வைத்த பெருமாட்டி.
ஆயிரமாயிரம் வருடங்களுக்குப் பின்னர்
மீண்டுமொரு குருசேத்திரம்.
இழந்ததை மீட்கும் யுத்தம்.
தர்மப்போருக்கு வன்னி தயாராகிவிட்டது.
ஊரெங்கும் உலைமுகங்கள் மூட்டி
அங்கெல்லாம் ஆயுதங்களின் அணிவகுப்பு.

வேறு வடிவில்
வேறு பெயரில் தருமன்,
வேறு வடிவிலும்,
வேறு பெயரிலும்
பெருவாரியான தளகர்த்தர்கள்.
மகா ரதர்களுக்குப் பின்னே மக்கள் சேனை.
அஸ்திரப் பயிற்சி முடிந்ததும் அணிவகுப்பு.
காதல் மொழிகள் வழக்கொழிந்து போக
களமொழிகளே இப்போது காதில் விழுகிறது.
கணவன் மனைவியின் கட்டில் மொழி கூட
போரின் மொழியானது எம் பூமியில்.
சாதி மறந்தார்.
மதம் மறந்தார்.
சாத்திரம் கோத்திரம் யாவும் மறந்தார்.
ஆணா? பெண்ணா? எல்லோரும் ஒரு நிறை.
ஏழையா? பணக்காரனா?
எல்லோரும் ஒரு விலை.
அலையடிக்கும் கடலாய் ஆர்ப்பரிக்கிறது
தமிழர் படை.
"எண்ணித்துணிக கருமம் துணிந்த பின்
எண்ணுவதென்பது இழுக்கு."
வன்னிக்கானது இந்த வள்ளுவ வாக்கு.
பீறிட்டெழும் பூகம்ப வாசலென்றறியாது
எரிமலைச் சிகரமேறி எக்காள மிட்டபடி
அகலக்கால் பரத்தி நிற்கிறது ஆணவம்.
சுற்றி வேலியிட்டேன் என்ற இறுமாப்பில்
துருதுருக்கிறது ஆதிக்கம்.
விரைவில்
வெடித்துப் பிளம்பாகி வெளிவரும் நெருப்புக் குழம்பு
இடியும் மழையுமாகப் பொழியும் எம் மேகம்.
வாரியடித்துப் போகும் வல்லமை வெள்ளத்தில்
பாறிச் சரிந்துவிழும் பகைச்சேனை.
"மீண்டும் தொடங்கும் மிடுக்கோடு"
பாடி நகரும் புலிச்சேனை.
காலிற் துகள்படும் சருகாய்
மிதிபட்டழியும் முள்வேலி



ஆவணி , புரட்டாதி 1999.



## சாவரினும் தளரோம்
## யார்வரினும் பணியோம்
## வெந்துதணியாது வீரநிலம்.

கார்த்திகை மாதம் வேர்த்தறியாக் காலம்.
மேகமுந்தானை விலக்கி
வானத்தாய் பூமிக்குப் பால் கொடுப்பாள்,
வேர்கள் விருட்சத்துக்கு விருந்தளிக்கும்.
நீரும் நிலமும் கலந்திளகி
பூமிப்பெண் புத்தாடை புனைவாள்
ஆயிரம் கண் வேண்டும் அதைக்காண.
ஊரின் ஒழுங்கையெங்கும்
வாரடித்தோடும் வெள்ளம் வரைகின்ற
நீரரித்த கோடுகளில் பாதம்பதிக்க
உச்சிகுளிர்ந்து உருகும்.
மருதானி போட்ட அழகான விரலாய்
மண்கிழித்தெழும் காளான்மடை.
பூனை மேனிப் புசுபுசுப்பாய்
சின்னக் குடைவிரித்து சிரிக்கும்.
கூரைவழியும் நீர்த்தாரை பார்த்து
திண்ணை மீதிருந்து திளைப்பதில்
என்ன ஆனந்தம்.
மனசில் பூ பரவிப்போகும் இந்த மாதம்.
வீரத்தைக் கொண்டே விரல் மடிப்பதெனில்
கார்த்திகை மாதமே எமக்குக் கண்திறந்த மாதம்.

ஈழத் தமிழருக்கு இருநூறு கைமுளைத்ததும்,
ஈழத்தமிழரை கூரியவேல் துளைத்ததும்
இந்த மாதத்திற் தான்.
தமிழரை மீண்டும் தமிழரென்றாக்க
முதல் நாள் பிள்ளையொன்று விழி திறந்தது.
தமிழரின் நெஞ்சில் இடிசொருகிவிட்டு
மறுநாள் பிள்ளையொன்று விழிமூடியது.
ஆண்டுகள் வேறாயினும் தேதிகள் அருகருகாயின.
இது தற்செயலான சம்பவம் அல்ல
ஒரு சரித்திரமான அதிசயம்.
கார்த்திகை 27 மாவீரர் நாள்.
சாவிலும் மானம் பெரிதென்று சாற்றிய நாள்.
ஈழத்தமிழர் இழிந்திருக்க மாட்டோமென
ஆளும் கதிரைகளுக்கு அறிவித்த நாள்.
கூண்டிருக்க இனி விரும்போமென
நீண்டகாலத்தின் பின் நிறுவிய நாள்.
சிறகெடுத்துப் பறந்த சிட்டுக்குருவிகளின்
தீபத் திருநாள்.
ஊனக்கனவேதுமற்ற ஞானத்துறவிகளின்
உயிர்த்த நாள்.
தேசத்தை மட்டும் ஆராதிக்க தெரிந்தவரின்
வாசம் பரவும் அந்த வாசல்.
மெழுகாய் விழியுருக,
மெய் விதிர்க்க,
அழுவோரயும், தொழுவோரயும்
பூக்கொண்டு போவோம் அந்தப் புனிதரிடம்.
நெஞ்சுருக, நெஞ்சுருக நெய்விளக்கேற்றி
கல்லறை முன்நின்று கரைவோம்.
ஒருதரமேனும் விழிமலருங்கள் என்று உருகுவோம்.
பூச்சொரிந்து அவர் பாதம் பூசிப்போம்.
வல்லமை தாருங்களென வரம் கேட்போம்.
வில்லாண்ட வீரத்தின் ஒரு துகளை
வெளியே எறியுங்களென வேண்டுவோம்.
நதியாக் குதித்தேடிய நாட்களும்,
பூவாய்ச் சிரித்திருந்த பொழுதுகளும்
நினைவிருக்கா? எனக் கெஞ்சுவோம்.
உள்ளே வேர்பிடித்திருக்குமா உங்களுக்கென
காதோடுரசிக் கேட்போம்.
கல்லறைக்குள்ளே கண்மலரும்.

மேனி அசையும்.
மெல்லச் சிரிக்கும் ஒலி உள்ளே கேட்கும்.
கல்லறைக் கதவுகள் விரிய
பிள்ளைமுகம் காண்பாள் பெற்றவள்.
“அம்மா” என்றோர் அசரீரி
அவளுக்கு மட்டும் கேட்கும்.
“அப்பா” என்றோர் குரல்
அவருக்கு மட்டும்தான் கேட்கும்.
தோழனே! என்ற அழைப்பு மட்டும்
துயிலுமில்லம் எங்கும் கேட்கும்.
தோழியே! என்ற குரல் மட்டும்
திசையெங்கும் எதிரொலிக்கும்.
குரல் கேட்டதும்
அந்தக் குளிரிலும் வேர்த்துக் குளிப்போம்.
சில்லிட்டுப் போகுமெம் ஜீவன்.
புதைக்கவில்லை விதைத்தோமென்ற
பொருளுணர்ந்து பெருகும் எம் விழிகள்.
உள்ளே கொதிப்புறும் குருதி.
சுடரும் விளக்கொளியில் மேனி சூடேறும்.
ஓவென்றிரையும் ஊதற்காற்று.
வானம் இருள்விலத்தி வழிவிட
தூரத்தில் தெரியும் விடிவெள்ளி.
பிரிய மனமின்றிப் பிரிவோம்.
மாவீரரே!
நடுகல்லாகி விட்ட நந்தா விளக்குகளே!
விடுதலைக்கு நீர்தந்த விலை அதிகம்.
உரிமைக்கான போரில் உயிர்கொடுத்தலே
பெரியபேறு.
கவிதை எழுதுதல் காற்தூசு,
கண்ணீர் விடுதலும் கையளவே.
மண்ணுக்காக மரணிப்பதே மாதவம்.
ஒன்று மட்டும் உறுதி.
இனியுமெம் தேசம் படுக்காது.
குனிந்தெவருக்கும் குற்றேவல் செய்யாது.
தேவநிலை வந்தெய்தினும்
தாயகக் காதல்மட்டும் தணியாது.
சாவரினும் தளரோம் இது சத்தியம்.
யார்வரினும் பணியோம் இது சத்தியம்.

போரெடுத்தோம் வெல்வோம் இது சத்தியம்.
வெந்து தணியாது இந்த வீரநிலம்.
பகையுழுது போகலாம் உங்கள் படுக்கைகளை.
தகையழிந்து போகுமோ சந்தனக்காடுகள்?
வேரறுந்து வீழுமோ விடுதலை?
ஊரெரிந்தும், உயிர் பிரிந்தும் போகலாம்.
பிரியும் நொடியிலும் உம்மையே பேசும் எம்வாய்.
விரியும் மலரிலும் தெரியும் உம் முகம்.
உமக்கருகில் எமக்கும் வேண்டும் ஓர்குழி.
உறவுகள் வந்து விளக்கேற்ற
உள்ளே இருந்து நாமும் சிரிப்போம் ஓர்நாள்.
அதுவரை ஓயாது எம் அலைகள்.
எத்தனை புயல்களும் எழுந்து வீசட்டும்.
சித்தம் கலங்கிச் சிதறோம்.
எத்தனை துயரெனினும் அழுத்தட்டும்.
அத்தனை வரிப்புகளையும் ஆனந்தமாக்குவோம்.
விடுதலை எங்களின் பேச்சு.
விடுதலை எங்களின் மூச்சு.
விடுதலை நெஞ்சிற் பதியம்போட்ட நாற்று.

மொழியாகி எங்கள் மூச்சாகி நாளை
முடிசூடும் தமிழ் மீது உறுதி
வழிகாட்டி எம்மை உருவாக்கும் தலைவன்
வரலாறு மீதிலும் உறுதி.
விழிமூடி இங்கே துயில்கின்ற வேங்கை
வீரர்கள் மீதிலும் உறுதி.
இழிவாக வாழோம் தமிழீழப் போரில்
இனிமேலும் ஓயோம் உறுதி.

□□

ஐப்பசி , கார்த்திகை 1999.





# இனிவரும் நாட்கள் எமக்கானவை.

பனைமரமே! நீ நலமா?
பக்கத்தே கிளை பரத்தி
நிழல் விழுத்தி நிற்கும் பூவரசும் சுகம் தானா?
வளவெங்கும் பூத்து வாசலிலும் பூச்சொரியும்
வேப்பமரம் சுகமா?
விடிபொழுதில் வந்திறங்கும்
காக்கை நலமா?
கருக்குருவி,
புலுனி,
புறா,
யாவும் சுகம் தானா?
நானிருந்தபோது வந்து
கூவும்குயில் நலமா? கூரையிலே கூடுகட்டி
கன்னற் குரலாலென் காதினிலே தேன்சொரிந்த
வண்ணக் குருவியின்னும் வாழ்கிறதா என்வீட்டில்
எல்லாம் உளதா? ஏதேனும் குறைகிறதா?
வதையுண்டு போகும் வாழ்வாமே,
சிலையழகு
சிதையுண்டு போகச் சிறையாமே,
ஊர் முழுதும் முள்ளாம்,
முகமூடி முகத்தணிந்த பேயாமே.

நள்ளிரவில் கேட்கிறதாம் நாயோலம்.
நாம் திரிந்த
நெல்லு வயலெங்கும் நெருஞ்சிப்பூ பூத்துளதாம்.
சாகும் பொழுதெந்தன் தாய் வீட்டில் சாகேனோ?
வேகும் பொழுதென்னூர் வெளிச்சுடலை வேகேனோ?
தவழ்ந்த மடிமீதும்,
தாங்கியவூர் தோள் மீதும்
குழந்தைப் பருவத்தே குதித்தெழுந்த மண்மீதும்
மீண்டும் உலவ மிக ஆசை,
தடைகளெல்லாம்,
தாண்டிவருவேன் தாய்மடியை நான் தொடுவேன்.
மணிக்கதவும் திறந்துவை.
வருகிறது ராஜகுதிரை.
வாசலில் முள்பரத்தி நிற்கும் அந்நியசேவகனுக்கு
தொலைந்தாயெனச் சொல்லிவை.
ஊரெல்லை வரை நகர்ந்துளது பிள்ளைகளின் தேர்.
இனி உள்ளே புகும்.
புத்தாயிரத்தின் புலரிப்பொழுது நமக்கானது.
ஏறிவந்த எதிரியை மட்டுமல்ல,
எடுத்து வைத்த சுவடுகளையும் சிதைத்து விட்டு
இறுமாப்பில் உள்ளோம் நாம்.
"தமிழீழம்" ஒருகனவு என்றனர் சிலர்.
ஒரு கற்பிதம் என்றனர் சிலர்.
ஈழத்தமிழர் சேவகத்துக்கே உரியர்
திமிர்ந்த செருக்குக்குத் திறனற்றோர் என்றனர் சிலர்.
பூப்பறிக்கும் கைகளில் போர்க் கருவிகளா?
கூடாதென்றனர் சிலர்.
தேக்குமரக் காட்டிடையே தீக்குளியலா?
பற்றி எரியப்போகுதெனப் பதறினர் சிலர்.
"சிறுபிள்ளை வேளாண்மை" எனச் சீண்டினர் சிலர்.
எல்லாமே காற்றிலேறிய சருகெனக் கலைந்தன.
ஓயாத அலை மூன்று உச்சத்தின் உச்சம்.
முகிலுரசிப் போன முகடு.
சாயாதெம் தலையெனச் சாற்றிய பட்டம்.
பாயும் புலிவீரத்தின் பாதத்துக்கடியில்
சாய்ந்து கிடக்கிறது பகைவனின் செருக்கு.
சந்தோசக் காற்று தலை தடவிப்போக,
செந்தூரப் பூவின் சிலிர்ப்பாய்
மந்தாரம் போட்டுள்ளது எம் வாசல்.

புத்தாயிரப் பெண்ணே!
கலீர்கலீரென உன் காற்சிலம்பு சப்திக்க
எம் வாசலில் வந்து ஏறினாய்.
உலகெங்கும் உனக்கு உற்சாக வரவேற்பாம்
பூரித்தே போனாயாம்.
என்னதர இயலும் எம்மால்?
இது ஈழவாசல்,
இல்லை, இல்லை ஏழைவாசல்.
கஞ்சிக்கும் வழியற்றிருக்கும் கதவையும் தட்டினாய்
சந்தோஷம்.
குசேலரின் அவல் கொண்ட முடிச்சாய்
ஏதோ படைத்தோம் ஏற்றுக்கொண்டாய்.
1.1.2000 ஒரு சனிக்கிழமையாய் விடிந்தது.
U.N.H.C.R கூரையூடுதான் எமக்குச் சூரியதரிசனம்.
அடுப்பேற்றாவிடினும்
பழக்கதோசத்தால் பாத்திரம் கழுவியது கை.
சேறும் சகதியுமான தெருவில் நடந்தன கால்கள்.
நிவாரணத்துக்கும், மருந்துக்குமென
நீண்டிருந்தது வரிசை.
நீதான் என் இலக்கெனக் கூவி
தலைதடவிப் போனது எறிகணை.
குண்டு வீழ்ந்ததாய்க் கூறி
கொண்டு வந்தனர் சிலரைக் கூட்டியள்ளி.
நிலம் விழுங்கிகளின் சுவடு பார்த்து
காவலரண்களில் விழித்திருந்தனர் பிள்ளைகள்.
வழமைபோல் சாவும்,
வழமைபோல் யாவும்,
வழமைபோல் நாமும்,
வேறென்ன விளங்கியது எம் வாசல்?
எனினும் தளர்ந்தோமா நாம்?
இல்லை.
எமக்கானவள் நீயெனும் உரிமத்தில்
உன்னை வணங்கினோம்.
புத்தாயிரப் பொன்மகளே!
இனிவரும் நாட்கள் எமக்கானவை.
காற்றெமக்குச் சாமரம் வீசும்,
கடலெமக்கு கால்களைக் கழுவும்,
நிலவே எமக்கினி நெற்றித் திலகம்,
சூரியன் சேவகனாவான்.

வெற்றிகள் மட்டுமல்ல... விடுதலையும் எம் வாசல் வரும்.
சாமம் கழிந்து போகும் இந்தப் பொழுதே
சந்தோக்ஷ நேரம்.
எங்கோ தூரத்தில் கேட்கும் இரவுப்பூச்சிகளின் ரீங்காரம்.
கல்லுக்கடியிலிருந்து கத்தும்
தவளை ஒன்றின் தனித்த குரல்.
கிளை அசைய இலைகளின் கை தட்டல்.
பூவுரசலாகத் தழுவும் மெல்லிய குளிர்.
எம் ஊர்முற்றத்தில் படியும் இதமான ஈரம்.
இவற்றோடு வரும் வைகறைப் பொழுதொன்றில்,
விரைவில் நகரும் புலிகளின் ரதங்கள்
எம் ஊர்களை நோக்கி.
வீதியெங்கும் நின்று விலாசம் கேட்கிறானாமே ஒருவன்.
காவலரண்களில் நின்று கையைப் பிடிக்கின்றானாமே.
நள்ளிரவில் வந்து தூக்கிச் செல்கிறார்களாமே நாலுபேர்.
சொல்லி வையுங்கள்.
ராஜகுதிரை புறப்பட்டு வருகிறதென்று.

குன்றென நிமிர்ந்த தோளும்
குடிவழி சிறந்த வாழ்வும்
வென்றிடும் நிமிர்ந்த வீறும்
வெஞ்சமர் ஆடும் தேரும்
பஞ்செனப் பகையை அள்ளிப்
பறந்திட வைக்கும் நெஞ்சும்
கொண்டவர் தமிழரென்று
குறித்திடு புது நூற்றாண்டே.

□□

தை, மாசி 2000.





# அழுத வாழ்வு முடிந்ததென
# எழுத வருகிறது காற்று.

பிரபஞ்சத்தின் மொத்த அழகையும்
எம் முற்றத்தில் பரவி வைத்திருந்தோம்.
சாளரங்கள் திறந்து எம்வாசல் எங்கும்
சோபனங்கள் விதைத்திருந்தோம்.
சந்தோஷப் பொடியைச் சந்தனமாக்கி
எங்கள் தாழ்வாரத்தில் தடவியிருந்தோம்.
குச்சொழுங்கையெல்லாம் குதூகலிக்க
காலைக்கும், மாலைக்கும் காற்கொலுசு பூட்டியிருந்தோம்.
தெருவெங்கும் தில்லானா,
வயலெங்கும் ஜல தரங்கம்.
தன்னழகில் தானே லயித்துப்போய்
எம் வாசற் பூக்கள் எத்தனை வடிவாய் இருந்தன.
ஊரையடித்து உலையிற் போடவென
வந்தாய் நீ.
குருதிவடியும் கடைவாய்யோடு,
எம் தெருவில் இறங்கினாய்.
காற்றில் விஷப்பொடி தூவி மூக்கில் நுழைந்தாய்.
பூக்களின் மீது அமிலதாரை பூசினாய்.
முற்றமெங்கும் முள்ளாய் பரவினாய்.
ஓநாய் என வந்து கதறக்கதற
எம் உறவுகளை பிடித்தேகி,

ஆட்காட்டியின் அவலக்குரலிடையே
செம்மணியில் புதைத்தாய்.
முகைவெடியா மொட்டுகளைக் கூட
பிடுங்கியெடுத்துப் பிச்செறிந்தாய்.
பூசையிற்கூடப் புகுந்து
வாசலில் வந்தென்னை வணங்கென்றாய்.
தெருநடுவே தாயின் துகிலுரிந்து
கற்றைக் குழல் திருகி கதற வைத்தாய்.
நெற்றித் திலகமதை நீயழித்தாய்.
ஆறு மணியுடன் அடங்கிப் போவென
எம் தெருவில் நின்று எமக்கே ஆணையிட்டாய்.
வீதியேறி நீ வரும் வேளையில்
சிரிப்பாய்,
நாங்களும் சிரிக்க வேண்டும்.
கதைப்பாய்,
நாங்களும் கதைக்கவேண்டும்.
தினமும் உள்ளெரிந்தபடி
உன் "சென்ரி" கடப்போம்
உடல் தொட்டுச் சோதிப்பாய்.
அழுதபடி நெளிவதன்றி வேறென்ன இயலும்?
தினமும் துச்சாதனர் துகிலுரிய
வெந்துபோனோம்.
சந்தோசம் தொலைந்து ஐந்து வருடங்கள்.
கணக்கெழுதிக் கணக்கெழுதிக் காத்திருந்தோம்.
கொப்பளித்த கோபத்தின் குறிப்பெழுதி
தீயிற் குளித்திருந்தது எம்தேசம்.
உன்னைப் பார்த்து புன்னகைத்தோம்
உண்மை தான்.
அது சிரிப்பல்ல தீயின் மூச்சு.
உன்னைப் பார்த்து கையசைத்தோம்.
மறுக்கவில்லை.
அது நட்பல்ல கோபத்தின் குறியீடு.
வன்னிவாசல் திறக்கும் வரை
நாங்களெடுத்த தவமிது.
உயிர்வாழ நாம் தரித்த கவசம்.
தோளிற்சுமந்த பாரச்சிலுவை.
பிள்ளைகள் வரும்வரை.
புனைந்திருந்த ஒப்பனை.
ஒப்பனையை உண்மையென நம்பி

நீ தான் தப்புக்கணக்கிட்டாய்.
உள்ளிருந்த கவசத்தை உற்றுப்பாராது.
வெளியிருந்த உத்தரியத்தின் அழகில்
உன் முடிதரித்த தலை தவறிழைத்தது.
இன்று அகழிகள் நிரவிப் பாலமிட்டு
காலம் கதவுகளைத் திறந்தது.
ஆயிரம் கரங்கள் எடுத்தடித்து
மூசிமூசி முன்னேறுகிறது ஓயாத அலை.
அணையுடைத்து உள்ளே நுழைந்து
இழந்தவை மீட்டு இரைகிறது கடல்.
இன்றும் கடலே எமக்கு கைகொடுக்கிறது.
கடல்தாயே! உன்னைக் கைதொழுதோம்.
தேவ மகளே! உன்னைத் தோத்தரித்தோம்.
மீட்பது நிலமாயினும்
உன் மடியேறியே முன்னேறுகின்றோம்.
உள்ளங் கையில் வைத்து ஊதித்தள்ள
உமித் துகளல்லத் தமிழர்.
பெருக்கெடுத்த நதியின் பிரவாகம்.
வீரியமிக்க விடிகாலைப் பொழுதில்
தேருருண்டு வருகிறது.
ஊரெல்லை மீறி உள்ளே வரும் ரதங்களில்
சாரதி ஆசனங்களில் தளபதிகள்.
திவ்ய அஸ்திரங்களுடன் மகாரதர்கள்.
அருகாக அணிவகுத்துள்ளன அதிரதர்சேனை.
சக்கர வியூகம் அமைத்துள்ளான் தலைவன்.
நீ வியூகம் கிழித்து வெளியேறாதவாறு
தர்மம் தலைவாசலில் காவலிருக்கிறது.
கொற்றத்தேவி!
கொலுவிருந்தது போதுமடி.
உன் காலின் சிலம்பு கலீர் கலீரென
கோடி விழி திறந்து கூத்திடடி.
வென்றனர் பிள்ளைகள்.
பூட்டிய இரும்புக் கதவுகள் உடைந்து
வாசல் திறந்து.
எம் மானத்துக்குரித்தான மகுடத்தை
ஆனையிறவில் எடுத்துத்தரித்தோம்.
முன்னர் ஆனையிறவென்றாலே அச்சம்.
பஸ்சில் வரும்போது ஒருபயம்.
தமிழரின் குருதியால் வர்ணம் பூசப்பட்டது
அந்த வதைமுகாம்.

தமிழர் தமிழராக இல்லாமல்
அடிமையாகக் கிடந்த காலமே அதிகம்.
உதயத்தின் கதிர்கள் முகத்தில் அடிக்கிறது
இனியெமக்கு உச்சிக்காலம்.
ஆனையிறவின் மீதுலவும் உப்புக்காற்றே
உன் வருடலுக்காகவே உயிர்வாழ்ந்தோம்.
தாயே? நீயெம்மைத்தழுவி
எத்தனை வருடங்களாயின?
ஓடிவந்து எம்மை ஆலிங்கனம் செய்க.
உப்பளக்காற்றே!
உனக்கு அதிகவிலை கொடுத்தோம்.
வன்னியில் அடைவைத்துப் பொரித்த குஞ்சுகளுடன்
தாய்க்கோழி தலை நிமிர்ந்து வருகிறது.
வெண்ணிறப் புரவியேறி
பிள்ளைகளே விரைந்து வருக.
கண்ணிலொற்ற உம் காற்தடங்கள் வேண்டும்.
கூண்டைத் திறந்து குதிக்கிறது
சுதந்திரத்தின் சுவாசக்காற்று.
காண்டீபத்தின் நாணொலி கேட்கிறது.
பகையே! உன் தலைகிள்ளிப் போக
வருகிறது நாகாஸ்திரம்.
வீதியுள சோதனைச் சாவடிகளே!
சேதியறிந்து ஏதுசெய்யப் போவீர்?
நில்லென எம்மை நிறுத்தி நிகழ்த்திய கூத்துகளுக்கு
பிள்ளைகள் தீர்ப்பெழுத வருகின்றனர்.
அழுத வாழ்வு முடிந்ததென
எழுத வருகிறது காற்று.
துயருற்ற வாழ்வு தொலைந்ததென
வந்து பாடுகிறது வசந்தக்குயில்.
கவிதை நமக்கெனக் கையளித்து
காலம் நடக்கிறது கைவீசி.
துயிலுமில்லம் உழுதவனே!
தொலைந்தாயடா.



□□

வைகாசி , ஆனி 2000.



# வாழும் நாடுகளில் நின்றவாறு வல்லமை தருவீர்.

வைகறையில் ருதுவுறும் வாசல் மரமாய்,
சௌந்தர்யம் தழுவி
எம் வாழ்விருந்தது அன்று.
கையணைப்பில் கசிந்தது உறவு.
சொந்தம் முழுமையும் சந்தித்துத் திரும்ப
ஒருபகலும், ஒரு சைக்கிலும்போதும்.
அடைக்கோழி மடியாய் ஜீவிதம் அருகிருந்தது.
இழவு வீடெனில் ஊரே கூடியிருந்து இரங்கும்.
உறவுகள் கதறும்.
செத்தது பாவனையற்றிருந்த பழசெனினும்
கத்தியழுது கண்ணீர்விடும் இரத்த நூலிழை.
மச்சாளின் கொலுசுச் சத்தத்தையே
செவிக்குள் பொத்தி
உயிரிழை பின்னுவான் மச்சான்.
மச்சானின் கைபட்ட மண்வெட்டியை
கைதொட்டுக் கண்ணிலொற்றுவாள் மச்சாள்.
ஒன்றுக்குள் ஒன்றான உறவுக்குள்ளே
ஊரெங்கும் ஆனந்தம் பூத்துக் கிடந்தது.
எல்லாமும் இன்று மாயக்கண்ணாடிபோல மறைந்து விட்டது.
ஒட்டிக்கொள்ளும் பசையற்ற உறவாக
திசைக்கொன்றாய் சிலும்பிப்போனது வாழ்வு.

யாழ்ப்பாணம் வேரிழுத்துக்கொண்டு வெளியேறி விட்டது.
சில அல்லிவேர்கள் மட்டும் அங்கு ஆடுகின்றன.
வன்னியில் மட்டும் என்னவாம்?
அவலமும், அந்தரிப்புமாக ஆசுவாசமற்ற அகாலம்.
பேருக்குமட்டும் புரங்களும், குளங்களும்
ஊரெதுவும் ஊராக இல்லை.
மன்னார் என்ன?
மட்டக்களப்பு என்ன?
திருமலையென்ன? தீவகம் என்ன?
எல்லாமே சாக்குருவிப் பாடலுடன்தான் சயனம்.
சரியான வடிவத்தில் எந்தச் சரீரமும் இல்லை.
தலையிருக்குமிடத்தில் காலும்,
காலிருக்குமிடத்தில் தலையுமாக
கண்டதுண்டமாகக் கிடக்கிறது தேசத்தின் நாளாந்தம்.
வயல் வரம்பில் நடந்த வாழ்வும்,
நிலவொளியில் கிடந்த மகிழ்வும்,
எம்மைப் பிரிந்து எத்தனை வருடங்கள்?
உறவுகள் ஒவ்வொன்றாய் வற்றிக் காய்ந்து கிடக்கின்றது
எங்கள் விழுதெறிந்த கொடியின் வாய்க்கால்.
ஆலமரமும், ஐயனார் கோவிலும்,
கோல உடையும் கூத்துமாக கிடந்த வாழ்வை
வேரறுத்து வீசியெறிந்து விட்டனர்.
தொன்மைக்குடிகளின் தொண்டையிற் சுருக்கிட்டு
லாலா நாட்டு ராசாக்களின் வம்சம்
சந்தோசிக்கிறது.
இந்த மண்ணின் புழுதிபடிந்த சொந்த மக்களை
வந்த குடியின் வம்சம் வறுத்தெடுக்கிறது.
இரவு வந்தேறி ஊரை வளைத்து,
அதிகாலையானதும் குரல்வளை நெரித்து,
கொண்டேகிய மரநாய்களுக்கு அஞ்சி
குஞ்சுகளைத் தூரமரங்களுக்குத் துரத்தினோம்.
குண்டதிர்வில் குடல் கிழிந்தன போக
எஞ்சினவும் எங்கெங்கோ போயிறங்கின.
தாய்மடியின் சூடின்னும் அகலாச் சந்ததியே!
புலம் பெயர்ந்துபோன பிள்ளைகளே!
சமுத்திரங்களைக் கடந்து,
நீண்ட நிலப்பரப்புக்களைக் கடந்து,
தாண்டிப்போய் எங்கெங்கோ தஞ்சமடைந்துள்ளீர்.

ஆணிவேரை நீங்கள் அறுத்தவரல்லர்.
நாங்கள்தான் உம்மை அனுப்பி வைத்தோம்.
நீங்கள் சிறகெடுக்க விருப்பமற்றிருந்தீர்.
நாங்கள் தான் தாலிவிற்று,
தாய்க்காணி ஈடுவைத்து,
போவீரென உலுப்பிப் போகவைத்தோம்.
"அன்னைமடிவிட்டு அகலேன்" என
நீங்கள் அடம்பிடித்த போதும்
"சொன்னதைக் கேள் மகனே" என்று
துரத்தி வைத்தவர் நாங்கள்தான்.
கையசைத்துப் படலை தாண்டியபோதும்,
கண்ணீர் வடித்தீர்.
"விருப்பமில்லையம்மா போக" என விம்மினீர்.
அந்தரித்துப் போவோமென அறிந்தும்
அவர்களாவது வாழட்டுமென அனுப்பினோம்.
நீங்கள் போன பின்பும் ஊர்கள் எரிந்தன.
உறவுகள் பிரிந்தன.
மண்கொள்ளையாக மரணங்கள் நிகழ்ந்தன.
எமனுடனான யுத்தம் இன்னும் தொடர்கிறது.
எம்மைக் காக்கவும்,
எமக்காகப் போரிடவும் இந்திரஜித்துக்கள் பிறக்கின்றனர்.
அபிமன்யுக்கள் அவதரிக்கின்றனர்.
கொல்லவருவோரைக் கொல்வோமென
சடாயுவின் சந்ததி சத்தியம் செய்துள்ளது.
அர்ச்சுனன் அவதரித்துள்ளான்.
எதுவரினும் தளரேனென
பீஷ்மன் காலத்தைக் கடந்தும் காத்திருக்கின்றான்.
சதுரங்க காய்களை நகர்த்தியவாறு
மீண்டும் இளமை மிடுக்கோடு "பிரம்மஞானி".
சங்கிலி மன்னனது தலைப்பாகை கிடைத்துள்து:
பண்டாரவன்னியனின் பட்டுக்குடையும், பாதக்குறடும்
கண்டெடுத்து விட்டோம்.
நந்திக்கடலில் குருவிச்சி நாச்சியாரின்
காற்சிலம்பு கிட்டிற்று.
ஆனையடக்கிய அரியாத்தை மீண்டும் பிறந்துள்ளாள்.
இழந்த அனைத்தும் எமக்காகுமெனும்
நம்பிக்கையில் இன்றெம் நாட்கள்.
புலம்பெயர்ந்துபோன பிள்ளைகளே

நலம்பெறுவீர்.
பனிவிழும் தேசமோ? பாலைவனமோ?
எங்குள்ளீர் என்றும் எமக்குத் தெரியாது?
கனிதரு மரமாய் காய்த்துள்ளீரோ?
காய்ந்து கிடக்கின்றீரோ?
ஏதுமறியோம் யாம்.
எனினும்
உமக்கொரு கடனுண்டென மட்டும்
உரைத்தல் நம்கடன்.
இது உம் தாய்மடி.
இங்குபெறும் வெற்றி உமதே.
தோல்விவரின் அதுவும் உம் தோள்களுக்கே.
எங்கெங்கு சிறகெடுத்து பறக்கினும்
திரும்பும்கூடு இங்குள்ள மரத்திலெனத் தெரிக.
தாயின் சுகத்துக்கு ஈடேது?
விடுதலைக்காக வெந்துகொண்டிருக்கின்றோம்.
எதிரி எல்லா வழிகளையும் அடைத்துள்ளான்.
மூச்சுத் திணறுகிறது.
வாழும் நாடுகளில் நின்றவாறு வல்லமை தருவீர்.
வீதிகளில் இறங்கி விடுதலைக்கு குரலிடுவீர்.
அள்ளித் தருவீர்.
ஆயிரம் கரங்கொண்டெம்மை அணைப்பீர்.
நாளை உமக்கான தேசம்
உருவாகும் நேரம்.
கவச குண்டலங்களாயினும் கழட்டித் தருக.
நாளை உம் நாமம் உரைத்தே
எம் தேசக்கொடி ஏறும்.

□□

ஆடி, 2000.



புதுவை இரத்தினதுரை



# நேற்றைத் துயர் தொலைய நிகழ்காலம் எம்பக்கம்.

கண்ணெதிரே கரைந்துபோகிறது கனவு.
மண்ணெனவே உதிர்ந்து போகிறது மனம்.
நெஞ்சுக்குள்ளே கோடுகளால் வரைந்த உருவம் கூட
ஒப்பேற முன்னரே உருகிப் போகிறது.
நடைவழித் துணையாக நம்பிக்கை மட்டுமே.
நம்பிக்கை மட்டுமே நமக்கற்றுப் போயிருந்தால்
வெம்பிப்போய் என்றோ விழுந்திருப்போம்.
நாளை நமக்கெனும் நம்பிக்கையிற்தானே
வாழ்வு வசப்படுமென வரலாறு நகர்கிறது.
ஒருநாள் மட்டுமே உயிர்வாழுகின்ற
ஈசல்களுக்கேன் இறக்கை முளைக்கிறது?
நீண்டநாள் பறப்பேனென அதற்கு நினைப்பு
அதனால் முளைக்கிறது.
மாலையில் கருகும் மலர்களெல்லாம்
காலையில் என்னவாய் கண்சிமிட்டுகின்றது.
நாட்கள் பலவாக வாழ்வோமெனும் நம்பிக்கை
பூக்களுக்கிருப்பதாற் தானே அவை புன்னகைக்கின்றன.
எவரெஸ்ட் சிகரத்தை டென்சிங் தொட்டான்.
அதற்குமுன்
எத்தனை முறை ஏறியிறங்கினான்.
என்றோ ஒருநாள் தொடுவேனென்ற நம்பிக்கை

அவனுக்கிருந்தது அதனாலே வென்றான்.
நடக்கவேண்டுமா எழுந்துபார்.
கடக்க வேண்டுமா பாய்ந்துபார்.
எப்படிச் சாத்தியமாகுமென இடிந்து போனால்
இப்படியே கிடக்க வேண்டியதுதான்.
துரையப்பாவை தலைவன் சுட்டபோது
ஏன் சுட்டதென்று எவரும் கேட்கவில்லை.
எவர் சுட்டதென்று தானே கேட்டார்கள்.
பின்னர் பிரபாகரனென்ற பெயரை
பிரமிப்புடன் உச்சரித்துக் கொண்டனர்.
பொன்னாலைப் பாலத்தில் புதைத்தகுண்டு வெடிக்காதபோது
என்னாலினி முடியாதென தலைவர் நினைத்திருந்தால்
ஆனையிறவை வெல்ல அவரால் முடிந்திருக்குமா?
எத்தனைபேர் அவருடன் நின்றார்கள்.
பின்னர் சென்றார்கள்.
எத்தனைபேர் அவருடன் வந்தார்கள்.
பின்னர் போனார்கள்.
கூட இருந்தவர்கள் அகன்ற போதும்
ஆடவில்லையே அந்த ஆலமரம்.
வெல்வேனென்ற வீரியமும்
செல்வேனென்ற நம்பிக்கையும்
வல்வை மைந்தனுக்கு வாய்த்திருக்காவிடில்
ஈழத் தமிழருக்கு எப்போதோ
ஆண்டுத்திவசம் முடிந்திருக்கும்.
நம்பிக்கையே பலம் பொருந்திய தும்பிக்கை.
தளராதிருக்க வேண்டும் தமிழரே.
வன்னிக்கு வரும்போது வாழ்வே முடிந்ததென
எண்ணி இருந்தோமானால்
இதுவரைக்குள் எல்லாமும் தொலைத்திருப்போம்.
உன்னியெழுந்தோம்.
ஊர்புகுவோம் என்றுரைத்தோம்.
இன்று செம்மணியில் நின்று சிரிக்கின்றோம்.
நம்பிக்கைதானே நாற்றங்கால்.
ஒருநாளும் தளராதிருப்பவனே பெருவாழ்வு பெறுவான்.
முடியுமாயிது என மலைத்துப் போறவன்.
பிடிமானமேதுமின்றிப் பொசுங்கிப் போய்விடுவான்.
ஊர்போக வேண்டுமா?
போவேனென நம்பு.
உயிர்வாழ வேண்டுமா?

சாகேனென நம்பு.
நம்பிக்கைதானே நாட்களை நகர்த்துகின்றது.
பிரபாகரனென்ற பெயர்
ஒரு மனிதனின் பெயர் மட்டுமல்ல
நம்பிக்கைக்கு இன்னொரு நாமம்.
வாழ்வு வசப்படுமென யார் நம்பினாலும்
அவனுக்கு வாசல் திறந்து கொள்ளும்.
ஈழத்தமிழரின் சோதனைக்காலம் முடிந்துவிட்டது.
இனிச் சாதனைக்காலம்.
இருள்வாழ்வு எமக்கினி எப்போதுமில்லை.
வெற்றியின் முகமே எமக்கினி விளங்கும்.
எங்கள் மூச்சுக்கலந்த காற்றுக்கு முன்பாக
நிற்கும் பலம் உலகத்தில் எவருக்கும் இல்லை.
நாங்கள் வேர்படர்ந்த அறுகம்புல்.
கொத்திப் புரட்டினாலும் முளைப்போம்.
கொழுத்தியெரித்தாலும் துளிர்ப்போம்.
நிமிர்ந்த வாழ்வு வருமென நினை.
வருந்தி உழை.
தமிழீழம் வருமென நம்பு.
தளராது போரிடு.
உன்னை யாரழித்தல் கூடும்?
உமித் துகளல்ல உன்னை யாரும் ஊதித்தள்ள.
கைவிலங்கற்று வீசும்காற்றை அவாவுவோம்.
வாசலில் வரவேற்கும் பூக்களை விரும்புவோம்.
சிறகடித்துப் பறக்கிறதே பறவை
அதன் சங்கீதத்துக்குத் தாளமிடுவோம்.
விட்டு விடுதலையாகும் விடுதலை வேண்டும்.
கட்டுக்களற்று,
எந்தக் காயங்களுமற்று
தொட்டுமகிழ எமக்குச் சுதந்திரம் வேண்டும்.
முன்னர் எமக்கொரு நிலமிருந்தது
அந்த நிலத்திலொரு வாழ்விருந்தது.
அந்த வாழ்வில் ஒரு வாசமிருந்தது.
வாழ்வைத் தொலைத்து எத்தனை வருடங்கள்?
போரிடுவோம்.
தொடர்ந்து போராடுவோம்.
பிரபாகரனென்ற நம்பிக்கையுடனும்,
புலிகளென்ற தும்பிக்கையுடனும்,

போராடுவதுதான் பெருமைதரும்.
காடுகளையும், மலைகளையும் கடப்போம்.
மேடுகளிலும் பள்ளங்களிலும் நடப்போம்.
கால்கள் வலிக்குதெனக் களைப்பாறும் போதுதான்.
பகைவனின் குதிரைகள் பக்கத்தில் வந்து விடுகின்றன.
அதனால்,
நடக்கத்தொடங்கினால் இளைப்பாறல் கூடாது.
தொடர்ந்து நடப்போம்.
சூரியன் கைக்கெட்டும் தூரத்தில்தான் சுடர்கிறது.
தமிழீழம்
அது எங்கள் உயிர்க்கோளம்.
உருவாகிவிட்டது சிசு
கருவாய் திறப்பதற்காகவே காத்திருக்கின்றோம்.
நடுகல் வரிசையை நாளும் தரிசித்து
விடுதலைக்கான வேகத்தை விரைவுபடுத்துவோம்
ஆவிநிகர்த்த எம் "அன்னை நிலத்தேவி"
தன் அளகபாரம் நீவிமுடிந்தாள்.
முத்துப் பரல்களைக் கொட்டிச் சிரித்தாள்.
பகைமுழுதும் தீயும் திசையுரைத்தாள்.
வரமளித்து வல்லமை நல்கினாள்.
உரம் கொண்டெழுந்தது ஓயாத அலை.
இனி ஊர் முழுதும் எமதாக்கியே ஓயும்.
தாயின் துயரழித்தே தணியும்.
பகைவரை மட்டுமல்ல
துரோகிகளையும் அள்ளிவந்து
எம் காலடி ஏற்றும்.
காற்று எம்பக்கம்,
கடலும் எம்பக்கம்,
நேற்றைத் துயர்தொலைய
நிகழ்காலம் எம்பக்கம்.
தாழ்வுற்று எம் தலை குனிந்தது போதும்.
வாழ்வு சமைப்போம் வாருங்கள்.
□□

ஐப்பசி ,கார்த்திகை 2000.



புதுவை இரத்தினதுரை



# எம் விடுதலையைப் பாடியபடி காற்று வரட்டும் மழை வரட்டும் உலக நாடுகள் ஓடிவரட்டும்.

எங்கிருந்தோ ஒரு புண்ணியவாளன்
எம் வாசலுக்கு வந்துள்ளார்.
மீண்டும் எம் கதவுகள் தட்டப்படுகிறது.
அழைப்புமணிச் சத்தத்தில் எத்தனை ஆனந்தம்.
வாசல்வர யாருமற்றிருந்ததால்
தூசி படிந்துள்ளது தூமணிக் கபாடம்.
எண்ணெயற்ற பூட்டும், பிணைச்சலும்
இறுகிக் கிடக்கிறது.
ஆயினும் எம் மனங்களைப் போல
கதவுகளை அகலத் திறக்கின்றோம்.
குசலம் விசாரிக்க வருவோரில்லாததால்
கோலமற்றுப் போனது எம்முற்றம்.
காற்று வரட்டும்
எம் விடுதலையைப் பாடியபடி.
விடுதலைக்கு வீரியம் கொடுத்தபடி
மழைவரட்டும்.
எம் ஜீவ இசையைக் கூவிக்கொண்டு
குயில்கள் வரட்டும்.
நாமிழந்த வாழ்வின் கீதத்தை முணுமுணுத்தபடி
உலகநாடுகள் ஓடிவரட்டும்.
எம் ஆன்மாவின் ராகத்தை ஒலித்தபடி

ஐந்து கண்டங்களும்
அவற்றைச் சுற்றிய சமுத்திரங்களும் வரட்டும்.
வருக நண்பரே
எரிக்சொல்செய்ம்!
உச்சரிக்கும் போதே உதடுகள் நன்றி சொல்கிறது.
பனிவிழும் தேசத்து மனிதருக்கு எம் பணிவு.
அனல் தகிக்கும் வனத்திடை வந்த அன்புக்கு
ஆயிரம் வணக்கங்கள்.
நோர்வே தேசமே!
உன்னை நெஞ்சார வாழ்த்துகிறோம்.
நீலவிதானமே நெருப்பிற்குளிக்க
நேற்றுவரை வானப்பிசாசுகள் வந்து போயின.
குண்டள்ளிச் சொரிந்து குதுகலித்தன.
தூரத்தே பீரங்கிவாய் துடித்தலற
துப்பித் தொலைத்தன எறிகணைகள்.
உங்கள் வரவறிந்து போலும்
இன்றெல்லாம் வாயடைத்துப் போயின.
நாம் பட்டதுயருக்குப் பட்டியல் தேவையில்லை.
"ஒஸ்லோ" வீதிகளிற் திரியும்
ஒரு தமிழனைக் கேளுங்கள்.
தன் கால்கள் தீப்பிடிக்க ஓடியகதை சொல்வான்.
தொப்பிள்க்கொடி சுற்றித் தூங்கிய கருவறையை
குண்டுகள் பிளந்த குரூரம் கூறுவான்.
உடன்பிறப்பை ஓநாய்கள் பிடித்தேகிக்
கடித்துக் குதறிய கதை சொல்லுவான்.
கண்ணீரில் எங்கள் வாழ்வு மிதப்பதை
புலம் பெயர்ந்து போன பிள்ளைகளிடம் கேளுங்கள்.
இங்கே பாதையோரத்தில் கிடக்கும்
பட்டினி வயிறுகளைக் கேளுங்கள்.
சின்னக்குடிசை வாசலில் தொங்கும்
தூளி முடிச்சு ஒவ்வொன்றும்
எம் துயரம் சொல்லும்.
எழுந்து நின்று சத்தியம் செய்கின்றோம்.
இத்தனைக்குப் பின்னும்
சமாதானத்துக்கு நாங்கள் சாட்சிகளாகின்றோம்.
பேச்சுவார்த்தை மேசைக்குப் போகவேண்டுமா?
அதற்கு நாங்கள் ஆயத்தம்.
"உங்கள் பக்கத்தில் நீதியுளது" என்று
ஓரேயொரு உத்தரவாதம் தாருங்கள்.

எங்கள் கையிலிருந்து பறிக்கப்பட்ட வாழ்வை
எமக்குப் பெற்றுத்தாருங்கள்.
எங்கள் காலாற நடந்த ஊர்களை
எமக்கு மீட்டுத்தாருங்கள்.
எவரின் வாசலுக்கும் சென்று யாசிக்காத நிமிர்வை
எமக்கு வழங்குங்கள்.
இங்கு வீசும்காற்று எம்க்கானதாய்.
பாடும் குருவிகள் எமக்கானதாய்,
பூக்கும் மலர்கள் எமக்கானதாய்,
விளையும் வயல்களும்,
அசையும் நதிகளும் எமக்கானதாய்,
எல்லாம் எமதான வாழ்வைப் பெற்றுத்தாருங்கள்.
நாம் நாமாக வாழ்வொமெனும் நம்பிக்கையை
முதலில் எமக்கு வழங்கச் சொல்லுங்கள்.
நாம் பல்லக்குக் காவிகள் என்ற நினைப்பை
அவர்களை மாற்றச் சொல்லுங்கள்.
ஈழத்தமிழர் ஏதோ இழிபிறப்பென்ற
ஆழப் படிமத்தை அகற்றச் சொல்லுங்கள்.
நாங்கள் கூண்டுப் பறவைகள் அல்ல
அடையாள அட்டை சுமக்கும் அந்நியரல்ல.
கொல்லவும்,
கொன்று புதைக்கவும்,
வழியிற் பிடிக்கவும்,
வல்லுறவில் வதைக்கவும்
எமக்கெழுதிய விதியை அழிக்கச்சொல்லுங்கள்.
இது எம் தாயின்மடி
எம்மைக் கர்ப்பத்தில் சுமந்த கருக்குழி.
இந்த மண்ணின் ஒவ்வொரு துகள்களிலும்
எம் முந்தையரின் மூச்சுப்படிந்துள்ளது.
இங்கு விசாலித்த மரங்கள் ஒவ்வொன்றிலும்
எம் பரம்பரையின் குருதி செறிந்துளது.
ஓடிவருகின்ற உலக நதிகளே!
நீங்களே முன்னின்று நீதிவழங்குங்கள்.
அவர்களின் பூமியில் ஒரு அங்குலமாயினும்
எமக்கு வேண்டாம்.
அவர்களின் உரிமத்தில் ஒரு துகளளவேனும்
எமக்கு வேண்டாம்.
எமக்கானதை மட்டுமே கேட்கின்றோம்.
தருவதில் அவர்களுக்கென்ன தயக்கம்?

சண்டைக்கும் சமாதானத்துக்குமான இடைவெளி
ஒரு நூலிழைதான்.
நண்பர்களாகப் பேசலாம்.
அல்லது பகைவர்களாகப் போரிடலாம்.
ஒன்று கைகுலுக்குவதில் தொடங்கும்
மற்றொன்று கவசம் தரிப்பதில் ஆரம்பமாகும்.
நெருப்பில் கருக்கொண்டவர்களை
நெருப்பென்ன செய்யும்?
நண்பரே!
அத்தினாபுரத்துக்குத் தூதுபோனான் அனந்தசயனன்.
ஒன்றுமே கிட்டவில்லை.
யுத்தத்துக்குத் தேதி குறித்தான் யுவராஜன்.
குருசேத்திரத்தில்
அதர்மம் தலைகவிழ தர்மம் தலை நிமிர்த்தியது.
மீண்டும் இந்த வரலாறா முளைக்கவேண்டும்?
வேண்டாம் ஐயனே!
நாங்கள் பேசவே விரும்புகின்றோம்.
உங்களின் முன்நிலையில்.

□□

மார்கழி,2000 - தை, 2001.





*சிட்டுக் குருவிகளுக்கு*
*சிறகு முறியாது*
*மீன் குஞ்சுகளுக்கு*
*மூச்சுத் திணறாது.*

"அச்சமில்லை அச்சமில்லை
அச்சமென்ப தில்லையே
உச்சி மீது வானிடிந்து
வீழுகின்ற போதிலும்
அச்சமில்லை அச்சமில்லை
அச்சமென்ப தில்லையே."

பாரதியே!
எட்டயபுரத்திலிருந்து அன்றிதை
எவருக்கெதிராகப் பாடினாயோ?
அதே அவர்களுக்கெதிராக
ஈழத்திலிருந்து இன்றுன் பேரன் பாடுகின்றான்.
தேம்ஸ் நதியே!
ஊற்று நீரை ஒட்ட இறைத்து விட்டு
உன்னிலெப்போது அமிலம் நிறைத்தாய்?
பர்மிங்காம் அரண்மனையின் பளிங்குக்கற்கள்.
எப்போது சரளைக் கற்களாயின?
தோலின்நிறம் போலத்தானே உள்ளேயும்
பாலின் நிறமென நம்பி
நாங்களின்று ஏமாந்து போனோம்.
அன்று கராம்புக்கும், கறுவாவுக்குமாக
எங்கள் கரையொதுங்கியவர்களே!
இன்று கதிர்காம மேனகையின் களியாட்டத்தில்.

தேம்ஸ் நதியே சில்லிட்டுப்போனதா? .
கடிக்க வந்தது கருநாகம்.
அடித்தோம்.
பாம்புக்குப் பால் வார்ப்பவர்கள்
தடிகளுக்குத் தடைவிதித்து விட்டனர்.
பயிரழிக்க வந்தன யானைகள்.
வெடிகொழுத்திப் போட்டோம்.
யானைக்குத் தீனிபோடுவோர்.
வெடிகொழுத்திய கைகளுக்கு விலங்கிட்டனர்.
ஈழத் தமிழரே!
இடிவிழுந்து விட்டதென எண்ணாதீர்.
உணர்ந்து கொள்வீர்.
இது ஒப்பாரிக்கான காலமல்ல....
ஒட்டகங்கள் தடை செய்து விட்டால்
சிட்டுக்குருவிகளுக்கென்ன சிறகா முறியும்?
காண்டா மிருகங்கள் தடைச்சட்டம் போட்டுவிட்டால்
மீன்குஞ்சுகளுக்கென்ன மூச்சா திணறும்?
முதுகிற் குத்திவிட்டுச் சிரிக்கின்றாயே
நீயுமா புருட்டாஸ்?
குளிர்தேச காற்று குரல்வைக்கிறது
பூமத்தம் பூவுக்கும் நோப்படக் கூடாதாம்.
பூப்பறிக்கும்போது முட்களுக்கு மூச்சுத்திணறக் கூடாதாம்.
நாங்கள் பயங்கரவாதிகளாம்.
சொல்லித் திரிகின்றன வெள்ளைக் கொக்குகள்.
சூரியனே அஸ்தமிக்காத சாம்ராஜ்ஜியம்
இன்று சுருங்கி விட்டதல்லவா?
அந்தக்கோபம் அவர்களுக்கு.
ஊரையடித்து உலையிற் போட்டவர்களல்லவா?
அந்த ராஜதிமிரே அவர்களைப் பேசவைக்கிறது.
கூட்டுக்களவுக்கு வந்த கொள்ளைக்காரர்கள்
பூட்டைத் திறந்து விட்டு பேசாமற் கிடக்கச்சொல்லி
வீட்டுக்காரர்களுக்கே விளக்கம் தருகின்றனர்.
யுத்தம் என்பது இரத்தம் சிந்துகின்ற அரசியல்
அரசியலென்பது இரத்தம் சிந்தாத யுத்தம்.
இரண்டும் எமக்குக் கைவருமென்று
மிரண்டுபோன மேற்குலகுக்கு விளக்கம் சொன்னோம்.
அந்தப் பெரிய மனிதர்களுக்கு
இது புரியவேயில்லை.

குப்பையில் வீசுகின்றனர் எங்கள் குரலை.
ஈழத்தமிழரே! எதற்கும் அஞ்சாதீர்.
நாளை வாழ்வெமக்கு வசப்படும்.
எங்களைத் தடைசெய்வதற்கு
இவர்கள் யார்?
எங்களுக்கு நுகத்தடி பூட்டுவதற்கு
இவர்கள் யார்?
சூரியக் குஞ்சுகளே துணிவை இழக்காதீர்.
வேரை அறுத்து எம்மை விறகாக்க முடியாது.
சபலங்கள் ஏதுமின்றி
தேரைச் சரியான திசைவழியிற் செலுத்துவோம்.
சத்தியம் தோற்றதாகச் சரித்திரம் கிடையாதே.
வியட்நாம்மை வெள்ளை மாளிகை தடை செய்தது.
ஹோசிமின் இடிந்துபோய் விடவில்லை.
தொடர்ந்தும் போராடினர்.
இன்று நிமிர்ந்து விட்டது அந்த நிலம்.
பாலஸ்தீனத்தைப் பயங்கரவாதிகளின் குகையென
வெள்ளைக்கார அரசுகள் விலாசமிட்டன.
இன்று அரபாத்துக்கு ஆலவட்டம் பிடிக்கின்றன.
இந்தியச் சுதந்திரப் போரைக்கூட
பிரிட்டன் பயங்கரவாதமென்றுதானே
முதலில் பிரகடனம் செய்தது.
பின்னர் என்ன நடந்தது?
மவுண்பேட்டன் மனைவியின் தோளில்
காந்தியே கைபோட்டுத் திரிந்தார்.
நாங்களேன் இடிந்து போக வேண்டும்.
வரலாற்று நதி எங்கள் கால் நனைக்கவே வருகிறது.
வல்லமையுடனிருப்போம்.
தந்ததை வாங்கி தாழ் பணிந்து கொள்வது
தேவானந்தனுக்கே தெரிந்த வித்தை.
விடுதலையை விற்று விருந்துண்ணுவதற்கு
வேறு யாராவது விருப்பப்படலாம்.
ஆனால் பிரபாகரன் தயாராக இல்லை.
போராடும் புலிகளுக்கும் பிரியமில்லை.
தாயகத் தமிழரும் தாங்க மாட்டார்கள்
புலம்பெயர்ந்து போன பிள்ளைகள் கூட
பொறுக்கமாட்டார்கள்.
எமக்கு வேண்டும் உரிமை.
சலுகைகளல்ல.....

அவர்கள் தர விரும்பும் "அரசியற்பொதி"
அது ஆனைப்பசிக்குச் சோளன் பொரி.
ஆருக்கு வேண்டுமிந்த "அரைச்சாப்பாடு"
உறக்கத்திற் கிடக்கும் உலகமே!
உனக்கொன்று உரத்துக் கூறுகிறோம்.
செவிட்டுக் காதுகளிருப்பின் தெரிந்துகொள்ளுங்கள்.
நாங்கள் இரத்தப் பிசாசுகள் அல்ல.
அடம்பிடித்தலறும் அடிப்படை வாதிகளுமல்ல.
நாங்கள் விடுதலைக்கு விலை கொடுக்கும் வேங்கைகள்.
அடங்கிப்போவதற்காகவா இந்தப் போராட்டம்.
தொடங்கப்பட்டது?.
இல்லையே.
பதினாறு வயதில் எமது தலைவன் புறப்பட்டது
பாதி வழியில் தன் பயணத்தை முடிக்கவல்ல.
உயிருரசி மூட்டியதல்லவா இந்த உரிமைப்போர்.
இது கருகிப்போகாதெனச் சத்தியம் செய்கிறோம்.
சுதந்திரதேவி! உன்னைச் சேவித்தோம்.
மயிர் நீக்காது இந்த மான்கள்.
நீக்கும் நிலை வந்தால் நிச்சயம் வாழாது.
விண்மீது ஆணை.
இந்த மண்மீது ஆணை.
தாங்குமெம் தலைவன் மீது ஆணை.
தூங்குமெம் மாவீரச் செல்வங்கள் மீது ஆணை.
துணிந்துளது எம்தேசம்.
இனிப் பணிந்தெவர் காலையும் நக்காது
எம் நாவுகள்.
பேசவருவோரே வாருங்கள்.
உமக்கெமது பூமாலை.
குண்டு வீசவெனக் குறிவைப்பவர்களே
வாருங்கள்.
உமக்கிது சாவோலை.

□□

மாசி , பங்குனி 2001.

புதுவை இரத்தினதுரை



# சிரம் தாழ்த்தா வாழ்வே எமக்கான சிம்மாசனம்.

ஈழத்தமிழினமே! முதலில் அழுவதை நிறுத்து
உனக்கானது ஒப்பாரியல்ல.
பாலைவனத்தில் பாலூறாவிடினும்
பாதையிடையில் சோலை வருமென நம்பு.
இழவு காத்தலை உன் அகராதியிலிருந்து எடுத்தெறி.
கண்ணீரை விரல் நுனியிலெடுத்துச் சுண்டிவிடு.
வாழ்விடிந்து போனதென வாசலிற் கட்டிய
சோக தோரணங்களை அறுத்து விழுத்து.
முகிலுரச நிமிர்ந்திருந்த தலை கவிழ்ந்து
நிலம் பார்த்து உலவுவதை நிறுத்திவிடு.
என்ன நடந்ததெனத் துன்பப்பூ சூடியுள்ளாய்.
விண்ணிடிந்தபோதும் தாங்கும் வீரியனே!
சின்னப் புண்ணின் வலிக்காகவா
சிரிப்பிழந்து போனாய்?
ஒரு சிறகுதிர்ந்து போனதுக்காக
ராஜபறவைகள் சோககீதம் பாடுமா?
கோட்டை மதிலை குண்டூசி துளையிடுமோ?
துயர்வரினும் எதிர்கொள்ளப் பழகு.
உள்ளெரியும் கோபத் தீ கிளறி
ஒரு பொறியெடுத்து வாசலை ஒளிசெய்வாய்.
புயலின் வலியனே! உன்னையெவனடா
பூட்டியடைக்க முடியும்?

பாவியரால் ஜீவிதம் கொஞ்சம்
பழுதானதென்னவோ உண்மைதான்
அதற்காக கேவியழுவதால்
ஒன்றும் கிடைக்கப்போவதில்லை.
கோடையில் இலையுதிர்ந்து குற்றுயிராகும் மரங்கள்
வைகாசி வந்ததும் பூப்படைந்து புன்னகைக்கவில்லையா?
மரங்களிலிருந்து உன்மனதுக்கு வைரம் பாயட்டும்.
இந்த மண்ணின் முந்தைவழித் தோன்றல்கள் நாம்.
சிங்களத்தின் வருகைக்கு முன்னரே
சிரசில் முடிதரித்த வம்சமெமது.
தாமிபரணிக் கரையில் தளைத்திருந்த வேரே!
கதம்பநதி தீரத்தில் காற்றளைந்த தேரே!
எல்லாமும் இன்றிழந்து போனாயெனினும்
மீண்டும் தொடங்கும் மிடுக்குளாய் நீ.
பூண்டும் புல்லுமல்ல நீ பொசுங்கிப்போவதற்கு.
வெளியே வா சிறுத்தையே!
உன் மூச்சின் வீச்சில்
முன்னிருந்த
வாழ்வு முளைக்கட்டும்.
அகதிக் குடியிருப்பும்,
நிவாரண வரிசையும்,
குண்டும் குழியுமான செம்புழுதித் தெருவும்
இயல்பிலிருந்து உன்னை இல்லாமற் செய்யுமா?
உலையேறா அடுப்புகளின் அவலக்குரலில்
நீ வேரிழந்து விழுந்து விடுவாயா?
ஊர்போகும் ஏக்கத்தில் உருகி
எலும்புருக்கி நோயனென இடிந்து போவாயா?
அட, பஞ்சபூதங்களனைத்திலும் பலவானே!
தமிழரெனும் சூரிய குடும்பத்தின் தோன்றலே
கவலைக்கு முச்சைகட்டிக் காற்றிலேற்றடா.
நம்பிக்கை நூலில் விண்கூவட்டும் பட்டம்.
பேச்சுவார்த்தை மேசையிற்கசியும் சலுகை நீரில்
நாக்கு நனைக்கலாமென நம்பாதே.
பூதகிகள் இப்படித்தான் பால்கொடுக்க வருவார்கள்.
ஒப்பனைக்குக் குடிப்பதுபோல் இருக்கலாமே தவிர
அற்புதமான ஆகாரமென அருந்தி விடாதே.
விமானமேறிவரும் வெள்ளை மரங்களின் நிழலில்
சுகமான தூக்கம் வருமெனும் கனவில் மிதக்காதே.
நம்பிக்கையில்லாத் தீர்மானம் வாக்கெடுக்கும் போதில்.

வென்றாலும், தோற்றாலும் உன் விதியழியமாட்டாது.
போராட்டமே உனக்கு வாழ்வெழுதி வழிகாட்டும்.
போராட்டமே உனக்கு
இழந்தவைகளை மீட்டு முடி தரிக்கும்.
ஆனையிறவுக் கதவுகளின் அகலத்திறப்பு
எமக்கு வாழ்வு வசமாகுமென்பதற்கான அடையாளம்.
கனவின் மீதியையாவது கவனமாகப் பொத்திவை.
அதிலிருந்து தான் உனக்கான அழகு
துளிர்க்கப்போகிறது.
பிரபாகரன்
காலமெமக்குக் கைக்கணக்கில் வீசிய தலைவனல்ல.
இவனே காலத்தைப் படைப்பானெனச்
சொல்லியனுப்பிய பிள்ளை.
தளராத உறுதிக்குச் சான்றென்றிருக்கட்டுமென
இரண்டு நூற்றாண்டுகளுக்குமான நியமனம்
இது வெறும் புகழ் பாடும் விருத்தமல்ல.
காலக்குரலறிந்த வியாசனின் கணிப்பு.
உலகத்தமிழினமே!
உனக்கான வாழ்வின் வசந்தம்
பிரபாகரனென்ற பெயரில் தான் உலவுகின்றது.
கண்டு கொண்டாயானால் காரியம் சித்திக்கும்.
தவற விடுவாயானால் தத்தளிப்பாய்.
நீ வீட்டிற் சும்மா நீட்டிப் படுத்திருக்க,
விடுலையுந்தன் கட்டிலருகே வந்து
கண் திறக்கமாட்டாது.
போராடிப் பெறுவதுக்குத்தான்
விடுதலையென்ற பெயர்.
பாராளுமன்றில் தருவது பாதியுண்ட மீதிச்சோறு.
அதைவாங்கித் தின்னவா ஆசைப்படுகிறாய்?
அட, எச்சிலுண்ட வம்சமல்லடா எமது.
எத்தனை உதிரக்கொடிகளைப்
புதைத்து விட்டு எழுந்தோம்.
வெறும் புல்முளைக்கவா விதைத்தோம்?
வாழ்வின் அனைத்தையும் போருக்களித்து
வதையுண்ட பின்னும்
தாழ்வின் படுக்கையிலா தலை சாய்க்க விரும்புவாய்?
திசையாவும் எம் வசமாகும் காலமிது.
பூமிப்பரப்பெங்குமிருந்து எமக்குப் புது ரத்தம் பாய்கிறது.
சோர்வுனக்கு ஆகாது இப்போ?

நிலவு தூறும் ஒளிமழை இறங்கி
எம் பூமி சௌந்தர்யம் பூசிக் கிடக்கிறது.
எழில் சிலிர்த்திருக்கிறது எம் வயல்கள்.
வாய்க்காலில் பொன்னுருகிப் பாய்கிறது.
இரவுப்பறவைகளின் சிறகசைப்பில்
தாளம் பிசகாத சங்கீதம் வருகிறது.
கள்ளியும், நாகதாளியும், ஆமணக்குமென்றாயினும்
இவை எம் காதற்கொடிகள்.
வீட்டுக்கோடியில் நிற்பது வெறும் வீரை மரமல்ல
எம் வீரமரம்.
எங்கள் பரம்பரையின் மூச்சுப்பட்டுயர்ந்தது
இந்த முதிரை மரம்.
இவற்றை இழந்திருக்க எப்படி ஒப்புவாய்.
பகையிடம் கொடுத்தபின் எப்படிப் படுத்திருப்பாய்?
போரில் உயிர்கொடுத்துப் போகலாமெனினும்
விடுதலையின் வேரையிழத்தல் கூடாது.
மானமே மானுடத்தின் மகுடம்
சிரம் தாழ்த்தா வாழ்வே எமக்கான சிம்மாசனம்.
பேச்சும் வார்த்தைகளும், ஒரு புறம் புன்னகைக்கட்டும்.
நீ போருக்கான புரவிகளுக்குக் கடிவாளம் பூட்டு.
தேரின் சக்கரங்களுக்கு எண்ணை பூசு.
வேல் முனைகளைக் கூர்மையாக விளங்கச் செய்.
முரசு கொட்டுவோரே! வார்பிடித்துச் சுருதி சேருங்கள்.
பரணியொன்றெழுதப் புலவோரே தயாராகுங்கள்.
பீரங்கிவாய்கள் பூச்சூடுவதற்கல்ல.
யாரங்கே நிற்பது?
இழுத்து வாருங்கள் பீரங்கிகளை.
மேசையிலிருந்து சமாதானம் வருமெனில் சந்தோசம்
யாரெனினும் ஏமாற்ற நினைப்பார்களானால்
அது யாராக இருந்தாலும்
இங்கே பாடம் படித்துத் திரும்புவர்.
இந்தச் சத்தியத்தின் குரல் வெறும் சங்கீதமல்ல
தமிழீழத்துக்கான தண்டோரா.



□□

ஆனி, ஆடி 2001.



# அறியப்படாதவர் மீது ஒரு அஞ்சலிப் பாடல்.

என்றும் போலத்தான் அன்றும் விடிந்தது
எந்த மாற்றமுமில்லாது.
வழியில் அகப்பட்டதனைத்தையும் தழுவியபடி
நேற்றைய இரவைக்கீறி காற்று உயிர்ப்புற்று உலவியது.
நம்பிக்கையே நாளாந்தமாகிய வாசல்களில்
மெல்ல மெல்ல வெய்யில் பரவியது.
அவிச்சலில்லாத அந்த ஆனந்தப் பொழுதில்
வன்னியின் துரயத்துள்ளும் ஒரு சுகம் தெரிந்தது.
பாதங்களில் வேகம் பூட்டாத பரவசத்துடன்
விடுதலை மனிதர்கள் வெளியே வந்தனர்.
எந்த வானொலி என்ன சொல்லிற்றோ தெரியாது.
முகிலுரசிய தலைகளில் முகங்கள் பூவனமாயின.
மகிழ்ச்சியில் மாரடைப்பே வந்துவிடும் போல
ஆனந்தக் களிப்பில் பலர் அழுதே விட்டனர்.
வாய்வந்த வார்த்தைகளும் கூட
தொண்டையில் சிக்குண்டு திணறின.
எடுத்தது எடுத்த படியும் போட்டது போட்டபடியும்
புழுகமேறிய தமிழர் சைக்கிலேறி உலாப்போயினர்.
நெஞ்சுக்குள் சந்தோசம் நிறையும் போது
பூரிப்பின் வேர்களில் யாருக்கும் பூப்பூக்கும்.
பூத்துச் சிலிர்த்துப் போனது எம் பூமி.

காற்றின் திசைகளெல்லாம் கட்டுநாயக்காவே விரிந்தது.
பன்னிரன்டு குண்டுக்குருவிகளின் குடலுருவிப் போனதாம்
எவரோ எய்த அம்பு.
வீணான பொல்லாப்பேதும் வியாசனுக்கு வேண்டாம்.
எய்தவரை x எனக் கொள்வோம்.
அது யாராகவும் இருந்து விட்டுப்போகட்டும்.
எய்த அபிமன்யுக்களைப் பற்றியே
எல்லா வாய்களும் பேசின.
அருச்சுனனின் புதல்வர்களே!
உங்களுக்கெம் நன்றியென உரைத்தது காற்று.
தன் சாபக்கவிதைகள் பலித்ததெனச்
சந்தோசித்தான் வியாசன்.
வானத்தாயும் வஞ்சிக்கவில்லை.
அன்று பாளம் பிளந்த எம்மண் மீது
சில தூறல்கள் விழுந்தன.
ஓம், எனத் தேவருரைத்த வாழ்த்தொலி
எல்லா செவிகளிலும் கேட்டது.
வெற்றிப் பெருமிதத்தின் வீறாப்பிலிருந்தாள்
கொற்றப் பெருமாட்டி.
உயிரற்ற இயந்திரங்கள் மீது இத்தனை கோபமா? என்று
"அரசியற் சாதுரியர்" யாரும் ஆச்சரியப்படலாம்.
எள்ளி நகையாடியும் சிலர் எழுதலாம்.
கட்டுநாயக்காவில் கருகிப்போனவை
வெட்டுக்கத்தியும், சின்னப் புட்டுப்பானையுமல்ல.
எரிந்தது பகைவரின் பலம்.
அழிந்தது அவர்களின் ஆணவம்.
எங்கள் உயிருறுஞ்சிக் குடித்தவை
இந்த ஊத்தைப் பேய்கள் தான்.
நவாலியிலும், நாகர்கோவிலிலும்
நரபலியெடுத்த இரத்தப் பிசாசுகள் இவை.
கிளாலியிலும், சுதந்திரபுரத்திலும்
எம் உறவுகளைத் தீயிட்ட எரிமாடன்கள் இவைதான்.
மந்துவிலிலும், மாத்தளனிலும்,
சின்னப் பிஞ்சுகளின் உயிர்தின்ற வன்மவல்லூறுகள் இவை.
இந்த மகிழ்ச்சி இருக்காதா எங்களுக்கு?
குண்டுகொட்டியபோது கீழே நின்றவருக்கு
கொடுத்த தண்டனை அறிந்து கொள்ளை மகிழ்ச்சி.
குருதியும் சதையுமாகக் கூட்டியள்ளியவருக்குத்தான்
இந்த அழிப்பின் பெறுமதி புரியும்.

பிஞ்சைப் பறிகொடுத்த பெருதுயரில்
நெஞ்சிலும் தலையிலுமடித்து ஓலமிட்டாளே ஒரு தாய்
அவளைக் கேளுங்கள்.
கட்டுநாயக்காவுக்கு அவளின் கருவறை பதில்சொல்லும்.
குண்டு பிளந்த தாயின் மார்பருகே கிடந்து
பச்சைப் புல்லொன்று பாலுக்கழுததே
அந்தச் சந்திரவனத்துத் தளிரைக் கேளுங்கள்.
முற்றாக எரியவில்லையா கட்டுநாயக்கா?
என்று மூச்செறியும்.
உயிரிழந்த துயரில் உருகியபடி
கிளாலிக்கரையில் வந்துகிடந்தோமே
விட்டானா பாவி.
விரட்டி விரட்டி உயிர்ப்பூக்களைக் கிள்ளியெறிந்துவிட்டு
கட்டுநாயக்காவிற்தானே களைப்பாறினான்?
நெருப்பிட்டது யாரெனத் தெரியாதெனினும்
தகும் செயலாற்றியவர்களுக்கு எம் தலை சாய்த்தோம்.
"செட்டிக்குத்தானே தெரியும் வட்டியும்முதலும்"
இந்திரபுரியை விற்றுத்தான் இவை இறக்குமதியாகின.
இந்த வல்லூறுகள் வெறும் யந்திரங்களல்ல.
எதிரி தவம்செய்து பெற்ற வரங்களிவை.
எங்களைக் கொல்லவென வாங்கிய நாகாஸ்த்திரங்கள்.
உட்புகமுடியாதெனும் நம்பிக்கையில்
வித்தகர் வகுத்த பத்மவியூகம் பிளந்து
உள்ளே புகுந்தவர் யாரெனத் தெரியாதெனினும்
அவர்கள் சென்ற திசைநோக்கிச் சிரம்சாய்த்தோம்.
விமானத்தளத்தின் அருகுள்ள விளையாட்டுத் திடலில்
பழிதீர்க்கப் போனவரின் பாதணிகள் கிடந்தனவாம்.
செருப்புகளை எடுத்து வாருங்கள் சிம்மாசனத்தில் வைப்போம்.
சென்றவர்கள் உண்டெறிந்த மீதவுணவிருந்ததாம்.
எடுத்துவாருங்கள் ஒரு பருக்கையுண்டாலே போதும்.
எமக்கும் பலம்பெருகும்.
வண்டிலில் வந்தார்கள், வாய்க்காலால் வந்தார்கள்
கடலால் வந்தார்கள்
காற்றாகிக் குதித்தார்களென்று கூறுகின்றீர்களே
வெற்றுப் பீரங்கிகளே உங்களுக்கு வெட்கமே கிடையாதா?
கண்ணிவயல் கடந்து,
காவலரண் கடந்து,
மின்சார வேலிமீதேறி

வந்தார்களென்று கூறும்போதில்
பெருமையில் நாங்கள் புல்லரித்துப்போகிறோம்.
சிரசேறும் செருக்கில் திணறுகிறோம்.
புத்தபெருமானே!
சத்தியமாய் எங்களுக்குத் தெரியாது.
வந்தவர்கள் தமிழரென்பதால் வாழ்த்துகிறோம்.
அவர்கள் கொன்றவையெல்லாம்
முன்னரெம்மைக் கொன்றவையென்பதால்
நாலுவரியெழுதி அவர்களுக்கு நன்றி சொல்கிறோம்.
கழிவுநீர் வாய்க்காலுக்குள்ளாலே நடந்தார்களாம்.
வாய்க்காலே! உமக்கெமது நன்றி!
மின்சார வெட்டுக்கு உத்தரவிட்ட ரத்வத்தையாரே!
நன்றிக்குரியவர் நீருமானீர்.
கட்டுநாயக்காவின் தலையில் குட்டியவரே
நீங்கள் யார்பெற்ற பிள்ளைகளோ நாமறியோம்.
உங்கள் பெயரும் அறியோம்.
உங்கள் ஊரும் தெரியோம்.
ஆயினும் உமக்கு ஆயிரம் தீபங்களேற்றினோம்.
நாயினும் கீழாய் நலிவுற்ற தமிழினத்தை
உலகத்தின் உதடுகளால் உச்சரிக்க வைத்தவரே!
எழுதும் எந்த வரியும் உங்களிடம் தோற்கும்.
நீங்கள் எழுதிய வரிகள் மட்டுமே நிலைக்கும்.
பிரிந்தோம்
மீண்டும் சந்திப்போம்.

□□

ஆவணி , புரட்டாதி 2001.





# கல்லறைத் கதவுகள் திறக்கும் கார்த்திகைத் திருநாள்.

சாமம் பேயுலவும் சவக்காலை
என்ற பழிச்சொல்
போய் மறையலானது.
வீரர் துயிலுகின்ற இல்லம்
என்ற புனிதச் சொல்
வாய் நிறையலானது.
கார்த்திகை மாதத்திலேன் கனத்தமழை?
ஏனிந்தப் பச்சைவிரிப்பு?
நிலமேன் நெக்குருகிக் கிடக்கிறது?
காற்றேன் ஓவென்றிரைகிறது?
சூரியனேன் சுட்டெரிப்பதில்லை?
அயர்ந்துறங்கும் ஆலகண்டருக்கு
இயற்கையின் இந்தமாத அஞ்சலியிது.
ஓவென்றிரையும் ஊதற்காற்றே!
வேகம் குறைதது வீசு.
தேவகுமாரர்கள் இங்கே தூங்குகின்றனர்.
துயில் கலைத்துத் தொலைக்காதே.
கல்லெறியும் பொல்லாக் கனத்தமழையே!
மெல்லப் பூவெறிதல் போலப் பொழிக.
இங்கே ராஜகுமாரிகள் உறங்குகின்றனர்.
தொட்டெழுப்பித் தொலைக்காதே.

நிலமே! மழை நீரைக் குடிக்காதே
உள்ளே சில்லிட்டுப் போகும் அவர்தேகம்.
அதிர நடப்பவரே கவனம்.
பிள்ளைகளின் அனந்தசயனம் கலையக்கூடும்.
பூக்களெனினும் மெதுவாகப் போடுங்கள்
தூக்கம் கலைந்து போகலாம்.
காலப்பணியில் கண்துஞ்சாதிருந்தவர்கள்
கால்நீட்டிக் கொஞ்சம் களைப்பாறுகின்றனர்.
வாழ்வின் வசந்தம் யாவையும்
தாயக வேள்வியில் தர்ப்பணம் செய்தவர்.
நீள்துயிலிற் கிடக்கின்றார்
ஏன் எழுப்ப வேண்டும் அவர்களை?
கார்த்திகை இருபத்தேழு
எம் காவற்தெய்வங்களுக்கான காணிக்கைப் பெருநாள்.
துயிலுமில்லத்தின் தூமணிக் கபாடங்கள்
அன்று அகலத்திறந்திருக்கும்.
ஊர்கூடி விதைத்த வயல்தேடி வந்திருக்கும்
சிறகெடுத்த பறவைகளின் உறவங்கு திரண்டிருக்கும்.
தனித்த குரலில் ஒரு தாய்ப்பறவை கதறியழும்.
“மகனே!
பால்தந்த பாவி பூக்கொண்டு வந்துள்ளேன்
கால்கொண்டுதைத்து நிலம் கிழித்து
வாமகனே வெளியே.
என் கையணைப்பில் உன்னை நொடிப்பொழுதாயினும்
ஆரத்தழுவ அனுமதிப்பாய் என் மகனே.”
உயிர் பிழிந்து கசியும் உதிரம்.
திக்குற்றுப் போகும் திரண்டிருக்கும் உறவுகள்.
பக்கத்து குழியருகும் பாடும் துயர்ப்பாட்டொன்று
விக்கலுடன் எழும்.
அங்குமொரு தாய்ப்பறவை அழும்.
“அம்மாவென அழைத்த அமுதவாய் திறந்தின்று
இன்னோர் முறையென்னை எழுந்தணைக்க மாட்டாயோ?
கனவிற் தினம் வந்து கட்டியெனை அழைக்கின்ற
மகளே! ஒரு தடவை மார்பணைக்க வாராயோ?”
சொல்லியழும் குரலில் கல்லும் கசிந்துருகும்.
கேட்கும் செவியெல்லாம் கிறுகிறுத்துப் போகும்.
உள்ளே நரம்பெல்லாம் தீ மூண்டு நடுங்கும்.
ஆறாத துயர் வெள்ளம் அணையுடைத்துப்பாயும்.
அப்போதுதான் கல்லறையின் கதவுகள் திறப்பதாய்

ஒரு காட்சி விரியும்.
உள்ளே முகம் தெரியும்.
விழிகள் திறந்து பேசத்துடிப்பதாய் வாயசையும்.
மெல்லச் சிரிப்பொலியும் கேட்கும்.
"அம்மா!
என்னை இழந்ததாய் ஏன் புலம்புகின்றாய்
எனக்கா சாவு வரும்?
உள்ளே உயிர்கொண்டே உறங்குகின்றேன்.
தமிழீழம் வரும் வரை எனக்குச் சாவில்லை.
அதன் பின்பும் எனக்கு அழிவில்லை
இது பீஷ்மரின் படுக்கை
காத்திருக்கும் கண்ணுறக்கம் .
என்றோர் அசரீரி எல்லாச் செவிகளிலும் கேட்கும்.
கோயில் மணிகள் அசையக் குழிவிழிகள் மூடிவிடும்.
கல்லறைக் கதவுகளில் பூட்டு விழும்.
காணிக்கைத் திருநாளுக்கான பூசைமணியசைய
சுற்றுப்பிரகாரம் சூடு பெறும்.
நெய்விளக்குகள் நிமிர்ந்து சுடர்பிடித்தெரியும்.
திருப்பலிப்பாடல் தொடங்கும்.

> "மொழியாகி எங்கள் மூச்சாகி நாளை
> முடிசூடும் தமிழ்மீது உறுதி
> விழிமூடி இங்கே துயில்கின்ற வேங்கை
> வீரர்கள் மீதிலும் உறுதி."

பாடல் தொடங்கவே நெஞ்சு பாரம் சுமக்கும்.
விழிநீர் சொரியச் சொரியப் பாடும் போது
நெஞ்சுக்குள்ளே கிளறும் உணர்வில் நெருப்பு மூளும்.
கல்லறையில் விழும் கண்ணீர்த்துளிகளால்
வெள்ளையடித்த சுண்ணாம்பு கரைந்தொழுகும்.
இது வீரவழிபாடு.
பழைய மரபொன்றின் புதிய வடிவம்.
வீரர்களைத் தெய்வங்களாக்கும் விதிமுறை.
ஈமத்தாழி ,
நடுகல் ,
வெறியாட்டு
இதுவே முதுதமிழர் காலத்து வழித்தடம்.
தீயிடும் ஆரிய மரபழித்து
மீண்டும் வேரிலிருந்து பூக்கிறது வீரப்பூ.
மாவீரர் நாள் .
செத்தபிணங்களுக்கு சாப்பிணங்கள் கதறுவதாய்

சித்தர்கள் பழித்துரைத்த திருநாளல்ல.
வல்லமையை எமக்கு வழங்குங்கள் என்று
கல்லறைக்கு முன்னே கைகூப்பும் நாளாகும்.
உங்கள் பணிமுடிக்க உள்ளோம் நாம் .
எனச் சொல்லி
பொங்கும் மனத்திடத்தைப் பெறுகின்ற நாளாகும்.
மாறாமனத்தை அருள்வீர் .
நீர் பெற்ற
மானத்துக்கான மரணத்தை எமக்களிப்பீர்.
என்றோர் வரம் கேட்க எழுகின்ற நாளாகும்.
இது அருச்சுனன் தபசு.
காண்டீப நாதத்துக்கான கடும் தவம்.
கார்த்திகை மாதம் கூத்திடும் காலம் .
ஊழிக்கூத்துக்கான ஒத்திகை.
உமக்கருகில் எமக்குமொரு குழி என
போருக்குப் போகின்ற புனித நாள்.
அடியே! கொற்றவைக் கிழவி !
ஆயிரம் யானைகளின் பலமளிப்பாய்.
எதிர் வரும் பகைரதங்கள் யாவும்
எம் மூச்சுப்பட்டழியும் வரமளிப்பாய்.
துயிலுமில்லக் கதவுகளே! திறந்தேயிருப்பீர்.
வெற்றிபெற்றுவந்து கல்லறைக்கு மாலையிடுவோம்.
இல்லையேல்
வித்துடலாய் வந்து உனக்குள்ளே காலைவிடுவோம்.

□□

ஐப்பசி ,கார்த்திகை 2001.





## இன்னும் மழையே
## துறவில்லை
## நீ ஒழுக்குச்சட்டிக்கு
## ஓடித்திரிகிறாய்.

மீண்டும் வெள்ளைப்பூ குடிகொண்டு
வீசுகிறது காற்று.
வானத்திலேறி வன்னிவரை வந்துபோகிறது
அலகில் 'ஒலிவ்' இலை தாங்கிய தூதுப்புறா.
சாளரங்களைத் திறக்கும் போதெல்லாம்
சந்தனம்பூசிய சமாதானம் வருகிறது.
இரவுமுழுவதும் கண்ணீர் வாழ்வு
கழிந்தது போன்ற கனவு.
நிவாரணவரிசையில் நின்றுகளைத்த கால்களுக்கு
கட்டாய ஓய்வென்ற சட்டமே வருகிறதாம்.
வார் அறுந்த செருப்பாய்க்
கிடக்கும் தெருக்களுக்கு
இனி தார்பூசப்படுமாம்.
கோயிலெங்கும் மகேஸ்வரபூசைக் கோலாகலம் .
ஆமிக்காரர்களுக்கும் சாமிகும்பிடும்
விடுமுறையாம்.
போராளிகளும் இனிப் பூப்பறிக்கப் போகலாம்.
நெரிஞ்சிப் பற்றைக்கு முள்ளகன்று போனதாம்.
சந்தோச மேகங்கள் தலைதடவிப் போகிறது.
ஆண்டவரே! இனியேனும் அமைதியைத் தாரும்
கூண்டுதிறந்து பறக்கும் குதுகலம் அருள்வீர்.

இனியாயினும் எமக்கு இரக்கமாயிருப்பீர்.
கண்டிவீதி ஏறிவரும் கனரக வாகனங்களில்
மாவும் சீனியுமாம்.
அட; கொக்காவிலில் பெற்றோல் செற்றாம்.
பங்குனிமாதம் மின்சாரமும்
சித்திரை மாதம் யாழ்தேவியும் வருகிறதாம்.
காவலரணிலிருக்கும் பிள்ளைகளுக்கு
புனர்வாழ்வு அமைச்சு புறியாணி அனுப்புமாம்.
இவைகளுக்குத்தானே போராடினோம்.
இனியென்ன ஆயுதங்களைக் கீழேவைத்துவிட்டு
அரிசி பருப்புவாங்க ஆயத்தமாகுவோம்.
துயிலுமில்லங்களில் இனிச் சோககீதமில்லை .
பாட்டும் கூத்துமாகப் பகலிரவு கழியும்.
போர்க்களப் புரவிகளை அவிழ்த்து விடுவோம்
எங்கேனும் போய்ப் புல்மேயட்டும்.
அட பைத்தியக்காரர்களே!
இத்தனை அவசரம் எதற்கு?
அஸ்ரா மாஜரினுக்காகவா
ஆரம்பித்த போராட்டமிது?
ஆவலாதிப் பேய்களாக ஏனிந்தப் பறந்தடிப்பு?
நிதானம் தளராமல் நினைத்துப் பார்.
முன்னைய அனுபவங்களில் முகம்கழுவிக் கொள்.
நல்லது நடக்குமென நம்புவோம்.
அதற்காக அவசரப்படல் ஆகாது.
வாசல் வரும் காற்றை வரவேற்பதென்பதும்
பாதம் கழுவுவதும் ஒன்றல்ல.
கவனம் மீண்டும்
கண்ணீரைக் குடிக்கவேண்டிவரும்.
விடுதலை பெறுவதென்பது
பேரம்பேசும் வியாபாரமல்ல......
அது எமக்குரிய இயல்பின் இருப்பு.
தானமாகத் தருவதற்கு
விடுதலை சாப்பாட்டுப் பார்சலல்ல.
தொடுத்த அம்புக்கேற்ற இலக்கும் ,
கொடுத்த விலைகளுக்கேற்ற தீர்வுமே
மேசைக்குப் போகும்போது முன்மொழிய வேண்டும்.
அலரிமாளிகையை நாங்கள்
கேட்கப்போவதில்லை.

"பெரகராவில் " ஊர்வலம் போகும்
பெரியயானையை
இரவலாகவும் நாங்கள் கேட்கப் போவதில்லை.
எமக்கான கூடு எமக்கு
இதைத் தவிர எமக்கு எதுவுமே வேண்டாம்.
ஆகாயம் பூச்சொரியும் அழகைப் பார்த்தபடி
தாயாளின் மடியுறங்கும் சந்தோசம் வேண்டும்.
மாரிமழையில் நனைந்தபடி எம் ஊரிற்திரியும்
மகிழ்வொன்றே போதும் நமக்கு.
குனியவும் நிமரவும் யாரும் கட்டளையிடாத
ஒரு வாழ்வுபோதும் நமக்கு.
தருவாரெனில் சந்தோசம்,
பாதிவழியில் பழையபடி முருங்கையேறில்
வேதாளம் பாதாளத்துக்குத்தான் போகும்.
சின்ன மாங்கனித் தீவை
பாதி பாதியெனப் பங்கிடுவதே நல்லது.
நீதியும் அதுதான்.
மேசையில் பேசி தீர்வென்ன வரும்?
சரி, பேச்சுவார்த்தையின் பின்னே
என்ன தருவார்கள்?
திம்புவில் தொடங்கி சுயாட்சிவரை போகுமா?
இது விட்டுக்கொடுக்கும் இறுதிவிடயமல்ல.
புள்ளியே இதிலிருந்தே ஆரம்பிக்கவேண்டும்.
சம்மதிக்குமா சிங்கள அரியணைகள்?
தமிழர் வந்தேறு குடிகளென வகைப்படுத்தி
சின்ன நெஞ்சிலேயே நஞ்சூட்டப்பட்டுள்ளது.
நூலின் நீளமறியாது
பட்டத்துக்கு வால் கட்டமுடியாது.
அடித்த நோவுக்கு எண்ணைபூசுவது
இருக்கட்டும்.
எமக்கு இனிமேல் அடிக்கமாட்டோமென்று
உத்தரவாதம் தரட்டும்.
தருவார்களா சங்கமித்தையின்
வெள்ளரசு விழுதுகள்.
இரத்தத்தில் விழுத்தும்
யுத்தத்தை விரட்டுவோம்.
யாருக்குத்தான் போரின்மீது காதல் வரும்?
சாந்தியும் சமாதானமுமே சந்தோசமானது.
போரில்லா உலகையே

நாமும் பெரிதும் விரும்புகின்றோம்.
எம்மை யுத்தத்துக்கு அழைத்தது யார்?
எம்மை ரத்தத்தில் கிடத்தியது யார்?
அல்லிவேர் கூட விடாது அறுத்தெடுத்தது யார்?
இன்று வெள்ளைக் கொடிபற்றி
விரிவுரை செய்பவர்கள்
கண்டிவீதி கற்பழிக்கப்பட்டபோது
கதைக்கவில்லையே.
"சத்ஜெய" கிளிநொச்சி புகுந்தபோது
இவர்கள் பேச்சிழந்து ஊமையாயிருந்தனர்.
சரி, ;பழையனகழித்து புதியன வகுப்போம்.
கடந்த காலத்தைக் கனவாய் மறந்து
வருங்காலத்தை வடம்பிடித்திழுக்க வருக.
வன்னி வரவேற்கக் காத்திருக்கிறது.
ஆத்மசுத்தியோடு மேசையில் அமருவோம்.
ஏமாற்றுவதற்கானது இந்த நாடகமெனில்
ஏமாறப் போவது நாமல்ல....
போரும்,பேச்சும் எமக்கு விடுதலைக்கானதே
பேசலாம் வருக.

□□

தை ,மாசி 2002.





# ஆசையில் மண்ணள்ளிப் போடாது மேசைக்கு வாருங்கள் பேசலாம்.

ஊரெல்லாம் ஒன்றாகி
உறவெல்லாம் ஒன்றாகி
உலகெல்லாம் ஒன்றாகி
உணர்வெல்லாம் ஒன்றாகிவிட்டது.
இனி எடுத்துவைக்கும் காலடி ஒவ்வொன்றும்
அர்த்தப்படும்.
கவனம் சறுக்கக்கூடாது கால்கள்.
உற்றுப் பார்த்தபடி கிடக்கிறது உலகம்.
கரைபுரண்டு வெள்ளம் பாயும் போதுதான்
ஆறு அவதானத்தோடு நகரவேண்டும்.
எல்லா வெள்ளத்தையும் ஏற்றபடி,
எல்லா அழுக்குகளையும் சுமந்தபடி
நடக்கவேண்டும் நதி .
கடல் முகத்தை முத்தமிடும் வரையும்
கங்கையின் வழியில் கலக்கம் கூடாது.
உழும்போதும், விதைக்கும் போதும்
வயலில் உற்சாகம் போதும்.
பயிர் வளரும் போது மழை போதும் .
கதிர்க்கும் போது காவல் போதும் .
அறுவடைநேரத்தில்தான் அவதானம் வேண்டும்.
எமக்கிப்போ அறுவடைக்காலம்.

ஊரே கூடி வயலில் நிற்கிறது
நெல்கொண்டு போகும்வரையும் நிதானம் வேண்டும்.
முற்றிக்கிடக்கும் வயலை
எவரும் எட்டிமிதிக்கக்கூடாது.
பயிரைத் தொடும் பக்குவம் வேண்டும் எமக்கு.
வியர்வைக்குரிய விளைச்சலைப் பெறுவதெனில்
உயர்வுக்குரிய உழைப்பு வேண்டும்.
"பதறாத காரியம் சிதறாது" இது பழமொழியல்ல
எமக்காகச் சொன்ன புதுமொழி.
எல்லோரும் இன்று ஒன்றானது போல்
எல்லோரும் சேர்ந்து வென்றாக வேண்டும்.
பற்றியெரிந்த காடுகள் இன்று பூப்பூக்கின்றன .
சுற்றியெங்கும் சுடர்கிறது அழகு.
வானமே வடிவு கொண்டிலங்குகிறது .
இந்தளவேனும் வந்ததேயென மகிழ
எந்த நம்பிக்கையும் இன்னும் நமக்கில்லை.
வானம் மப்பும் மந்தாரமுமாகக் கிடக்கிறது.
இன்னும் மழைபெய்யவில்லை மண்ணில்.
முகில்கள் கவிகின்றன ,
முழக்கம் கேட்கிறது .
சின்னக் கீற்றாக மின்னலும் வெட்டுகிறதேயன்றி
மண்ணில் ஒருசொட்டு மழையும் விழவில்லை .
கவனம் காற்றுவந்து முகிலைக் கலைத்துவிடலாம் .
நேற்றும் இதுதானே நடந்தது.
இந்தா மழையிறங்குமென எதிர்பார்த்தபோது
நம்பிக்கையில் இடிவிழுத்திப்போனது காற்று.
முகில்களை முந்தானையில் முடிந்தபடி
போனது அந்தப் பேய்க்காற்று.
இனியும் இது நடக்காதென்பதற்கு
என்ன உத்தரவாதம்?
அதிக நம்பிக்கைதான் ஆகப்பெரிய ஆபத்து .
எந்த அவசரமும் வேண்டாம் .
கண்ணிவெடி வயலில் நடக்கும்போது
கவனம் வேண்டும்.
இன்னும் அதிக எச்சரிக்கை வேண்டும்.
பீரங்கிகளுக்கு எதிராகப் போரிடுவது சுலபம்
அமுக்க வெடிகள்தான் ஆபத்தானவை.
"செம்மணி நாச்சியாருக்கு" திக்குத்திசை தெரியாது
அம்மணியை அடித்தே விழுத்தலாம்.

பேய்கள் பயங்கரமானவை எனினும்
அவைகளை அழித்துவிடலாம்.
பிசாசுகள் தான் பொல்லாதன .
நல்லதுபோல் நடித்து நாசம் செய்துவிடும்.
பாம்பென அடிக்கவும் முடியாது
கயிறெனக் கடக்கவும் முடியாது.
இது இரவும் பகலுமற்ற இரட்டைப்பொழுது.
மனதினை மயக்கும் மாலைப்பொழுது.
இரவையும் பகலையும் இனம்காணமுடியாது .
விளையாடவும் முடியாது ,
விளக்கேற்றவும் முடியாது .
நாங்கள் கேட்பது உரிமையன்றி பிச்சையல்ல.
உரிமை அரிசிக்காக உலைமூட்டியோர்
பிச்சை அரிசியில் பொங்கமாட்டார்கள்.
சமாதானத்துக்கானதல்ல விடுதலை .
விடுதலைக்கானதே சமாதானம் .
போர்நிறுத்தம் பேணப்படுவதால் மட்டும்
அமைதிவருமென அகராதியெதுவும் சொல்லவில்லை.
விடுதலை எட்டும்போதுதான் அமைதி விரியும் .
சலுகைகள் மட்டுமெனில் சண்டையே தொடரும்.
கொடுத்த விலைக்கீடாக கொள்ளவில்லையெனில்
படுத்துக்கிடப்பது பச்சைத்துரோகம்.
கல்லறைக் கோவில்களுக்கான காணிக்கை
வெல்வதில் மட்டுமல்ல .
வென்றுவரும் விடையத்தில்தான் இருக்கிறது.
எம்மிடம் விட்டுக்கொடுக்க எதுவுமில்லை
எல்லாவற்றையும்தானே எடுத்துவிட்டார்கள்.
கொட்டித்தருவதற்கு அவர்களிடம் குவிந்துகிடக்கிறது.
பறித்த அனைத்தையும் பார்வைக்கு வைக்கட்டும்.
எமக்குரியதை மட்டும் எடுத்துக்கொள்கிறோம்.
இந்த நிலம் முழுதும் எமக்காய் இருந்தது.
வேலியடைக்க வந்தவன் விளையாடி விட்டான்.
இப்போ கூலிக்கு வந்தவன் குடியிருக்கிறான்
உரிமைக்காரர் தெருவில் நிற்கிறோம்.
வழக்கிப்போ தீர்ப்புக்கு வந்துள்ளது.
முழுக்காணியையும் கேட்பது இனிமுறையில்லை .
பாதி பாதியாகப் பங்கிடுவதே தர்மம்.
நீதிபதி எழுதும் தீர்ப்பில்தான் நிரந்தர அமைதி.
துயிலுமில்ல வாசலில் வைத்து தீர்ப்பெழுதச் சொல்வோம்.

கொடுத்தவிலை அங்கேதானே கொட்டிக்கிடக்கிறது.
நியாயமும் தர்மமும் நிச்சயம் வெல்லும் .
இத்தனை நாள் அழுத அழுகைக்காயினும்
எமக்கினி வாழ்வு வரவேண்டும்.
வாசல் திறந்து எமக்கது வரும்.
சூரிய குடும்பமாய் சுழல்கின்றோம்.
ஆதவனுக்கு எந்த அவசரமும் கிடையாது .
விடுதலை ஒன்றேதான் வேதாபாராயணம்.
தளரா உறுதியுடன் தழைக்கிறது நம்பிக்கைச் செடி.
ஆடுகடிக்காமல் காவலிருக்கின்றோம்.
ஒருகை தட்டி ஓசையெழுப்ப முடியாது
இருகையும் தட்டப்படவேண்டும்.
இனவாத பேய்களுக்கு உருவேற்றுகின்றன.
முன்னைய சிவப்பு வேஷங்கள்.
பொங்குதமிழைப் பார்த்து பொறாமைப்படுகிறது
சிங்கள தேசத்து "உறுமிமேளம்" .
இத்தனையும் கடந்துதான்
நேசக்கரம் நீளவேண்டும்.
அவர்கள் உறுதியாய் உள்ளவரை
நாமும் ஒத்துழைப்போம்.
கொடுத்த வாக்குறுதிக்கு கெடுதல் வராது .
ஊசிமுனையில் நாட்களை நகர்த்துவதும் .
ஆசைவார்த்தைகளில் காலத்தை கழிப்பதும்
அவ்வளவு நல்லதல்ல .
நம்பிக்கைக்கான சமிக்கைகள் இனியும் வேண்டாம்.
எமக்குரியதுக்கான எல்லைகளைத் தீர்மானிப்போம்.
நல்ல நண்பர்களாக .
நல்ல அயலவராக .
ஒன்றெனில் ஓடிவரும் உறவினராக
அருகருகாய் குடியிருப்போம்.
ஆசையில் மண்ணள்ளிப் போடாமல்
மேசைக்கு வாருங்கள் பேசுவோம்.
கடைசி பஸ் புறப்படுகிறது
கை விட்டு விடாதீர்.





பங்குனி, சித்திரை 2002.

புதுவை இரத்தினதுரை



# விடுதலை பெறாது விழமாட்டோம், கொடுதலை என்னும் அழமாட்டோம்.

"வாழ்வு வசமாயிற்றென்று"
ஒருவன் பாடிப்போகிறான் தெருவில்.
"போடா போ பைத்தியக்காரா" என
குரல் வைக்கிறான் பதிலுக்கொருவன்.
இருதலைக் கொள்ளியாய் எம் தேசம்.
எதிர்த்திசை போகும் இருபடகுகளிலும்
ஒவ்வொரு கால்வைத்தேறிய ஒருவன்
கவடு கிழிய விழுந்தானாம் கடலில்.
வேகத்தில் சூல் கொண்ட புரிந்துணர்வுக்கு
சேடமிழுக்கிறது இப்போது.
நம்பிக்கைச் சமிக்ஞைகளின் நரம்பறுந்துபோகில்
கொப்பளிக்கும் கோபக்குருதி.
இன்னும் நம்பிக்கையிழக்கவில்லை
ஆயினும் வாய்நுரைதள்ளி
வலுவிழந்த மாடுகளல்ல நாம்.
உச்ச எதிர்பார்ப்பைப் பிச்செறிந்து
இடிவிழுத்தலாகாது நெஞ்சில்.
தீச்சுவாலை பரவியபோது நீர்பாய்ச்சி அணைத்து
நாம் நிமிர்ந்தபோது .
பேசுவோம் என்றீர் .
ஆம் என்றோம்.

புரிந்துணர்வு என்றீர்
ஆம் என்றோம் .
போர் நிறுத்தம் என்றீர்
ஆம் என்றோம் .
கண்காணிப்பென்றீர்
ஆம் என்றோம் .
ஆயுதமற்றே அரசியற்பணியென்றீர்
ஆம் என்றோம்.
அடையாளம் காட்டியே உலவென்றீர்
ஆம் என்றோம்.
இடைக்கால நிர்வாகமென்றீர்
ஆம் என்றோம்.
A9 தெருவால் போய்வரவா? என்றீர்
அதற்கும் ஆமென்றோம்.
நாங்கள் ஆமென்றதே அதிகம்.
எங்கள் உயிர்மையத்தில் கூட உலவ அனுமதித்தோம்.
ஆயினும் என்ன ஆச்சு?
வேர்கொள்ளவில்லையே எதுவும்.
வெய்யிலிற் கிடந்து விறகாகின்றன எல்லாமும்.
பேச்சும், வார்த்தையுமென எண்ணி
இன்னும் எத்தனை நாட்கள் உலையேற்றுவது?
பொங்குவது எப்போது?
பெருகுவது எப்போது?
புசிப்பதுதான் எப்போது?
ஊமைக்கனவோடு எத்தனை நாட்கள் உறங்குவது?
சந்திரிகாவுக்கு ரணில் மீது சந்தேகம் .
ரணிலுக்கோ சந்திரிகா மீது ஐயுறவு.
இவர்களைக் கண்டால் ஜே.விபிக்கு உறுத்தல்.
அஸ்கிரிய பீடத்துக்கு மல்வத்த மீது எரிச்சல்.
மல்வத்த பீடத்துக்கு அஸ்கிரிய மீது ஆத்திரம்.
உலங்கு வானூர்திக்கு வாடகை கொடுத்தே
நோர்வே நாடு நொந்து போகப்போகிறது.
பறந்து திரிந்தே பாதியுயிர் போய்விட்டது.
எல்லோருக்கும் உண்டசோறு செமிக்காத ஏவறை.
எங்களுக்கோ வயிற்றுக்கில்லாத கொட்டாவி.
என்ன செய்வது?
மாமியாரின் சேலை விலகினால்
கையாலும் காட்ட முடியாது
வாயாலும் சொல்ல முடியாது .

அதுபோல் அகப்பட்டுள்ளோம் நாம்.
பொய்யாய் இருப்பது பிழையென்றால்
உண்மையைச் சொன்னால் உதை விழுகிறதே.
சாமியாரின் பொறுமைக்கு ஒரு அளவுண்டு
சனங்களின் பொறுமைக்கும் அளவுண்டு.
வீட்டிலிருந்து வெந்த சோறுண்பதல்ல விடுதலை .
இது உயிர்களின் ஜீவராகம் .
மானுடப் பாடலின் மறுபெயர்.
தனக்கானதை தானே தெரிவு செய்வதே
சுதந்திரம் எனப்படும்.
மழையில் நனைவது போல்...
மண்ணில் நடப்பது போல்...
காற்றில் அளைவது போல்...
ஒரு சுகமான ஜீவிதம்.
நாமே நம்மை வனைந்தபடி
நாமே நமக்கானதை எடுத்தபடி
அசையும் ஒரு சுகம்.
வெறும் யாப்புகளின் வரைபடமல்ல விடுதலை.
வெளிநிரப்பிப்போகும் விடயமுமல்ல.
இது முகில்களைத் தொட்டுலவும் மிதப்பென
எவருக்கும் புரியவில்லையே ஏன்?
நாம் தமிழரென்பதால் போராடவில்லை
மனிதரென்பதாலுமே போராடுகின்றோம்.
அடக்க வந்தால்....
“வெள்ளை மாளிகை” அடிபணியுமா?
நெரிக்க வந்தால்....
“செங்கோட்டை” விழுந்து போகுமா?
பிடிக்க வந்தால்
“ஜெயவர்த்தனபுர” பேசாமலிருக்குமா?
பொங்கியெழுந்து போரிடுமல்லவா?
இதுபோலத்தான் நாமும்
எம்மை எவரும் இடிக்கக்கூடாது.
நிமிர்ந்த வாழ்வை நினைப்பது குற்றமல்லவே.
உலக மனச்சாட்சியின் கதவுகளே!
எமக்காகவும் கொஞ்சம் திறவுங்கள்.
மனிதாயுதம் தாங்கிய மகாபிரபுகளே!
எமக்காகவும் நாலுவார்த்தை பேசுங்கள்.
உலகாளும் எண்ணம் எமக்கில்லை.

எவருக்கும் நாங்கள் எதிரிகள் அல்லர்.
வன்னி நிலத்தின் வாசலில் நின்று
ஒன்றுரைப்போம்.
தினமும் வருகின்ற உதயத்தின் மீதும்,
திசைகள் அளந்து வரும் காற்றின்மீதும்,
பொன்னள்ளித்தூவும் நிலவின் மீதும்,
எம் பெருந்தலைவன் மீதும் ஆணையுரைப்போம்.
மண்ணில் நகரும் நதிகள் மீதும்,
மழை மீதும்,
கண்ணிற் தெரியும் காட்சிகள் மீதும்,
கல்லறைச் செல்வங்கள் மீதும் சபதமுரைப்போம்.
விடுதலை பெறாது விழமாட்டோம்
கொடுதலை எனினும் அழமாட்டோம்.
இன்னும் நம்பிக்கையிழக்கவில்லை நாம்.
நோர்வே தூதில் ஆர்வமிழக்கவில்லை.
சிங்கள தேசத்து ஒளித்தாரகைகளை
இருளகற்ற வருகவென
கரம் நீட்டிக் காத்திருக்கிறோம்.
இனி அவர்களின் கையிற்தான் எல்லாமும்.
காலத்தை இழுத்தடித்துக் கரைத்தபின்
எம்மைக் கைவிடுவீர்களாயின்
வாழ்வதற்காகப் போரிடுவதைத் தவிர
வேறு வழியென்னவுண்டு எமக்கு?
நல்லனவின் பக்கம் நடப்போம்
நாங்களும் நீங்களுமாக.

□□

ஆடி , ஆவணி 2002.





# கேட்கிறதா மணி?
# கேட்கிறதா பாடல்?
# தெரிகிறதா நெய் விளக்கு?

இது கார்த்திகை மாதம்
வேர்த்தறியாக் காலம்.
பச்சைத் தாவணி கட்டி
உச்ச அழகிற் கிடக்கிறது ஊர்கள்.
உறவுகளே! உங்களுக்கு என்ன மாதிரி?
பனியா? குளிரா?
மழையா? வெயிலா?
எதுவும் தெரியாது எமக்கு.
நலமெனும் ஒரு வார்த்தை
நமக்கது போதும்.
இது கார்த்திகை மாதம்.
உங்கள் தொட்டில் மீது
மாரிமழை பொழிகிறது.
வானக்கூரை பிய்ந்து
ஊர்முற்றம் மீது ஒழுக்கு.
இது வேர்களுக்கு விருந்துக்காலம்.
ஊறி நிலம் தெக்கி உஷணம் தொலைந்து போக
சாரல் மழையின் சந்தோசத்தில் சிறுவர்.
ஒழுங்கையெங்கும் வாரியடித்து ஓடுகிறது வெள்ளம்.
மணக்கோல மந்தாரத்தில் மரங்கள்.
கள்ளிச் செடிகூட காதலுக்கு ரெடியாக
கையில் கடிதம் வைத்திருக்கின்றது.

பூக்களைப்பற்றி பேசவே வேண்டாம்.
வாசலெங்கும் கண்ணெறிந்து கிடக்கின்றன.
நிறைமாதத் தாயாய் நிறைந்துள்ள குளங்களில்
கோவணமுமற்ற சிறுவர்கள் குதித்தெழும்புகின்றனர்.
ஆட்களைக் காணும்போது மட்டும்
ஆவரசம் பற்றைகள் ஆடைகளாகின்றன.
நீங்கள் விட்டுச் சென்ற இடைவெளியை
இன்று இவர்களே நிரப்புகின்றனர்.
காலங்களின் கால்களிற்தான் கடுகதி வேகம்.
எந்த மாற்றமும் இல்லை இப்போதும்.
நீங்கள் இல்லையே என்பதைத் தவிர
எல்லாமும் அப்படியேதான் இருக்கின்றன.
காற்றும்
மழையும்
நிலவும்
குளிரும்
வழமைபோல் வந்து போகின்றன .
வருகிறது கார்த்தகை இருபத்தேழு .
ராஜபுரவியேறிப் போர்க்களம் புகுந்து
ஆவி கொடுத்தோரை அழைக்கும் நாள்.
துயிலுமில்லம் சென்று தொட்டெழுப்பும் திருநாள் .
கல்லறையின் வாசற் கபாடம் திறக்கும் நாள் .
மெல்லொலியாய் உள்ளே மூச்சே கேட்கும் நாள் .
கார்த்திகை மாதத்து மழைத்தூற்றல்
இந்த நாளுக்கான கண்ணீர்தான்.
அழுக்கெல்லாம் கழுவி அள்ளிச் செல்லவே
வீதியெங்கும் வெள்ளம் பாய்கிறது .
கோடி மலர்கள் கார்த்திகையில் பூப்பது
வாடிவிழவல்ல.........
கல்லறைக்கென்றே செடிகள் கருத்தரிக்கின்றன.
தனக்குள் உறங்கும் சந்தனமேனி குளிரட்டுமென
நீரை உறிஞ்சிக் கொள்கிறது நிலம்.
கார்த்திகை இருபத்தேழு
கண்ணீர் நாளல்ல......
ஆயினும் நெஞ்சில் ஆயிரம் ஆணிகளேறுகின்றன.
சிலுவையில் அறைவதுபோல் தேகம் வலிக்கிறது.
விதையுண்டுபோன வீரப்பிள்ளைகளை எண்ணி
வதையுண்டு கிடக்கிறது வாசல்கள்.
மாலைபடும் வேளை சுடரும் நெய்விளக்கில்
காலையொன்று விடியும் காட்சி தெரிகின்றது.
யாருக்கென்றுதான் அழுவது?

எவருக்கென்றுதான் ஏற்றுவது சுடர்?
எந்தக் கல்லறைக்கு பூவாரியிறைப்பது?
வேரெல்லாம் ஒன்றான பின்னர்
கிளைகளுக்குள்ளே பேதங்களேது?
எல்லாக் கிளைகளும் எமது.
எல்லாப் பூக்களும் எமது.
எல்லாக் குழிகளும் எமது.
எல்லாப் பிள்ளைகளும் எமது.
கனவின் மொழியெடுத்தெழுதிய கவிதைகளுக்கு
அனற்சுடரேற்றி அஞ்சலிக்கிறோம்.
புயல் மரத்தில் பூத்த மலர்களின் மடியில்
விழி சொரியும் பூக்களை விழுத்துகிறோம்.
எம்மண்ணிலும் இத்தனை வீரமா?
எம் சந்ததியின் கையிலும் இத்தனை சகஜமா?
கோழி திருகக்கூட குடல் நடுங்கிய பரம்பரைக்குள்
ஊழிப் பெருந்தீயாய் இவர்கள் எப்படி உருவானார்?
திண்ணையில் ஏறிய அட்டையைத் தட்டக்கூட
அண்ணனைக் கூப்பிட்ட தங்கைகளிலிருந்து
அங்கயற்கண்ணிகள் அணிவகுத்தது எப்படி?
ஆறு மணிக்குப் பின்னர் அடி வளவுக்குப் போகவே
தாயைத் துணைக்கழைத்த தலைமுறை
வேள்வி நடக்கும் கோவில்களின்
வீதிக்கே போகாத பரம்பரை
விழுந்து கிடக்கும் பகை மிதித்து முன்னேறுகிறது.
வீரம் விளைந்து விட்டால்
சாவு சர்க்கரையாகி விடுகிறது.
அடங்கிக் கிடக்க ஒப்புவதில்லை அனற்சுடர்.
காங்கை நெருப்பு கண்மூடிக்கிடக்காது.
ஏங்கி தவிக்காது இடர்பட்ட நெஞ்சு.
பட்டத்து யானைப் பவனிக்கனவில்
இந்த ராஜா புதல்வர்கள் போர்க்களம் போகவில்லை.
திக்கெட்டும் உலாவந்து ஜொலித்து,
பகைத்தேரின் சக்கரங்களை முறித்து
சமர்க்களம் நின்றாடிச் சாய்ந்தோரிவர்.
பெருவலிக் கரமேந்திய வாளுடன்
செருக்களமாடிய சிம்மவாகினிகள்.
நெஞ்சில் கனல் மூண்டு விழிதிறந்தால்
விடுதலைக்கானதைத் தேடி விரையும்.
விரையும் வழியில் வெல்லும்
வெல்லும் போதில் விழுந்துபோகும்.
விழுந்து போனோரின் "விதைகுழிப் பெருநாள்" தான்

மாவீரர் நாள்.
கார்த்திகை இருபத்தேழு.
காவற் தெய்வங்களின் காணிக்கைத் திருநாள்.
ஊர்திரண்டு ஒப்பாரி வைப்பதில்லை
உருக்கொண்டாடி உறுதியெடுத்துக் கொள்கிறது.
தீயிடும் ஆரிய மரபழித்த
நடுகல் வழிபாடிது.
தமிழரின் பழைய மரபு புதுப்பிக்கப்படுகிறது.
ஈமத் தாழியும்,
நடுகல்லும்,
வெறியாட்டுமே நமக்கிருந்த வழிபாடு.
வெற்றிவீரர்கள் வீரத்தெய்வங்களாயினர்.
இவர்கள் கற்பனையற்ற கடவுளர்.
பகைவரும் திசைபார்த்து
எல்லைப்புறங்களில் இவர்களுக்கு கோயிலிருந்தது.
சாவடைந்த பின்பும்
இவர்களுக்கோர் சக்தியிருந்தது.




வீரமாதேவியின் விழிகள் திறந்தேயிருந்தன.
இன்றும் நிலத்தில் விதைக்கின்றோம்.
எங்கள் நிர்மல ரூபங்களை.
இது விடுதலைக்கான விதைப்பு.
கட்டறுப்புக்கான விலைகொடுப்பு.
உழவும், விதைப்பும்,
நாளை நமக்கெனவாகும் அறுவடைக்கானது.
நம்பிக்கையின் ஒளித்திசையில் பயணம்.
இது கார்த்திகை மாதம்.
ஊர் முற்றமெங்கும் ஒளி வெள்ளம்.
சுடரேற்றித் தொழுகின்றோம்.
பாட்டோடு சேர்ந்த பரவசம்.
உறவுகளே!
கேட்கிறதா கோயில் மணி?
கேட்கிறதா நெஞ்சுருக்கும் பாடல்?
தெரிகிறதா சுடரும் நெய்விளக்கு?

□□

புரட்டாதி, ஐப்பசி 2002.

புதுவை இரத்தினதுரை



# சிறகெடுக்க ஒரு வெளியும் நடந்துலவ ஒரு வழியும்

பகலானதும் அவிச்சல்
இரவானதும் இதமான காற்று
அதிகாலையில் மிதமான பனியின் தூவல்.
போர்நிறுத்தமென்பதால்
ஊர்முற்றம் கொஞ்சம் உறங்கிக் கிடக்கிறது.
புயலடித்துச் சரிந்த மரங்களும்
நெருப்பெரிந்து கருகிய கொடிகளும்
இப்போ பூக்கத் தொடங்கியுள்ளது.
உப்பட்டி முலைகள் ஆங்காங்கே நிமிர
அறுவடை முடிந்த வயல்களும்
அம்மணமாய் கிடக்கின்றன.
வண்ண வண்ணக் குருவிகள் வந்திருந்து
பின்வளவு மரங்களில் "கிண்ணரம்" வாசிக்கின்றன.
வன்னியை எட்டிப் பார்க்காத வசந்தக் காற்று
என்னமாய் வீசுகின்றது இப்போது.
ஒட்டுப்போட்ட சைக்கில்கள் உலவிய தெருவில்
பட்டுமேனிக் கார்கள் பவனி வருகின்றன.
எங்கள் பிள்ளைகளுக்கு இலவசக் கண்காட்சி.
வாயைப் பிளந்தபடி வடிவு பார்க்கின்றனர்.
குண்டு விமானங்களின் இரைச்சல் தொலைந்ததால்
தொட்டில்கள் தூங்க மறுக்கின்றன.
"எங்கேயம்மா கிபிர்" என்ற கேள்விக்கு

வருமெனும் தாயாரின் வார்த்தையிற்தான்
எத்தனை நம்பிக்கை சுடர்கிறது.
இரவெல்லாம் விழித்திருந்து இரங்கும்
சிவராத்திரியும் வந்து போனது.
இம்முறை ஓட்டுசுட்டான் சிவனாருக்கும்
சங்காபிஷேகம் நடந்தது.
தீப ஒளியில் ஜொலித்தார் ஆலகண்டர்.
வன்னிக்கு எப்படி இத்தனை வாழ்வு?
என்ன நடந்ததென இத்தனை மிதப்பு?
இன்னும் ஜோச்புஷ்சும், வாஜ்பாயும் வரவில்லை.
மற்ற எல்லோரும் வந்து போகிறார்கள்.
அடைகாக்க முடியாத அளவுக்கு
மடி நிறைய முட்டைகள்.
குஞ்சாகுமோ? கூழாகுமோ? என்பதே கேள்வி.
வலசைபோகும் சமாதான பறவைகள் சில
எங்கள் களங்கண்டிக் கம்புகளில் களைப்பாறுகின்றன.
இலவச இணைப்பாக ஜெகஜோதிக் கலகலப்பு.
நந்திக் கடலுக்கு மட்டும் நம்பிக்கையில்லை.
நடக்கட்டும் கூத்து என்பதாய்
சின்னச் சிரிப்புதிர்த்துக் கிடக்கிறது ஜீவமடி.
வற்றாப்பளைக் கிழவி வாசற்படியிறங்கி
சுற்றியொரு பார்வை பார்த்துவிட்டு
பொய்யமைதி என்றாளாம் நேற்று.
சிலம்பிரண்டும் கலீர், கலீரென
கண்ணாத்தாள் காவலிருக்கிறாள் நமக்கு.
உலைமுகத்தின் நெருப்பவிந்து போகாமல்
ஊதிக்கொண்டிருக்கின்றோம் இன்றும்.
காலமகள் வன்னியைக் காதலிக்கத் தொடங்கியதால்
ஆலவிஷமணியும் அனற் குஞ்சுகளுக்கு ஓய்வு..
உரத்த குரலெடுத்து ஒன்றுரைப்போம்.
எமக்குச் சிறகெடுத்தெழ ஒரு வெளி வேண்டும்
கால்கள் நடந்துலவ ஒரு வழி வேண்டும்
கைகளை விரித்தபடி காற்றிலேறிப் பறக்க
வானமொன்று வசமாக வேண்டும்.
நாமே நமது வாழ்வைத் தீர்மானித்தபடி
போவோம் வருவோம்.
நாமே எமது இயல்பை எழுதியபடி
எழுவோம் இருப்போம்
எம் விழிகளுக்கு முன்னே சுவரிருத்தலாகாது.

பார்வைபடும் தூரம்வரை நடப்போம்.
எவரும் ஏனெனக் கேட்கக்கூடாது.
எம் கால்களில் விலங்குகள் இருக்கக்கூடாது.
எமக்குரிய திசையில் நடப்போம்.
எங்கே பயணமென கேட்கலாகாது.
எமக்கான பாடலை நாமே பாடுவோம்.
உரத்துப்பாடாதேயென உத்தரவு கூடாது.
தமிழர் இளிச்சவாயரெனும் தாழ்நிலையகன்று
உயர்ந்தோரெனும் நிலை வேண்டும்.
எமக்கு மேலே ஒருவரிலர்.
எமக்குக் கீழேயும் எவருமிலர்.
காலில் மிதிபடும் புழுவாய்,
கையில் நசிபடும் பூச்சியாய்,
இருக்க ஒப்பாது எம்மனசு.
இனியும் " உபமனிதராய் " உயிர்வாழ முடியாது.
எம்முற்றம் வந்தமர்ந்து தீனிபொறுக்கும்
மணிப்புறா எத்தனை மகிழ்ச்சிகொண்டு உலவுகின்றது.
விடிகாலை கூவும் சேவலின் குரலில்
எத்தனை கம்பீரம்.
அத்தனை ராஜகம்பீரம் யார் தருவார்?
அவர் வருக.
அவருடன் பேசுவதில் ஆட்சேபனை இல்லை.
எட்டும்வரை சூரியனைத் தொடும் நினைவில்
உயர்ந்தெழும் எம் கரங்கள்.
விடுதலையென்பது வேலியிடும் காரியமல்ல.
வெறும் மொழிக்கான சமாச்சாரமுமில்லை.
அது உயிரிழைத்துப் பாடும் உன்னதம்.
கானடா ராகத்தின் கச்சிதம்.
குருதியிலும் சதைத் துணிக்கைகளிலும்
உயிரறுக்கும் வலிக்குரலிலும்
எமக்கு நாட்டமில்லை.
குழிதோண்டி விதைத்த கொடுப்பனவு போதும்.
கல்லறை வரிசைகள் விரவிய வயல்கள்
நெஞ்சு தீப்பிடித்தெரிய நீள்கிறது.
வேண்டாமிந்த வினை விளையாட்டு.
யாரேனும் வந்து கைபிடித்து விடுங்கள்.
அருகருகாய் அமரச் செய்யுங்கள்.
பேச்சிலிருந்தும் புலரலாம் புதிய வைகறை.
இத்தனை தூரம் இறங்கிவருவது கூட
இயலாமையென எவரும் எண்ணக்கூடாது.

போர்க்களப் புரவிகள் புல்மேய்கின்றனவே தவிர
பணிமுடிந்ததென வண்டியிழுக்கப் போகவில்லை.
கடிவாளத்தையும் சேணத்தையும் தளர்த்தி
கொஞ்சம் காலாற விட்டுள்ளோம்.
ராஜரதங்களின் சக்கரங்கள் துருப்பிடிக்கவில்லை.
தேவகுமாரர்கள் செப்பனிடுகின்றனர்.
வாளையும் வேல்க்கம்பையும் வீசவில்லை.
உலைமுகத்தில் உருக்கேற்றுகிறோம்.
போரெனில் போர்.
பேச்சுவார்த்தையெனில் பேச்சுவார்த்தை.
அன்று அவர்கள் கூறிய தொனியில்
இன்று எமதுகுரல் எழுகிறது.
எந்த வழியெனினும் எமக்குவேண்டும் விடுதலை.
தருவதாயின் ஏற்றுக்கொள்வோம்.
வழியெதுவென அவர்கள் தீர்மானிக்கட்டும்.
கொடுத்த விலைக்கீடாகத் தட்டிலிருக்கவேண்டும்.
தராசுமுனை சரியக்கூடாது.
படலை திறந்துபோன பந்தங்களே
உடலை உங்கு வைத்திருங்கள்.
உமக்கான வாழ்வின் பிரமாண்டம்
நிர்மாணிக்கப்படுகிறது.
உம் பிள்ளைகளுக்கான உல்லாச ஊஞ்சல்
இங்கே ஆலமரங்களில் ஆடுகிறது.
உங்கள் நாளைய வாழ்வுக்கான மையப்புள்ளி
உயரமான இடத்தில் பவுத்திரப்படுத்தப்படுகிறது.
மயக்கங்கள் ஏதுமற்ற மனவெளி மனிதராய்
இருக்கிறோம் நாம்.
இருப்பீர் நீங்களும்.
சொந்தங்கள் சந்திக்கும் திருநாளுக்காக
கோபுரமணிகள் அசைகின்றன.
கண்டங்களையும், கடல்களையும் கடந்து
காதில் விழுகிறதா காண்டாமணிச் சத்தம்?



□□

கார்த்திகை, 2002.



# பூச்சூடியதற்கு பெருமைப்படு முடிசூடுவதற்கு முன்னேறு

புத்தாடை புனைந்துள்ளாய்
மெத்த மகிழ்ச்சி.
அச்சா அழகுடையாய் நீ.
செம்புழுதியேறிய தலை கழுவி
வகிடெடுத்து வாரியுள்ளாய்.
கன காலத்தின் பின்னே வந்த கச்சிதம்.
நீ எழிலாய் இருப்பதில் எனக்கு வருத்தமில்லை.
தன் மகவு அழகாய் இருப்பதையிட்டு
எந்தத் தாய்குத்தான் எரிச்சல் வரும்?
ஆயினும் ஒரு ஆதங்கம்.
தலை வாரி பூச்சூடியுள்ளாய் எனினும்
மணி முடி இல்லையே.
உன் தலை மகுடத்துக்குரியதன்றோ.
எங்கே முடி?
கொற்றக் குடையின் கீழல்லவா நீ குடியிருக்கவேண்டியவன்
எங்கே குடை?
சிம்மாசனத்திலல்லவா சிரித்திருக்க வேண்டும் நீ
எங்கே ஆசனம்?
ஒன்றும் கிட்டவில்லையே உனக்கு.
எதுவும் கிடைக்கவில்லையே இன்னும்.
புழுதித் தலை கழுவிப் பூச் சூடியதும்

வாழ்வு சித்தித்ததென
வாசம் பூசியுள்ளாய்.
ஆகாது பிள்ளாய்.
அவசரப்பட்டு ஆடிவிழக்கூடாது.
நின்று நிதானித்து
கொஞ்சம் திரும்பிப் பார்.
நீண்ட தூரத்துக்கு விழியெறிந்து
பின்னே பார் எல்லாம் புலனாகும்.
எத்தனையை இழந்து இத்தனை வந்தது?
வந்ததும் வாழ்வுதானா என்று நெஞ்சைக் கேள் சொல்லும்.
அந்தோ பார் நீ விதைத்த வயலில்
கண் படும் தூரம்வரையும் கல்லறைப்பயிர்.
இந்தோ இடியுண்ட நகரமும், கிராமங்களும்
இடிபாடுகளுக்கிடையேதான் இன்றும் உறவுகள்.
முன்னே பொய்க்காலுடன் ஒருவன் போகிறானே
அவனுன் தோழன்.
இரண்டு கையுமற்ற ஒருத்தி வருகிறாளே
அவளுன் தோழி.
பக்கத்தே தோல்சுற்றிய எழும்புக்கூடாய்
எந்த மலர்ச்சியும் இல்லாத மக்கள்.
இத்தனையும் போரினாற்தானே என்று
நீ சொல்லிப் போகலாம்.
இல்லையடா.
இது விடுதலைக்கு நாம் கொடுத்த விலை.
படுக்கைப் புண்ணுடன் எம் தெருக்கள்.
நடக்க முடியவில்லை அதன்மேலே.
பாலுக்கழுகின்றனர் பாலகர்கள்.
பார்க்கச் சகிக்கவில்லையே.
ஒட்ட இறைத்த கிணறு ஊறவில்லை.
ஏதேனும் மாற்றம் தெரிகிறதா எம்மில்?
கைவிட்டுப்போனவர்கள் வந்து
காணி வாங்குகின்றனர்.
விலகி இருந்தவர்கள் வந்து வீடு கட்டுகின்றனர்.
எமக்கொன்றும் கைசேரலையே பிள்ளாய்.
நீ தலை வாரியுள்ளாய் அவ்வளவே.
அதற்கே இத்தனை ஆனந்தமா உனக்கு?
உலகம் வல்லவர் கையில் உருள்கிறது.
அவர்கள் எப்போதும் கெட்டிக்காரர்கள்.
தங்களுக்குத் தேவையெனில்

தலை வாரச் சீப்புத் தருவார்கள்.
பளபளப்பான பவுடர் தருவார்கள்.
வடிவுக்குரியன தந்து வசமாக்கி விடுவர்.
U.N.O தொடக்கம்
U.S.A வரையும் இதுதான் மரபு.
நீ நீயாக நிமிர நிச்சயம் விடமாட்டார்.
அலங்கார கண்ணாடி முன்னே
மயங்க மாட்டாய் என்பது தெரியும்.
ஆயினும் கலக்கமாக இருக்கிறது எனக்கு.
வாழ்வை பறித்தவர்களுடன் கைகுலுக்கி
பேசுவது பிழையில்லை.
பேச்சுவார்த்தை மூலமும்
பிறக்கலாம் புதிய ஒளி.
சாட்சிகள் அதற்கு உண்டு.
பிரம்மஞானியும்
அருகருகாய் உள்ள தளபதிகளும்
வென்று வர வேண்டுமென விரும்புவோம்.
அவர்கள் விடிவு கொண்டு வரலாம்.
விடிவு கொண்டு வராவிட்டாலும்
ஒரு முடிவு கொண்டு வருவார்கள்.
அப்போது அந்த முடிவிலிருந்து முளைக்க வேண்டும்.
தயாராக இருப்பதே அதற்குரிய தகுதி.
தலைவன் எடுக்கின்ற எந்த முடிவுக்கும்
தோள் கொடுக்கச் சூடாக இருப்போம்.
சூரியன் சுட்டும் திசையில்
சுட்டெரிக்கச் சூடாக இருப்போம்.
தளர்வின்றி இருப்பதே வளரும்.
சோர்ந்து போனால் நூர்ந்து போகும்.
போரெனினும்,
அமைதியெனினும்,
தன்னிலை இழத்தல் தகுதியல்ல.
கொஞ்சம் நிதானித்து நின்று பார்.
'சுதந்திரத்துக்கு நாம் கொடுத்த விலை' என
சுட்டிக்காட்ட சுவடேதும் உண்டா எம்மிடம்?
A9 தெருவுக்கு எத்தனை பேரை இழந்தோம்.
அட ஆனையிறவுக்கு எத்தனை ஆயிரம் பேர்?
இன்றிந்த இடங்களில் ஏதேனும் இருக்கிறதா?
வருவோர்க்குத் தெரியுமா இதன் வரலாறு?

சந்தைக்கு வருகின்றனர் எல்லோரும்.
நாங்கள் சாமான் நிறுத்துக் கொண்டிருக்கின்றோம்.
"முடிந்து போனது" என்ற முஸ்பாத்தி பலருக்கு.
உனக்கும் அதுவென்றால் எப்படி உருப்படுவாய்.
புயலும் மழையும் அடித்த புதுக்காட்டில்
இன்று ஒளியும் இருளும் கலந்த வைகறை.
விடிவிலிருந்து புலரலாம் ஒரு பொழுது.
தேவதைகள் வரம்தர மறுத்தால்
மீண்டும் புயலும் மழையுமென்றாகலாம்.
"பட்டு வேட்டிக்கனவிலிருந்தால்
கட்டிய கோவணத்தை உருவிவிடுவார்கள்"
கவனம்.
விடுதலை ஒன்றே விரிவானம்.
சிட்டுக்குருவியாய் சிறகடிக்க வேண்டும்.
சுதந்திரமொன்றே சுடர்நெருப்பு.
உலையேற்றி விருந்துண்ண வேண்டும்.
தமிழரென இருப்போம்.
தாரக மந்திரத்தை உச்சரிப்போம்.

கொடுத்த விலையை குறித்துக் கொள்வோம்.
மலைவரினும் தலைசுமக்கும் துணிவில்
பேச்சுக்குப் போனவர் திரும்பும் வரை
சோதிப்பிளம்பாகத் தோன்றுவோம்.
விடிவோ ஒரு முடிவோ வரும் வரை
காத்திருப்பதில் எந்தக் களங்கமுமில்லை.
தலைமை தளராது.
உன் நிலைமையை நிறுத்துக் கொள்.
அவர்கள் ஆமென்றால்
அணைத்துக் கொள்வோம்.
இல்லையெனில் இடித்துக் கொள்வோம்.
"யாதும் ஊரே யாவரும் கேளீர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா"

□□

தை, மாசி, 2003.



# காலத்தைத் தவறவிட்டால் கண்டவனெல்லாம் கதவுதட்டுவான்

குயிற்பாட்டு உன்முற்றம் பரவுமென
செவி நீட்டிக் காத்திரு.
சாவு வந்துன் கதவு தட்டும் வரை
இளவேனில் காற்றுக்கு காத்திரு.
புயல் வந்து முகத்தில் அறையும் வரை
முன்னே மத்தாப்பு விரிவதைப் பார்த்திரு.
பின்னே உன்னைப் புதைக்க
குழி வெட்டும் வரை.
வானவில்லை வடிவு பார்.
அவர்களுன்னை அம்மணமாக்கும் வரை.
சமாதான யாகத்துக்கு தீயா வளர்க்கிறாய்?
சந்தனப் புகை மூக்கு நுளைந்து
மூச்சுத் திணறப் போகுது பார்.
சமாதானப் பாடல் சந்தோசமானதுதான்.
இசையமைத்தவன் யாரெனத் தெரியும் வரை.
அமைதிப் பாடல் ஆனந்தமானது.
எவரும் பாடலாம்.
எல்லோரும் உச்சரிக்கலாம்.
வாய்பொத்த எவரும் வரமாட்டார்.
பலஸ்தீனத்திலும் முன்னரிந்தப் பாடல் கேட்டது.
எத்தனை காலம் நீடித்தது?
ஆப்கான் மண்ணிலும் இப்பாடலே பரவியது.

என்ன நடந்தது?
ஈராக்கிலும் இதே பாடலைப் பாடியபடிதான்
குண்டு போட்டன விமானங்கள்.
வானத்திலெழுந்த பாடல் பூமிக்கு வரமுன்
எண்ணைக் கிணறுகள் உறுஞ்சப்படுகின்றன.
பாடலுக்குப் பதிலாக இப்போ ஒப்பாரி.
வாசலெங்கும் காவலரண்.
அடங்க மறுத்து நிமிரும் போதெல்லாம்
காற்றின் திசையெங்கும் சமாதானப்பாடல்.
ஆக்கிரமிப்பாளரின் கையிற்தான் அமைதிப் பாடல்.
அது மனதை வருடிச் செல்லும்.
வசமிழக்கச் செய்யும்.
கேட்பவர் கிறு கிறுத்துப் போவர்.
வித்தியாசமானது இந்த வெண்புறாப் பாடல்.
தேவையெனில் போடுவர்.
அலுவல் முடிந்ததும் நிறுத்துவர்.
மற்றவர் தாளம் போடவேண்டும்.
சமாதானப் பாடல் இதமானது.
அற்புதமானதும் கூட.
போரென்றால் தானே பொல்லாப்பு
சமாதானம் பாடுவதில் சங்கடமில்லை.
பாடுங்கள்.
எல்லோரும் பாடுங்கள்.
பாடுங்கடா டேய்.
பாடித் தொலையுங்கடா.
காடு வெட்டிக் கலைத்தவன் பற்றி
கவலை எதற்கு?
வீடு கட்டவும் விறகுக்கெரிக்கவும்
வேண்டிய மரங்கள் கிடைத்தன.
அவரவர் அகப்பட்டதைச் சுருட்டிக்கொண்டு
வெட்டியவனையும் மிதித்துக் கொண்டு
வீடு செல்லுங்கள்.
இப்போது இதுதானே நடக்கிறது.
நட்ட மரத்தில் சின்ன அரும்பு கட்டியதும்
பழம் தின்னும் கனவிலா படுத்திருக்கின்றாய்.
சின்ன இளசுகளைப் புதைத்த இடத்தில்
இன்னும் புல்கூட முளைக்கவில்லை.
எந்த நோவுமறியாதவரெல்லாம்
சமாதானம் பாடச் சபையேறியுள்ளனர்.
இறுக மூடிய கதவுக்குப் பின்னே

ஏழு வருடங்கள் இருந்தாய்.
எவர் உனக்காகப் பேசினர்?
எவர் உனக்கேதும் வீசினர்?
எவர் வந்துன்னை ஆற்றினர்?
தொட்டுத் தழுவ வேண்டாம்.
எட்டிப் பார்த்தார்களா எவரும்?
இன்று வந்து குவிகின்றனர் வாசலுக்கு.
நீ செங்கம்பளம் விரித்து மகிழ்கிறாய்.
போர் நிறுத்தமென்றதும் வந்து போகின்றவரின்
வேர்களை அறிந்து கொள்.
எல்லோர் முகத்தின் பின்னும் இன்னொரு முகம்
ஏஜண்டின் பாடலைப் பாடியபடி
வியாபாரிகள் வீதியில் இறங்கியுள்ளனர்.
எவரையும் இனம் காண்பதில்
கொஞ்சம் அவகாசம் எடுத்துக்கொள்.
விதானையும், வீடு கொளுத்தியவனும்
ஒரே மாதிரி இருந்தால்
சாட்சி சொல்பவனுக்கு சங்கடம் வரும்.
நீ காலத்தை கைதவற விடும்போது
கண்டவனெல்லாம் கதவைத் தட்டுவான்.
இப்போது இது தானே நடக்கிறது.
ராஜதந்திர மென்பது
தொடங்கிய இடத்திற்கே திரும்புதல் அல்ல.
அடங்கிப் போவதிலும் பார்க்க
அழிந்து போவது மேலானது.
வழுக்கி விழுந்தவர்கள்
விழுந்ததுக்கு வியாக்கியானம் சொல்லலாம்.
எழுந்திருக்க முடியாதது தான் இழிவு.
உலகம் உன்பக்கம் வருமென நம்பாதே.
பூமியென்றும் பலவானின் பக்கம் தான்.
அரசுகள் எல்லாமே ஒரே அச்சில் வார்த்தவை.
பெரிய மாற்றங்களேதும் கிடையாது.
அடக்குமுறையாளரே
அரசமைக்கும் வல்லமை பெறுகின்றனர்.
விடுதலையை அவர்களிடம் எதிர்பார்க்காதே.
தருவதற்கல்ல அவர்கள் சமாதானம் பாடுவது.
கரையச் செய்தபின்
உன்னைக் கடித்துத் தின்பதற்கு.
முந்தானையைச் சரியவிட்டு
மேனகைகள் திரியும் காலம்

கவனம்.
ஆணழகன் போல அலிகள் திரிகின்றனர்.
யாரும் மயங்கி விடாதீர்.
நெருப்பாற்றைக் கடந்து விட்டது
தப்புத் தண்ணீரிலா தள்ளாடுவது?
தீச்சுவாலையையே தின்று செமித்தவனே
பேச்சுவாத்தையின் போது
போர்த்துக் கிடப்பதேன்?
எந்தத் தேவதூதரையும் எதிர்பாராது
நீயே எழு.
நீயே நட.
வல்லமையை வளர்த்துக்கொள்.
அப்பத்தை பங்கிட்டுக்கொள்.
குரங்கை நீதிபதியாக்கியோரின்
முன்னுதாரணங்கள் எச்சரிக்கின்றன.
கவனத்துக்கு எடுத்துக்கொள்.
இன்னும் காலம் கடந்துவிடவில்லை
நம்பிக்கையுடன் நாட்களை எடு.
உன் வம்சபூமி வணங்கா மண்ணடா.
நந்திக்கடல் வற்றாதிருக்கும் வரை
பாலியாற்றுப் படுக்கையில் நீர்சுரக்கும் வரை
ஐமுனா ஏரியில் நீர்நிறையும் வரை
உன் நாடி நரம்பின் சூடாறாது.
விடுதலை நெருப்பை நெஞ்சில் மூட்டி
காங்கைச் சுடரெனக் காட்சி தருவாய்.
நீ சோதிப்பிளம்பாய் தோன்றும் வரை
உன்னைப் போரிலும் வாதிலும்
எவனடா ஜெயிக்கக் கூடும்?
கைக்கு வரும் காலத்துக்குக் காத்திராதே.
உனக்கான காலத்தை வனைந்தபடி.

□□

*பங்குனி, சித்திரை 2003.*





“புதுவை இரத்தினதுரையின்
படைப்பிலக்கியம், தமிழீழ
விடுதலைப் போராட்டத்திற்கு
ஒரு உந்துசக்தியாக இருக்கிறது.
கவிதை உலகில் போர்க்கால
இலக்கியத்திற்கு இலக்கணம்
வகுத்துக் கொடுத்த பெருமை
அவரைச் சாரும்.”

தமிழீழ தேசியத்தலைவர்
திரு.வே.பிரபாகரன்